உ

கடவுள் துணை

வல்லூர் - தேவராஜ பிள்ளையவர்கள்

இயற்றிய

# குசேலோபாக்கியானம்

மூலமும்

திரு. வி. உலகநாத முதலியார் அவர்கள்

இயற்றிய

## அரும்பதவுரையும்

மூன்றாம் பதிப்பு

முருகவேள் புத்தகசாலை,

இராயப்பேட்டை,

சென்னை.

1938



[விலை ரூ. 1-4.

# முகவுரை

குசேலோபாக்கியாநம் என்பதற்குக் குசேல முனிவரது சரிதத்தைக் கூறும் நூல் என்பது பொருளாம். அது குசேல+உபாக்கியாநம் எனப் பிரியும். குசேலன்=பொலிவில்லாத ஆடையைத் தரித்தோன். இதனை இந்நூலிற் குசேலர் மேல்கடலடைந்த அத்தியாயம் ருகூ-வது செய்யுளிற் காணலாம். உபாக்கியாநம் என்பது கிளைக்கதை என்று பொருள்படும். பாகவதத்துள் ஸ்ரீ கண்ணபிரானது திவ்விய வைபவங்களைக் கூறும் தசமஸ்கந்தத்தின் நடுவண் நிலவுவது இச்சரித்திரம். இது இற்றைக்குச் சுமார் சகஉ-வருடங்கட்கு முன்னிருந்த வேப்பத்தூர் சங்கவித்துவான்களுள் ஒருவரான ஆரியப்பப்புலவரால் செந்தமிழ்க் காப்பியமாக மொழி பெயர்க்கப்பட்டுள்ள பாகவதத்தின் கண் சுருங்கி நிலவுதற்கண்டு, பக்தி வைராக்கிய மோக்ஷசாதனங்களை விளங்க உரைப்பான் வேண்டி, தொண்டை நாட்டிலே, வல்லூரென்னு மூரிலே, கருணீகர் குலத்திலே, வீராசாமிப்பிள்ளை யென்பவரது புத்திரராய்த் தோன்றிய தேவராஜபிள்ளை யென்னும் வித்வ சிகாமணி, ஆரியப்பப் புலவர் இயற்றிய பாகவதத்திலுள்ள குசேல சரிதத்தையும், ஆந்திர பாஷையில் வரகவி யென்பார் இயற்றியுள்ள குசேலோபாக்கியாநத்தையும் தழுவி, தமிழில் அலங்கார மென்னும் சொற்சுவையும், நவரசமென்னும் பொருட்சுவையும் ததும்ப, எளஙூ-திரு விருத்தங்களாற் குசேலோபாக்கியாநம் எனப் பெயர்தந்து பாடியருளினர். இந்நூலின் காலம் இற்றைக்குச் சுமார் அஎ-வருடங்கட்கு மேலாகுமென்பது இந்நூலின் பாயிரத்திலுள்ள "வராரும்.......... மகிழ்ந்தே" என்னும் செய்யுளால் காணப்படுகிறது. இந்நூலாசிரியரது நற்குண நற்செய்கைகள், கல்வித்திறன், இந்நூலின் பெருமை முதலியவற்றை, இவரது இயற்றமிழ் ஆசிரியர் மகாவித்துவ சிரோமணி திரிசிரபுரம் - மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்கள் கூறிய சிறப்புப் பாயிரத்தில் காணலாம். இதில் புறநானூறு, கலித்தொகை, புறப்

பொருள் வெண்பாமாலை, சீவகசிந்தாமணி, திருக்குறள், நாலடியார் முதலிய நூல்களின் சொற்றொடர்ப் பிரயோகமும், சிவதருமோத்தர முதலிய சாஸ்திரங்களின் கருத்துக்களும் ஆங்காங்கு மலிந்து கிடக்கின்றன. இந்நூலாராய்ச்சியால் எவ்வளவு வறுமை வந்தகாலத்தும் மனைவி தன் கணவனை வெறுத்தல் கூடாதென்பதும், தரித்திரத்தின் கொடுமை யின்னதென்பதும், செல்வம் வந்துற்றபோது கடவுளிடத்து அன்புண்டாதல் அரிதினுமரிதாமென்பதும், அவ்வாறு அன்பில்லாதொழுகும் நாள் நன்னாளாகாதென்பதும், பயனை விரும்பாது செய்யும் பக்தி முத்திக்கு வித்தாகுமென்பதும், பெருஞ் செல்வராயிருப்பினும் நல்லறிவாளர் தமது நிலையினின்றும் பிறழாரென்பதும், பிறவும் செவ்வனே அறிந்துகொள்ளலாம்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த இந்நூலுக்கு எழுதப்பட்டுள்ள அரும்பதவுரையில் குறைகள் காணப்படினும் சொன்னயமுணர்ந்த நன்னயப் புலவர்கள் அன்னம்போற் கொள்வார்களாக.

திரு. வி. உ.



# குசேலமுனிவர் சரித்திரச்சுருக்கம்

உலகிற் சிறந்த உத்தரமதுரைக் கணித்தாய் அவந்தி என்றொரு அணிநக ருளது. அந்நகர் விளங்க அந்தணர்குலத்திற் றோன்றிய சுதாமா என்னும் இயற்பெயர்கொண்ட குசேல முனிவர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பிரமசரியம் என்னும் மேலான நிலையை மேற்கொண்டொழுகி, சாந்தீப முனிவர்பாற் சென்று அவருக்குரிய தொண்டு செய்து, ஸ்ரீகண்ணபிரானோடு தாமும் கல்வி பயின்று வேத முதலிய சகல கலைகளினும் வல்லாராயினர். பின்னர்க் கடிமணப் பருவம் வர, தமது ஆசிரியர் உத்தரவு பெற்று, சுசீலா அல்லது க்ஷுத்க்ஷாமா என்னும் பெயரிய ஒரு கன்னிகையைமணம்புரிந்தனர். அந்நாள்முதல் தமது மனைவியோடு அன்புடனிருந்து, அந்நகரை யடுத்த வனத்திலே சாந்திராயண முதலிய அரிய விரதங்களை அனுட்டித்து வந்தபோது, அச் சுதாமா என்னும் குசேலருக்கு இருபத்தேழ் புத்திரர் உதித்தனர். அதனால் மிகவும் கொடிதான வறுமை மேலிட்டது. குசேலர் அவ்வறுமையி லுழன்றும் ஒருவரிடஞ்சென்று இரத்தல் இழிதொழிலெனக் கருதி, அவ்வனத்திலேயே மிகவும் முயன்று பெறும் நீவாரப்புல்லின் தானியங்களைக் கொண்டு அதிதிகளுக்கிட்டுப் பிள்ளைகளுந் தாமுமுண்டு, எப்பொருளினும் பற்றின்றி, நாராயணனையே மனதில் அனுதினமும் சிந்தித்து வருவாராயினர்.

இங்ஙன மிருக்குநாளில் இவரது அருந்தவ மனைவியாங் கற்புக்கரசியார் தமது குழந்தைகள் பசிநோயாற்படும் வருத்தங்கண்டு பொறுதவளாய் மனம்வருந்தி ஒருநாள் கணவனை வணங்கி, "எனது தலைவரே! நமது குழந்தைகள் பசியினாற் படும்பாட்டைத் தாங்கள் கண்ணுற்றும் அதற்கு ஒரு வழியும் தேடாது இருக்குஞ்செயல் யாதோ? மக்களது பசியைப் போக்கவேண்டியது தந்தையின்கடமையன்றோ? ஆதலால், தேவரீருடன் பள்ளியிற் பயின்று செல்வத்தில் மிகுந்து வாழும் ஸ்ரீகண்ணபிரானை யடைந்தாயினும் இக்கொடிய வறுமையை நீக்கிக்கொள்ள முயலவேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர். அது கேட்ட குசேலர் தம்மனைவிக்குச் செல்வ நிலையாமை முதலிய பலவித நியாயங்களை எடுத்துப் புகட்டினர். குசேலர் செல்வ நிலையாமையைப்பற்றி மனைவிக்குப் போதித்தாராயினும், அச் செல்வத்தை யடையவே முயலவேண்டி நேரிட்டமையால் ஒருநாள் மனைவியையழைத்து, "பெண்ணே! ஸ்ரீகோபாலனிடத்திற் சென்று

இவ்வறுமையைப் போக்கிக்கொள்ள மனங்கொண்டுள்ளேன். கடவுள், ஆசிரியர், அரசர் முதலியோரிடம் ஏதேனும் கையுறை கொண்டு போதலே விதியாகும். ஆகையால் அக்கருணாநிதி யிடத்திற்கும் இயன்றவற்றைக் கொண்டே செல்லல் வேண்டும்'' என்று கூறினர்: உடனே அவரது அருமை மனைவியார் தமதெண்ணம் நிறைவேறியதென்று களிப்படைந்து, குசேலர் முயன்று பெற்றுவந்து கொடுக்கும் நீவாரப்புல்லின் தானியத்தில் அன்றுமுதற் றொடங்கி, தனக்குரிய பாகத்தைச் சின்னாள் சேர்த்து வந்து, அதை ஒரு நாள் நறுமணங் கமழப் பதமுற வறுத்து, வெண்மையாக முறிவின்றி யிடித்து, இனிக் கிழிதற்கிடமில்லாதிருக்கும் கந்தையின் ஒரு நுனியை இரண்டு மூன்று மடிப்பாக மடித்து, அதில் தாம் அன்புடன் பதஞ்செய்த அவலை முடிந்து நாயகன் கரத்திற் கொடுத்து வணங்கி நின்றனர்.

நாயகியாராலளிக்கப்பெற்ற அவல்மூட்டையை முனிவர்பெருமான் கக்கத்திற்கொண்டு, சிலநாள் உணவில்லாமல் விரைந்து நடந்து மேலைச் சமுத்திரதீரத்தை யடைந்தார். அவ்விடத்திருந்த ஒரு மீகாமனை முனிவர் கண்டு, அவன் உளங் களிகொள்ள இனியமொழிகள் பல புகன்று, அவனது பேருதவியாற் கப்பலேறித் துவாரகை சேர்ந்து, அரசர்பலர் சூழ்ந்திருக்கும் அரண்மனை வாயிலையடைந்து, தமது வரவை வாயிற் காவலருக்குத் தெரிவித்தார். அவருட் சிலர் மிகவும் இரக்கங்கொண்டு ஸ்ரீகோபாலனிடம் சென்று வணங்கி, குசேலமுனிவரது வரவை விண்ணப்பித்தனர். அதுகேட்ட துவாரகாபுரிவாசர் மனமகிழ்ந்து ''அப்பெரியாரை அழைத்து வருக'' என்று கட்டளையிட்டார். உடனே காவலர்கள் அப்பெருமான் கொண்ட அன்பின் மிகுதியைத் தெரிவித்து, குசேலரை அந்தப்புரத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு அவர் வரவை எதிர்நோக்கியிருந்த அக்கோபாலர் எழுந்து எதிர்வந்து பலமுறை வணங்கிப் பலவாறு புகழ்ந்து ஆசனத் தமர்த்தி, அருக்கிய பாத்தியாசமன தூபதீபாதிகளால் வழிபாடு செய்து, சிற்றுண்டிகளோடு திருவமுதுசெய்வித்துப் பஞ்சணையிலே யெழுந்தருளச்செய்து, அவரது பாதங்களை வருடிக் கொண்டிருந்தனர். அதுகாலை அவர் குசேலரது மனைவி மைந்தர்களது யோகக்ஷேமங்களையும், தாங்கள் கல்விபயின்ற அந்நாளில் குருபணியில் ஒற்றுமை கொண்டிருந்த பெருமைகளையும் சம்பாஷித்துக்கொண்டு மிருந்தனர். பின்னர், ஸ்ரீகண்ணபிரான் குசேலரை நோக்கி, ''அன்புடையீர்! எனக்கு யாதுபக்ஷணங்கொண்டு வந்தீர்'' என்று கேட்டு, அவரது மனக்குறிப்பை யுணர்ந்துகொண்டு

அவர் கக்கத்திலிருந்த அவல்முட்டையைப்பெற்று, அதை அவிழ்த்து, ஒரு பிடியவலை யெடுத்து, நண்பராய குசேல முனிவருக்குப் பெருஞ் செல்வம் உண்டாகுமாறு, அவ்வவலின் சுவையை வியந்துகொண்டே உலகமுண்ட திருவாயால் உண்டருளி, அன்றிரவு அவரைப் பஞ்சணையிலே துயிலச் செய்தனர்.

மறுநாட் காலையில், குசேலர் நித்திரை விட்டெழுந்து, நித்தியானுட்டானங்களை முடித்துக் கொண்டு, அப்பரந்தாமனிடத்துத் தாம் யாதொன்றும் வேண்டிக் கொள்ளாது விடை பெற்று அரிதிற் பிரிந்து திரும்பினர். வழிநடந்து வரும்போதே, தமது திருமேனியிலே ஒரு திவ்விய காந்தியும், இரத்தினகுண்டல கடக மோதிரங்களும், விலை யுயர்ந்த பீதாம்பரங்களும் தெய்வத் திருவருளால் விளங்கக் கண்டு ஆச்சரிய மடைந்து, "இது உலகமுண்ட உத்தமன்றன் திருவருட் செயல்போலும்!" என அக மகிழ்ந்து, அங்கங்குள்ள அரசர் முதலியோர் எதிர்கொண்டு வணங்க, ஒரு புதிய தேரின் மீதேறி, விருதுகள் புடைசூழ்ந்துவரத் தந்நகரை யடைந்தார். இதற்கு முன்னமே அக்கிருஷ்ணமூர்த்தியி னருளால் இல்லத்தில் அஷ்ட ஐசுவரியங்களும் அதிகரிக்கப் பெற்றுக் களிப்படைந்து நாயகன் வரவை எதிர்நோக்கி யிருக்கும் மனைவியும் மைந்தர்களும் நகரத்தாரும் எதிர்கொண்டு வணங்கி மங்கல வாழ்த்தெடுக்க, குசேலர் தமதில்ல மடைந்தார். பிறகு முனிவர் அங்கு நிறைந்துள்ள வளனைக் கண்டு "புருஷோத்தமனது கருணை இருந்தவாறென்னே" என வியந்து புகழ்ந்து அந்த ஐசுவரியங்களை அனுபவித்துக் கொண்டிருந்தனர்.

அந்நாளில் ஒருநாள் குசேல முனிவர் ஒரு தனியிடத் திருந்து கொண்டு, நாம் முன்புரிந்த தவநிலைகளுக்கு மாறாக இப்போது நம்மைப் பந்தித்து நிற்கும் இச்செல்வங்கள் நிலையில்லாதன வெனவும், இவற்றினிடத்து வெறுப்படைந்தாலன்றி அப்பரமனடியை அடைய முடியாதெனவும், அங்ஙனம் உள்ளம் துறத்தற்கு அக்கடவுளைத் தியானித்தலே நன்னெறி எனவும் எண்ணித் துணிவடைந்து, அக்கிருபாநிதியின் லீலாவைபவங்களைப் பலவகைப்பட எடுத்துப் புகழ்ந்து துதித்தனர். அங்ஙனம் தோத்திரஞ்செய்யும் குசேல முனிவரின் அன்பிற் கிரங்கி ஸ்ரீ பரந்தாமன் தரிசனந் தந்து கட்டளையிட்டவாறே முனிவரும் சின்னாள் உலகில் வாழ்ந்திருந்து, பின்னர் தேவர்களெல்லாம் மலர் மாரி பொழியத் திருவைகுண்ட மெய்தி, அவண் ஸ்ரீதரனது திவ்விய மங்கள உருவம் பெற்று விளங்கி யிருந்தனர்.



திரிசிரபுரம் மஹா வித்வான்

ஸ்ரீலஸ்ரீ - மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்

---

நேரிசையாசிரியப்பா

பூமலி குளிர்தெண் புனற்பெருந் தடத்துக்
கவையடிச் செங்கட் கனல்பிணர் மருப்புக்
கடமருள் செருத்தற் கவரிதளை பரிந்து
புழற்கா லாம்பற் பூநனி மிசைவான்
றோறொறு தாட்பைஞ் சூட்டன மிரிய
மடச்செழு நாரை வயிறெனப் பிளிறக்
கயலின மடவார் கண்ணிற் பிறழச்
சலஞ்சலப் புஞ்சந் தளைபுக் கொளிப்ப
முட்டாட் டாமரை மொய்த்தடை கிடக்கு
மகஞ்சிறைத் தும்பி யகன்குலைப் பரப்பிற்
றேங்கமழ் பொங்கர்ச் செறிந்திறை கொள்ள
மாங்கனிக் கொள்ளை வரம்பில வுதிரக்
குறுங்கழுத் தரம்பைக் கூன்குலை முறிய
முட்புறப் பாகன் முதிர்கனி கிழியச்
செறிபசுங் கந்திச் செம்பழஞ் சிதறப்
பொலியிலாங் கலிமுப் புடைக்காய் வீழ
வெழுபுமீத் தகட்டகட் டிளவரால் பாயக்
கருங்கடற் பாயுங் கந்தர நிகர்ப்பக்
கதழ்விற் பாய்ந்து கலக்குபு ழிதந்து
கதிரிளம் பசும்புற் கறிக்கக் கல்லா
மழவிளங் கன்றைப் படர்ந்துவார்ந் தொழுகப்
பொழிபால் பெருகிப் புணர்திரைத் தீம்பால்
ஆழிகொ லோவென் றமரரு மயிர்ப்ப
மடையுடைத் தோடும் வரையாப் பெருவள
நல்லூ ரென்னும் வல்லூ ரதிபன்
பார்கரு ணீப்பப் பயில்குல மென்னுஞ்
சீர்கரு ணீகர் செழுங்குல சிகாமணி
மின்னப் பேந்திய வேணியற் கன்புறு
மன்னப் பேந்திரன் வரத்தினி லுதித்தோன்

இமையவர் தருவு மிமையாச் சுரபியுங்
கமஞ்சூன் முகிலுங் கதிர்கா னணியும்
அருநிதி யிரண்டு மழுக்கா றடையப்
பெருங்கொடை யெவர்க்குந் தருங்கர வள்ளல்
ஒழுக்கமுஞ் சீலமும் விழுப்பெறு தவமு
மாறு வன்பு மானமும் பொறையு
நாடொறு நாடொறு நலம்பெற வளர்ப்போன்
நீணிறஞ் சேரா நெடுமால் போல்வான்
நுண்ணறி வுடையோர் நூற்பொருள் விரும்புந்
தண்ணளி யிராம சாமிக் குரிசில்
தன்னுடை யரும்பெறற் றமய னாகிய
தழைபுகழ் வீராச் சாமி மகிபன்
உஞற்றிய தவத்தா னுதயஞ் செய்த
தேவ ராசச் செவ்வே ளென்பான்
நற்குணம் பொறுமை ஞான வொழுக்கங்
குறையா தமைந்த நிறைவு பூண்டு
தொல்காப் பியமுதற் றென்றிலக் கணமு
முன்னுமைங் காப்பிய முதலிலக் கியமும்
பற்பல சமய ரற்புறு நூலும்
மற்றுள கலைகளுங் கற்றினி துணர்ந்து
மிகுவட நூலுளும் வேண்டிய தெரிந்து
சோதிட நூலுந் துரிசற வோர்ந்து
பிறங்குறு மறிவிற் பெரியோ னாகி
வண்புகழ்க் குசேல மாதவன் சரிதையைத்
தமிழிற் பாடத் தானவா தறிந்து
தன்னவைக் களத்து மன்னுற வழைத்துத்
தொக்கள வில்லார் சூழ விருப்ப
விரித்துரைக் கென்று விருப்பிற் கேட்டுக்
கவிதொறுங் கிடக்குங் கற்பனை வியப்புஞ்
சொல்லுடை மாண்புந் தொகுபொருண் மாண்பும்
மற்றுள சிறப்பும் வகைப்பட வாராய்ந்
தற்புத மற்புத மென்றக மகிழ்ந்து
விரிகடல் சூழ்புவி விளங்கப்
பரிவுட னச்சிற் பதிப்பித் தனனே.



## இந்நூலிலுள்ள அரிய விடயங்களின்

# அட்டவணை

**மு - இ - மூ - என்பன அத்தியாயங்களையும், எண்கள் செய்யுள்களையும் உணர்த்தும்.**

உ

கடவுள் துணை

கமலக்கண்ணன் கழலடிபோற்றி

# குசேலோபாக்கியாநம்

## பாயிரம்

காப்பு

கடலுடைப் புவிவா ழுயிரெலாங் களிக்கக் காத்தருள் கண்ணனோ டருநூல், அடலுறப் பயின்று பின்னவ னருளா லருந்திருப் பெறுகுசே லன்றன், மிடலுடைக் காதை விளம்பிட வூறு விரவிடா தளித்தருள் புரியும், மடலுடைக் கடுக்கைச் சடைமுடிக் கபோல மதக்கய மழவிளங் கன்றே. (௧)

## கடவுள் வாழ்த்து

குடத்தியர் துகிலைக் கவர்ந்தவன் முனிவர் கோதையர் மூரல் பண்ணியங்கள், இடக்களித் துண்டோ னிந்திர னேவ எழிலிகள்

௧. கடல் உடை புவி - சமுத்திரத்தைச் சுற்றிலுமுடைய உலகத்திலே. அருள் கண்ணன்—வினைத்தொகை. அடல் உற - உறுதியாக; திடமாக. திரு - செல்வத்தை. பெறு குசேலன்—வினைத்தொகை. குசேலன் - கிழிந்த ஆடையை யுடையவன் (கு - குற்சிதமான; பொலிவில்லாத; கிழிந்த; சேலன் - ஆடையை யுடையவன்) மிடல் உடை காதை - சிறப்பினையுடைய கதையை. ஊறு - இடையூறு; முட்டு. விரவிடாது - நேரிடாமல்; கலவாமல். மடல் உடை கடுக்கை - இதழ்களையுடைய கொன்றைப் பூமாலையைத் தரித்த. கபோல மதம் - கவுள்மதம் (மதம் மூன்று:—கன்னமதம், கரமதம், பீசமதம். கவுள் - யானை மதம்பாயுமிடம்; கதுப்பு) மழ இளமை கயம் கன்று - மிக இளைய யானைக்கன்றாகிய விநாயகக் கடவுள். மழ இளமை - ஒரு பொருட் பன்மொழி. "மழவுங் குழவு மிளமைப் பொருள" தொல்காப்பியம். (கஜம், கயம் = யானை).

உ. குடத்தியர் துகிலை - ஆய்ச்சியர் (இடைச்சியர்) களுடைய ஆடைகளை. முனிவர் கோதையர் - முனிவர்கள் மனைவிமார்கள் (வைத்திருந்த). மூரல் - அன்னத்தையும். பண்ணியங்கள் - பலகாரங்களையும். எழிலிகள் - மேகங்கள்.

பொழிந்தகன் மழையைத், தடப்பெருங் கோவர்த் தனங்கரத் தேந்தித் தடுத்தவன் கமலைவாழ் மார்பன், வடப்பசுந் தளிரி னினிதுறை கண்ணன் மலர்தலை யுலகெலாங் காக்க. (உ)

வேய்ங்குழ லிசையாம் வலியமந் திரத்தின் மேன்மைசால் யாதவர் குலத்துப், பூங்குழன் மடவார் தம்மைத்தன் வசமாப் புரிந்துவே ணூற்படி கலவி, ஆங்கவர் பாற்பன் னாளியற் றியசீ ராழியங் கரதலக் கொண்டல், வாங்குநீர்ப் பரவை யுலகுயிர்க் கென்றும் வழங்குக திருவொடா யுளுமே. (ங)

மலர்விழித் தேவ கிக்குநன் மகனாய் மகிதலத் தவதரித் ததன்பின்,பலர்புகழ்ந் தேத்து நந்தகோ பாலன் பனிமதி யானன வசோதை, அலர்மனங் களிப்ப வாடுறாஉம் பால னாகிய வையனே நன்னா, வலர் பரா வுறப்பல் வளங்களு முயிர்க்கு வழங்கியாண் டருள்செய்வனன்றே. (ச)

குடம்புரை செருத்தற் கோவுமந் தணருங் குறைவறு சுபம்பெற வென்றும், இடங்கொள்பல் லுலகு மிகுசுக முறுக வென்றுமா ரியருமோ னியருந், திடம்பட வெண்ணு மெண்புரந் திடுக திரைக்

---

தடம் - விசாலமான. கோவர்த்தனம் - கோவர்த்தனகிரி. கமலை - இலக்குமி. பசுமை வடதளிரின் இனிது உறை - பசிய ஆல இலைமீது இனிதாக உறங்கும். இனிது உறங்கலாவது யோகநித்திரை (அறிதுயில்) செய்வது. மலர்தலை - பரந்த இடத்தையுடைய.

ங. வேய்ங்குழல் - மூங்கிற்குழல் ; புல்லாங்குழல். சால் - மிகுந்த. பூங்குழல் மடவார் தம்மை - பூமாலை சூடிய கூந்தலையுடைய மாதர்களை. வேள்நூல்படி - கொக்கோக நூல் முறைப்படி (வேள் - மன்மதன். கொக்கோக நூல் செய்தவர். கொக்கோகமுனிவர்.) கலவி - புணர்ச்சி. பன்னாள் - பலநாள். ஆழி - சக்கரமேந்திய. அம் கரதலம் - அழகிய கரத்தினையுடைய. கொண்டல் - மேக நிறத்தனாகிய ஸ்ரீ கிருஷ்ணன். (கொண்டல்—உவமாகுபெயர்). வாங்கு நீர் பரவை - வளைந்த அலைகளையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த. திருவொடு - செல்வத்தோடு.

ச. மலர் விழி - தாமரைப்பூப் போன்ற கண்களையுடைய. மகிதலத்து - உலகத்திலே. பனி மதி ஆனனம் - குளிர்ந்த சந்திரனையொத்த முகத்தையுடைய. நாவலர் - நாவில்வல்ல புலவர்கள். பராவுற - துதிசெய்ய.

ரு. குடம் புரை செருத்தல் கோவும் - குடத்தையொத்த மடியையுடைய பசுக்களும். அந்தணர் - பிராமணர் ; ஆரியர் ; குருமார். மோனியர் - மௌனிகள். எண் - எண்ணங்கள். புரந்திடுக - காத்திடுக. திரை கடல் - அலைகளை

கடல் கிழியமத் தெறிந்து, மடம்படு மவுணர்ச் சவட்டியெபாள் ளமுதம் வானவர்க் கூட்டிய முதலே. (௫)

வேறு

விரும்பும் யாம்வணங் கும்பதக் கடவுளே விளங்குமா வினை மிக்க, பெரும்பு கழ்ச்சிசான் மறையவர் குழாத்தினைப் பேணுக வெனவேதம், அரும்பும் வாக்கிய முந்தொழி லாறினோ றறையுமா சிகளோங்கிப், பரம்ப வெண்ணுறாஉம் பெரியவ ரெண்ணும் பாலிக்க நெடுமாலே. (௬)

மேற்படி வேறு

இளமழக் கன்றை யூட்டி யெஞ்சிய தீம்பால் வெள்ளம்
வளமலி கான வைப்பு மருதவைப் பாகப் பெய்யுந்
தளர்வறு செருத்த லாக்கள் தங்குரச் செந்தூள் குஞ்சி
அளவற வடைந்து சேப்ப வவற்றினைப் புரந்தோன் வாழ்க. (எ)

வேறு

இமைத்தலில் விண்ணோர் மடந்தையர் சமழ்ப்ப இலங்குறு மிளநல வெழிலார், அமைத்தட மென்றோ ளாய்ச்சியர் விழியா மம்புயத் தேமலர் மலரச், சமைத்தபூண் மார்பன் தேவகி யீன்ற தநயன்போ

---

யுடைய திருப்பாற்கடல். மத்து - மந்தரமலை. மடம்படு - அறியாமை பொருந்திய. அவுணர் - இராட்சதர்களை. சவட்டி - அழித்து.

௬. பதம் - ஸ்ரீ பாதங்களையுடைய. சால் - சிறந்த. மறையவர் - பிராமணர். குழாத்தினை - கூட்டத்தினை. பேணுக - பாதுகாக்க. அரும்பும் - சொல்லும். தொழில் ஆறினோர் - வேதியர். (அறுதொழில்:—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்) அறையும் - சொல்லும். பரம்ப - பரவ. பாலிக்க - காத்தருள்க; கிருபைசெய்க. நெடுமாலே - நாராயண மூர்த்தியே.

எ. இள மழ கன்றை - மிக இளங்கன்றுகளை. எஞ்சிய - மிகுதியாயுள்ள. தீம்பால் - இனியபால். வளமலி - வளம் நிறைந்த. கான வைப்பு - முல்லை நிலம்; காடு. மருதவைப்பு - வயல். செருத்தல் ஆக்கள் - மடியையுடைய பசுக்கள். குரம் செந்தூள் - குளம்புகளாற் கிளம்புஞ் செந்தூள். குஞ்சி - தலைமயிர். சேப்ப - சிவக்க.

அ. மடந்தையர் - மாதர்கள்' சமழ்ப்ப - நாண. எழில் - அழகு. ஆர் - பொருந்திய. அமை - மூங்கிலைப்போன்ற. தடம் - விசாலமான. ஆய்ச்சியர் - இடைச்சியர். தேம் - வாசனை; தேன் எனினுமாம். அம்புயம் - தாமரை. சமைத்தபூண் - செய்யப்பட்ட ஆபரணங்களை. அணிந்த பூண் சூரியனாக உவமிக்கப்பட்டுளது. தநயன் - புத்திரன். போர் ஏற்ற வன்மை மல்லை குமைத்

ரேற்றவன் மல்லைக், குமைத்தருள் கண்ணன் பேசருஞ் சீரிக் குரைகட லுலகின்வா ழியவே. (அ)

வேறு

தாவகிச் சிரத்தினிற் சரணம்வைத் தாடினோன்
பூவகிற் கரும்புகை போர்த்த பொற்குழன்
மாவகிர்க் கருங்கண்வேய் வாட்டுந் தோட்டுணைத்
தேவகி தநயனைச் சிந்தை செய்குவாம். (௯)

வேறு

ஏழிரண் டென்னும் புவனங்காத் தளிப்போ னெழில்வசு தேவன்றன் மைந்தன், வீழியங் கனிவாய்க் கொடியழன் மகட்கு மென்றுகி லளித்தபைங் கொண்டல், தாழிருங் கூந்தற் பூதனை யுயிரைச் சவட்டினோன் தவாநல முண்டோன், பாழியம் புயத்துச் சேதிபற் றுணித்த பண்ணவன் மலரடி பணிவாம். (௧0)

வேறு

மாதவர் பன்னியர் மனமென் றுமைப்
போதகத் தனமெனப் பொலிந்த மாண்பினான்
ஆதவர் கோடிய ரழுங்கு காந்தியான்
பாததா மரைமலர் பணிந்து போற்றுவாம். (௧௧)

---

தருள் - யுத்தத்திலெதிர்த்த வலிய மல்லர்களைக் கொன்றருளிய. குரை - சப்திக்கின்ற.

௯. தாவு அகி சிரத்தினில் - படமெடுத்தாடுகின்ற பாம்பின் தலைமீது. (பாம்பு - காளியன்). சரண்வைத்து ஆடினோன் - ஸ்ரீ பாதங்களை வைத்துத் திருக்கூத்தாடினவனும். அகில்கரும் புகை போர்த்த - அகிற்கட்டையின் கரும்புகையானது மூடிய. பொற்குழல் - அழகிய கூந்தல் (மாதர்கள் தங்கள் கூந்தலுக்கு வாசனையேற்ற அகிற்புகையூட்டுவது இயல்பு) மாவகிர் - மாவடு வகிர்போன்ற. வகிர் - பிளவு. வேய் - மூங்கிலை. வாட்டும் - வருத்தும். துணை தோள் - இருதோள். தநயனை - புத்திரனை.

௧0. அழல்மகட்கு - திரௌபதிக்கு. மென்மைதுகில் அளித்த - மெல்லிய ஆடையளித்து மானங்காத்த. சவட்டினோன் - கொன்றவன். தாவாநலம் என்பது தவாநலம் எனக்குறுகிற்று. (தாவ + அநலம்) காட்டுத்தீ. கண்ண பிரான் தாம் பசுமேய்த்திருந்த காட்டில் எழுந்த காட்டுத்தீயையுண்டு இடையர்களைக் காத்தருளினார் என்பது. பாழி - பெருமை. சேதிபன் - சேதிதேய மன்னன்; சிசுபாலன்.

௧௧. பன்னியர் - மனைவியருடைய. தாமரைப்போது அகத்து - தாமரைப் பூவினிடத்தில். அனம் - அன்னம். ஆதவர் - சூரியர். அழுங்கு - வருந்துகின்ற.

### வேறு

ஆர்ந்ததழ லிறைக்குமதிற் புரத்தரசு கரக்கொடிகட் கரிவா ளாகிக்
கூர்ந்தமதி யிலாக்கஞ்சன் றூசுகொடு வருமீரங் கொல்லி வாழ்நாள்
தீர்ந்திடச்செய் விதியாகிக் கற்றாக்கட் குரிஞ்சுசெறி தறியு மாகி
வார்ந்தகுழ லாய்ச்சியர்க்கோர் வேளாகி நின்றானை வழுத்தல்செய்வாம்.

### வித்தியாகுரு வணக்கம்

சீராருந் திரிசிரா மலையின்வளர்ந் தெக்கா லுஞ் சிறப்பி னோங்கும்
ஏராருங் கலைக்கடன்முற் றுண்டாங்கு நின்றெழீஇ யென்வி வேக
வாராருந் தடநிரம்ப மனப்பரம்பி னினியதமிழ் மாரி பெய்த
பேராரு மீனாட்சி சுந்தரதே சிகமுகிலைப் பேணி வாழ்வாம். (கங)

### வேறு

சிவபரஞ் சுடரி னிணையடி மலரைத் திரிகர ணத்தினும் வழாது
பவமறத் தினமும் வழிபடு குணாளன் பகர்திரி சிரபுரத் தலைவன்
சிவமுறு தென்சொ லைந்திலக் கணத்திற் றெளிவுறச்சிறியனேற் கருளு
நவமுறு புகழ்மீ னாட்சிசுந் தரவே ணாண்மல ரடிமுடி புனைவாம். (கச)

### நூல் வரலாறு

மறைமுழு துணர்ந்த வியாதமா முனிவன் மைந்தனாஞ் சுகப்
பெயர் முனிவன், கறைதபு செங்கோற் பரிட்சித்து மன்னன் களிப்
பொடு கேட்டிடப் புகன்ற, நிறைபுகழ்ப் பாக வதத்திலோர் கதையாய்
நிலவிய குசேலன்மாக் கதையைத், துறைகெழு செஞ்சொற் றீந்
தமிழ்ப் பாவாற் சொற்றிட லுற்றனென் மன்னே. (கரு)

### அவையடக்கம்

கனைகடன் முகிலைப் பார்த்தெனீ ருவரைக் கழிப்பிமன் னுயிர்க்
கெலா மினிதாப், புனையெனக் கேளா தெனினுமம் முகிலே புரியு
மென் செய்யுளின் புகரை, நினைவரு முழுநூ லுணர்ந்தவ ரகற்றி நீடுல
கினுக்கினி தாக்க, அனையரை யானேக ளாதிருந் திடினு மதுபுரிந்
திடலவர்க் கியல்பே. (கசு)

---

கஉ. அரசு - வாணாசுரன். இவன் அக்கினியைக் கோட்டைமதிலாகக் கொண்டவன். தூசு - வஸ்திரம். ஈரங்கொல்லி - வண்ணான். தறி - தூண். வேள் - காமன்.

கங. விவேக தடம் - அறிவாகிய தடாகம். மனப்பரம்பு - மனமாகியமலை.

கச. திரிகரணம் - மனம் வாக்கு காயம். ஐந்திலக்கணம் - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி.

கரு. கறைதபு - குற்றமில்லா. (தபுதல் - கெடுதல்.) நிலவிய - விளங்கிய. கெழு - பொருந்திய.

கசு. கனை கடல் - ஒலிக்கின்ற கடல்—வினைத்தொகை. முகிலை - மேகத்தை. கழிப்பி - கழித்து—பிறவினை.

# சிறப்புப் பாயிரம்



மாமேவு மணிமார்பன் மலரடிகள் மருவுதிரு மனத்தி னேன்பொற்
கோமேவு பொழிற்றிருவூ ரதிபதிசீர் கருணீகர் குலவி சேடன்
பாமேவு பெருஞ்சீர்த்தி மிகுநாரா யணவள்ளல் பயந்த மைந்தர்
தேமேவு மலர்மாலைக் கோவிந்த முகில்சீநி வாசச் செம்மல். (க)

இருவருநற் குசேலமுனி சரித்திரத்தை யுலகுள்ளோ ரின்ப மெய்த, வொருவருமின் சுவைத்தமிழிற் பாடியரு ளுகவெனவுள் ளுவந்து கேட்பப், பொருவருசெஞ் சொற்சுவையும் பொருட்சுவையு மணிநலமும் பொலிய வார்த்தி, மருவருகாப் பியவுறுப்பும் வயங்க நயங் காட்டியெழு வழுவும் வீட்டி. (உ)

இனிதமிர்த சுவையினுமிக் கவிதனின் சுவையதென வியற்றி னான், தனிதநிரை தவழ்மனைவல் லூர்வீராச் சாமியண்ணல் தந்த மைந்தன், கனிதரும நல்லொழுக்கங் குணமனைத்து மோருருக்கொள் காட்சி போல்வான், புனிதமிகு கலையுணர்ச்சித் தேவரா சக்குரிசில் புலவ ரேறே. (௩)

வேறு

ஏராருஞ் சகாத்தமா யிரத்தெழுநூற் றெழுபத்தி ரண்டினிகழ் சௌமியநல் லாண்டுதனுத் திங்கள், வாராரு மிருபத்து நான்காநாள் பரிதி வாரமொன்பான் றிதிசோதி சிங்கவிலக் கினத்திற், பேராருங் குசேலமுனி தனதுசரித் திரத்தைப் பெட்பினினி தருந்தமிழி னியல் செறியப் பாடித், தாராரும் புயத்தேவ ராசவள்ள லான்றோர் தழைந் துவகை பூப்பஅரங் கேற்றினனுண் மகிழ்ந்தே. (௪)

வேறு

சீர்வளர் குசேலோ பாக்கியா னத்தைச் செந்தமிழ்ப் பாவினிற் செய்கென், றூர்வளர் திருவூர்ச் சீநிவா சேந்த்ர னுர்வமிக் கூர்தரப் புகலக், கார்வளர் வல்லூர்த் தேவரா சப்பேர்க் கவிச்சக்ர வர்த்தி

---

க. மாமேவு மணிமார்பன் - இலக்குமி தேவி வாழ்கின்ற அழகிய மார்பை யுடைய நாராயணமூர்த்தியின். கோமேவு பொழில் - வானளாவிய சோலைகள் சூழ்ந்த. தேமேவும் - வாசனை வீசும்; தேன் எனினுமாம்.

உ. பொருவு அரு - ஒப்பில்லாத. வீட்டி - ஒழித்து; கொன்று.

௩. தனித நிரை - முழக்கத்தையுடைய பசுக்கூட்டங்கள்.

௪. தனுதிங்கள் - தனுமாதம்; மார்கழி. பரிதிவாரம் - ஞாயிற்றுக்கிழமை. உவகை - களிப்பு.

செய் தளித்தான், ஏர்வள ரியன்முற் றுணர்ந்தநற் புலவ ரின்புளங் கொண்டிட மாதோ. (ரு)

வேறு

தாமநறு முளரிதுயல் வருதடந்தோ ளெழில்வீரா சாமி யீன்ற
காமருசீர்த் தேவரா சப்பெரியோன் பலகலைதேர் கவிஞரா ருள்ளம்
ஏமமுறக் குசேலசரி தம்பகரு நற்றிறன்மு னெண்ணி யன்றே
வாமனன்றிண் டோள்ககுபந் தாவவுடல் பூரித்தான் வையத்தீரே. (சு)

வேறு

அருமறை நான்கு மன்புட னேத்த அரவணை தனில்விழி வளர் வோன், திருவருள் பெற்ற குசேலமா முனிதன் சீர்வளர் சரிதநன் குரைத்தான், பெருவள மோங்குந் தொண்டைநன் னாட்டிற் பிறங் கும்வல் லூரினில் வாழ்வோன், மருவளர் மாலைத் தேவரா சேந்த்ரன் வயங்குபல் கலையுணர்ந் தவனே. (எ)

வேறு

பார்புகழுங் குசேலமுனி சரிதமதைத் தமிழ்ப்பாவிற் பகர்ந் தான் றூய, சீர்தவழு நெடுஞ்சடிலச் சிவபிரான் பதயுகள நிலவு நெஞ் சன், கார்பொலியுஞ் சோலைபுடை யுடுத்தொளிர்வல் லூராளி கவிஞர் போற்றுஞ், சீர்திகழுங் கருணீகர் குலத்துதித்த தேவரா சேந்த்ரன் மன்னே. (அ)

வேறு

சந்தத முற்ற விருந்தினை யோம்புந் தக்கவேங் கடகிருட்டினப்பேர்க்
கந்தவேள் பின்வந் துதித்தவன் றிருவூர்க் காவலன் முட்பொதி பசுங்
கந்தநற் கமல மாலைசூழ் தோளான் கலையுணர் சீநிவா சப்பேர் [தாட்
இந்திரன் வேண்ட வெழிற்றிரு மார்ப னிணையடிப் பூசனை யியற்றி (கூ)

இல்லறத் திருந்தும் புளிம்பழ மேய்ப்ப வியைந்தவுட் டுறவடை குசே
நல்லதீஞ் சரித நாவல ருள்ள நனிமகிழ் தரத்தமிழ்ப் பாவாற் [லன்
பல்லவச் சோலை சூழ்வல்லூ ராளி பகராருந் தேவரா சப்பேர்
வல்லவன் புரிந்த திறத்தையிற் றென்ன வகுப்பவ ருலகினிலெவரே.

பாயிர முற்றிற்று. ஆகச் செய்யுள் - உசு

---

சு. நறு முளரி தாமம் துயல் வரு - வாசனை பொருந்திய தாமரை மாலை அசையும். துயல் வரல் - அசைதல். காமருசீர் - அடைந்தோரைக் காத்தல் செய்யுஞ் சிறப்பினையுடைய. ஏமம் - இன்பம். ககுபம்தாவ - திசைகளில் பரவ.

எ. அரவணைதனில் விழிவளர்வோன் - சர்ப்பசயனத்தில் உறங்கும் நாரா யணமூர்த்தி.

அ. பார் - உலகம். பதயுகளம்-திருவடி யிரண்டினையும். (யுகளம்-இரண்டு)

கூ. கமலம் - தாமரை. ௧0. பல்லவம் - தளிர்.

முதலாவது

# குசேலர் மேல்கடலடைந்த அத்தியாயம்

உலகெலாம் புகழ நாளு முயர்மதி குலத்திற் றோன்றி
அலகில்பல் லுயிரு மின்ப மடையவொண் குடைநி ழற்றி
இலகுசெங் கோல்கைக் கொண்ட வெழிற்பரிட் சித்து வேந்தே!
நலமுறிக் கதைகே ளென்று நற்றவச் சுகன்சொல் வானால். (க)

குத்தரங் குடிகொண் டாங்குக் கொழும்பொன்மா ளிகைக ளோங்கிச்
சுத்தரங் களவி லார்கள் தொகுப்புற வின்ப நல்கி
இத்தரங் கஞ்சூழ் பூமிக் கெழின்முக மாகி யென்றும்
உத்தர மதுரை யென்னு மொருநகர் விளங்கா நிற்கும். (உ)

அங்கெடு நகரின் பாங்க ரங்கலா ரூடி நீத்த
தங்கெடு மணிக்க லங்கள் தடமறு குற்று முற்றத்

---

க. உலகு எல்லாம் - உலகத்தவரெல்லாரும். உலகம்—இடவாகுபெயர். உலகம் - பெரியோருமாம். "உலகமென்பது உயர்ந்தோர்மாட்டே". மதி குலம் - சந்திரகுலம். அலகில் - அளவில்லாத. நிழற்றி - நிழலைச்செய்து. இலகு - விளங்குகின்ற. எழில் - அழகு. பரிட்சித்து - கருவிலிருந்தகாலத்தே நம்மைக் காக்குமிறைவன் எவன் என்று பரிட்சித்தமையாற் பெற்ற காரணப் பெயர். நலம் உறு இக்கதை - சிறப்புமிகுந்த இச்சரித்திரத்தை. நல்(நன்மை) தவம். சுகன் - கிளிமுகத்தை யுடையவன். (சுகம் - கிளி.) இவர் வேதவியாசர் புதல்வர். ஆல் - அசை.

உ. குத்தரம் - மலைகள். ஆங்கு - போல—உவம உருபு. கொழுமை - செழுமை. சுத்தர் அங்கு எனப் பிரிக்க. தொகுப்பு உற - கூட்டங் கூட்டமாக வந்து சேர. தரங்கஞ்சூழ் இப்பூமிக்கு - கடல்சூழ்ந்த இவ்வுலகத்திற்கு. (தரங் கம் - அலை—சினையாகு பெயர்.) எழில் - அழகிய. உத்தரமதுரை - வடமதுரை. (உத்தரம் - வடக்கு.) இத்தலம் முத்திநகரம் ஏழனுள் ஒன்று. (முத்திநகரம் ஏழாவன:—அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை.)

ங. பாங்கர் - பக்கத்தில். அங்கலார் - மாதர்கள். ஊடி - (தங்கள் நாயகர் களோடு) பிணங்கி. நீத்த - கழற்றி எறிந்த. தம் நெடு மணி கலங்கள் - தங்கள் உயர்ந்த இரத்தினாபரணங்கள். தடம் மறுகு உற்று - விசாலமான வீதிகளில்

துன்னிய விருளை மேயத் துறக்கமென் றமரர் நாளு
மன்னிய விமைக்குஞ் சீர்த்தி மாநக ரவந்தி யுண்டால். (௩)

செந்தமிழ் பழுத்த நாவிற் றீஞ்சுவைப் புலவ ராலும்
அந்தமில் சேட னாலு மறைதர முடியாச் சீரச்
சுந்தர நகர்வ ளப்பஞ் சொலவெனக் கடங்கா வேனுஞ்
சிந்தையிற் களிப்புத் தூண்டச் சிறிதணிந் துரைப்பல் கேண்மோ. (௪)

துறைதுறை தோறுஞ் சங்கஞ் சூன்முதிர்ந் துயிர்த்த முத்தம்
அறைபுனல் வாரி யெக்க ராக்கிட வரப்பி லேற்றித்
தறைசமஞ் செய்து வித்தித் தண்புனன் மள்ளர் பாய்ச்சக்
கறையடி மாய்க்குஞ் செந்நெற் கதிர்க்குலைச் செறுக்கள் சூழும். (௫)

வேறு

வாவி மல்கிய வனசமா மலர்பொழி தேனுங்
காவின் மல்கிய கரிசறு மலர்கொழி மதுவும்
பூவின் மல்கிய நதியெனப் புரண்டுமா லென்னத்
தாவி வானளாஞ் சாற்றரு நெல்வயல் வளர்க்கும். (௬)

---

நிறைந்து. முற்ற துன்னிய - முழுவதும் படர்ந்த. மேய - ஒழிக்க (உண்ண). அமரர் - தேவர்கள்; மரித்தலில்லாதவர்கள். நாளும் - எந்நாளும். துறக்கம் - சுவர்க்கலோகம் (இருளில்லா இடம்). மன்னிய - நிலையாகவாழ—வினையெச்சம். இமைக்கும் - விளங்கும். சீர்த்தி - சிறப்பு. அவந்தி - முத்திநகர் ஏழனுள் ஒன்று. ஆல் - அசை.

௪. தீஞ்சுவை - இனியசுவை; (தீமை - இனிமை) (தீச்சுவை - கெட்ட சுவை) புலவர் - அறிவுடையோர் (புலம் - அறிவு). அந்தம் இல் - முடிவில்லாத. சேடனும் - ஆதிசேஷனும். அறைதர - சொல்ல. சீர் அ சுந்தரம் எனப் பிரிக்க. சுந்தரம் - அழகு. அணிந்து - அலங்கரித்து. மோ - முன்னிலை யசை.

௫. துறை - நீர்த்துறை. சங்கம் - சங்கு. சூல் - கருப்பம். உயிர்த்த - ஈன்ற; பெற்ற. முத்தம் - முத்துக்களை. அறை - சப்திக்கின்ற. புனல் - நீரிலிருந்து. எக்கர் - மேடு. தறை - நிலத்தை. வித்தி-விதைத்து. தண்-குளிர்ந்த. மள்ளர் - உழவர். கறையடி - யானையையும், (கறை - உரல், அடி-கால்; உரலைப் போன்ற காலையுடையது—அன்மொழித்தொகை) மாய்க்கும் - மறைக்கும். செறுக்கள் - வயல்கள்.

௬. வாவி - தடாகம்; குளம். மல்கிய - நிறைந்த. வனசம் - தாமரை. காவில் - சோலையில். கரிசு அறு - குற்றம் அற்ற. கொழி - பொழி. மதுவும் - தேனும். பூவில் - பூமியில். மால் என்ன - திரிவிக்கிரமனைப்போல (திரிவிக்கிரம அவதாரம் விஷ்ணுமூர்த்தியின் பத்து அவதாரங்களிலொன்று. மாவலியின் செருக்கையடக்கத் திருமால் வாமனனாய்ப் போந்து திரிவிக்கிரமனாக ஓங்கி வளர்ந்ததுபோலத் தேன் நதியாய்ப்புரண்டு தாவி நெல்வயலைவளர்க்குமென்க.)

**வேறு**

செம்பொனால் வெண்பொ னால்விற் செறிபல மணிக ளாற்செய்
தம்பொன்மா நகரத் துள்ளா ரமைத்தனர் வேண்டா றற்றால்
நம்புகாம் புறத்தே நிற்ற னன்றெனக் கொண்டாற் போலும்
பம்புவார் கதலி கந்தி பைங்கழை பொலியுங் காட்சி. (எ)

நெய்க்கருங் கூந்தன் மின்னார் நீர்குடைந் தகற்று நான
மெய்க்கவின் மறைத்த சாந்தம் விண்ணுலா நதியு நாறச்
செய்க்கருங் குவளை மேய்ந்த திண்மருப் பெருமை பாய
வைக்கழுக் கடையே போன்மேல் வாளைபாய் வாவி மல்கும். (அ)

**வேறு**

புள்ள வாமலர்க் கணையினு னன்னபொற் பினரும்
எள்ள ரும்புக ழிரதியை யேய்க்குமா தர்களும்
உள்ள மிக்குவந் துடங்குகை கோத்தனர் சென்று
வெள்ள நீர்துளைந் தாடுறாஉ மெழில்வள மேவும். (கூ)

**வேறு**

மேதினி முளைத்த வாற்றால் விண்ணவர்த் தெறுபாக் குற்றுங்
கோதுவிற் பத்தி ரங்கொண் டுறுதளி ராற்சி வந்து

---

எ. பம்பு - நெருங்கிய. வார் - நீண்ட. கதலி - வாழை. கந்தி - கமுகு; பாக்குமரம். பசுமை+கழை=பைங்கழை. கழை - கரும்பு. வில் - ஒளி. செறி - நிறைந்த. மணி - மாணிக்கம். அமைத்தனர் - அலங்காரஞ் செய்து கொண்டார்கள். அற்றால் - அதனால். நம்பும் - விரும்பும் (ஆசைப்பெருக்கம்).

அ. நெய் - வாசனை எண்ணெய். மின்னார் - பெண்கள். நீர்குடைந்து - ஸ்நானஞ்செய்து. நானம் - கஸ்தூரியும். மெய்கவின் - உடலழகை. சாந்தம் - சந்தனமும். விண் உலா நதியும் - ஆகாயகங்கையினும். நாற - வாசனைவீச. செய் - வயலிலுள்ள. திண்மருப்பு - உறுதியான கொம்புகளையுடைய. வை - கூரிய. கழுக்கடை - ஈட்டி.

கூ. புள் அவா - வண்டுகள் விரும்புகின்ற. மலர் கணையினன் அன்ன - புஷ்பபாணங்களையுடைய மன்மதனைப்போன்ற. பொற்பினரும் - அழகுடைய புருஷர்களும். எள் அரும் - இகழ்தலில்லாத. இரதி - மன்மதன் மனைவி. ஏய்க்கும் - ஒத்த. உவந்து - சந்தோஷித்து. உடங்கு - அசையும். துளைந்து - மூழ்கி.

க0. மேதினி - உலகத்தில். விண்ணவர் - தேவர்களை. தெறுபாக்கு உற்று - வெல்லும் பொருட்டுப் பாய்ந்து. ஆங்கு+ஓது. வில்பத்திரம் - ஒளி விளங்கும் இலைகள் (வில்பத்திரம் - வில்லையும் வாளையும் எனவுங்கொள்க). உறுதளிரால் சிவந்து - அதிக தளிர்களால் செந்நிறமடைந்து (சிவந்து -

தாதிவர் தண்பூங் கற்பத் தருக்குலம் விதிர்வி திர்ப்பத்
தீதறு சுவர்க்க நாட்டைத் தினமுஞ்சென் றுரிஞ்சுஞ் சோலை. (க0)

போங்குபல் லவப்பூஞ் சோலை புதுமதுக் கனிகள் காய்கள்
தெங்கிள நீர்கண் மற்றுந் தேவரு மரம்பை மாரும்
அங்கிருந் தயில நாளு மளித்திடு நல்லூ மூற்றோர்
எங்கிருந் தாலும் வேட்ட யாவையுந் துய்ப்ப ரன்றே. (கக)

வேறு

வண்டர் பாண்செய மதுமல ரசும்புபூம் பொழிலில்
வண்ட லாட்டயர் மகளிர்தம் வளம்பொதி கிளவி
வண்ட ளிர்ச்சினை மாங்குயில் பயிலுறு மயிலவ்
வண்ட லர்ந்தகை யாருருச் சாயலை வெளவும். (கஉ)

வேறு

மஞ்சின மெனமட மாத ரோதிகண்
டஞ்சிறை மயிலகங் களிகொண் டாடுவ
விஞ்சிருட் பூம்பொழின் மேவு கோகிலம்
அஞ்சிவாய் திறந்திடா தழுங்கிச் சாம்புமால். (கங)

---

கோபித்து எனவுங்கொள்க). தாது - மகரந்தம். இவர் - நிறைந்த. தண் - குளிர்ந்த. தரு - விருட்சம். விதிர்விதிர்ப்ப - நடுநடுங்க.

கக. பல்லவம் - தளிர்களையுடைய. அரம்பைமாரும் - தெய்வப்பெண்களும். அயில - உண்ண. நல்லூழ் - புண்ணியம். வேட்ட - விரும்பிய. துய்ப்பர்- அனுபவிப்பார். அன்று ஏ - அசைநிலைகள்.

கஉ. வண்டர் - வண்டு (சுரும்பு சுரும்பர் என்பதுபோல; போலி) பாண்செய - இசைபாட. மது - தேன். அசும்பு - அசையும். பூம்பொழிலில் - அழகிய சோலையில். வண்டலாட்டு - மகளிர் ஆடல்களுள் ஒன்று. அயர் - செய்கின்ற. பொதி - நிறைந்த. கிளவி - சொல்லை. வண்+தளிர். சினை - கிளைகளையுடைய. மா - மாமரங்களிலுள்ள. பயிலுறும்-பழக்கஞ்செய்யும். அ வண்டு அலர்ந்த கையார் - அந்த வளையலணிந்த கையையுடைய மாதர்கள். மயில் வெளவும் . மயில்கள் கவரும்.

கங. மடம் - அறியாமையுடைய . ஓதி - கூந்தலை. மஞ்சு - மேகம். இனம் - கூட்டம். அம் - அழகிய. அகம் - மனம். விஞ்சு - மிகுந்த. கோகிலம்- குயில்கள். அழுங்கி - வருந்தி. சாம்பும் - ஒடுங்கும். (மேகத்தைக்கண்டு மயில் களிக்கும்; குயில்கள் வாடும் என்க).

ஏவுலா மிருவிழி யிபத்தின் மென்னடைப்
பூவலர் கருங்குழற் பொன்ன னார்பயில்
பாவுளர் வண்டினம் பருகத் தேன்பொழி
காவுசூழ் வனப்பினைக் கணிக்க லாகுமோ. (கச)

வேறு

வெண்மணி கொழிக்குங் கடனெடு நகர்மேல் வெகுண்டுமுற் றிய தென வொளிருந், தண்மதுப் பிலிற்றுந் தாமரை யாதி ததைந்த தாழ் கிடங்குமற் றதனை, அண்மையி னகர்கண் டஞ்சியுட் செல்லா தாற்றிய பெருந்தடை கடுக்க, ஒண்மையி லாதி யவனர்செய் பொறிக ளுறுபெரு மதிலுஞ்சூழ்ந் தனவால். (கரு)

வேறு

மாதர் பண்பயின் றாடுறூஉ மணியரங் கவண
காத ளாவிய குழையினார் கண்வலை கடந்த
மாத வத்தினார் மன்னுறு மடங்களு மவண
ஓத நீருல கோதுறு சாலையு மவண. (கசு)

வேறு

வண்டிமிர் குழலினார் வதனப் பேரெழிற்
கெண்டகு முழுமதி யெதிரற் றேகுதல்

---

கச. ஏ - அம்பு. இபம் - யானை. குழல் - கூந்தல். பொன் அன்னார் - இலட்சுமியைப்போன்ற பெண்கள். பயில் - வாழும்; உலாவும். பாஉளர் - ரீங்காரஞ் செய்யும். இனம் - கூட்டம். பருக - உண்ண. காவு - சோலைகள். வனப்பினை - அழகினை. கணித்தல் - அளவிடுதல். ஓ - எதிர்மறை.

கரு. வெண்மணி - முத்துக்களை. கொழிக்கும் - ஒதுக்கும்; தெரிக்கும். வெகுண்டு - கோபித்து. முற்றியது என - வளைந்து சூழ்ந்து கொண்டது போல. ஒளிரும் - விளங்கும். தண் - குளிர்ந்த. மது - தேன். பிலிற்றும் - சிந்தும். ததைந்த - நெருங்கின. கிடங்கும் - அகழியும். அண்மையில் - சமீபத்தில்லாத. நகர் - ஊரார்—இடவாகுபெயர். ஆற்றிய - செய்த. கடுக்க - போல. ஒள் - அழகிய. யவனர் - யவனதேசத்தார். யவனம் - ஒருதேசம். (கிரீஸ்தேசமென்பர் பண்டைத் தமிழ் நூலாராய்ச்சி யுடையார்). பொறிகள் - யந்திரங்கள். (அகழி பகைகொண்டு வந்த கடலைப்போலவும், மதில் பகையாகிய கடலைத் தடுக்கும் காவலனைப் போலவு மிருக்கின்றன என்க.)

கசு. மணி அரங்கு - அழகிய நடனசபைகள். அவண - அவ்விடத்துள்ளன. குழையினார் - காதணியையுடைய மகளிர்கள். மன்னுறு - நிலையாக வசிக்கும். ஓதம் - கடல். ஓதுறுசாலை - பாடசாலை.

கஎ. இமிர் - ஒலிக்கும். குழலினார் - கூந்தலையுடைய மாதர்கள். வதனம் - முகங்களினது. எழிற்கு - அழகினுக்கு. எண்தகும் - மதிக்கத்தகுந்த. முழு

கண்டுமை தீட்டறி குறியைக் காசினி
மண்டிய களங்கென மயங்கி யோதுமால். (கஎ)

ஒழுங்குறு சுடர்களை யுற்று விக்குற
விழுங்குறு பாப்பினம் விட்டொ ளித்திடல்
செழுங்கதிர் மாடமேற் சென்று லாமயில்
அழுங்கிய சாயலார்க் கஞ்சிப் போலுமால். (கஅ)

கிஞ்சுக மங்கலார் கிளக்குந் தேமொழிக்
கஞ்சிடா தெதிர்த்தலி னவற்றை நாடொறும்
வெஞ்சிறை யிட்டென விளங்கு பன்மணிப்
பஞ்சரத் திருவினர் பாவை யன்னவர். (கசு)

வெஞ்சிறைப் பட்டவர் தமக்கு வேண்டிய
அஞ்சுவை யுணவற வரச ளித்தல்போல்
வஞ்சிய ரச்சுவா கதங்கள் வாய்மடுத்
துஞ்சிடக் கனிமுத லுணக்க ணல்குவார். (உ0)

வேறு

சிறைபடு தம்மை நீத்தல் செய்தனல் லறனு மென்னுக்
கறைதபு மொழியின் வேண்டல் கடுப்பபைஞ் சிறைய கிள்ளை
நிறைமலர்க் குழலா ருள்ள நெகிழ்தர வினிய தீஞ்சொல்
அறைதரு மவரு நீக்கி யங்கையி னேந்து வாரே. (உக)

---

மதி - பூரண சந்திரன். ஏகுதல் - ஒதுங்கிப் போதலே. காசினி - உலகம். மண்டிய - மிகுந்த.

கஅ. சுடர்களை - சூரிய சந்திரர்களை. பாப்பினம் - பாம்புக் கூட்டம் (இராகு கேதுக்கள்). கதிர் - பிரகாசம். அழுங்கிய - வருத்திய. (பெண்கள் சாயலழகைக் கண்டு மயில்கள் தங்கள் சாயலை நினைந்து வருந்துகின்றன என்பது).

கசு. கிஞ்சுகம் - கிளிகள். அங்கலார் - மாதர்கள். தேன்+மொழிக்கு. பஞ்சரத்து - பறவைக் கூட்டில். இருவினர் - அடைத்து வைத்தார்கள். பாவை அன்னவர் - பதுமை போன்றவர்கள்.

உ0. உணு - ஆகாரத்தை. அறம் அரசு - செங்கோலரசு. வஞ்சியர் - வஞ்சிக்கொடி போன்ற மாதர்கள். அ சுவாகதங்கள் - அந்தக் கிளிகள். வாய்மடுத்து-உண்டு. உஞ்சிட - பிழைத்திட.

உக. கறைதபு - குற்றமற்ற. கடுப்ப - போல. பைஞ்சிறை = பசுமை + சிறை. சிறைய - சிறைகளையுடைய. தீஞ்சொல் - இனிய சொல். தீச்சொல் - கெட்ட சொல். அறைதரும் - பேசும்.

### வேறு

விண்டேவ ரிமைத்திலர் நோக்க விளங்கு பொற்பிற்
பண்டங்க ளிவந்துயர் பற்பல வாவ ணத்தின்
தண்டாத பெரும்புக ழிற்றெனச் சாற்ற வல்லோர்
ஒண்டா ரணியி லிலையென்னி லுரைப்ப தென்னே. (உஉ)

### வேறு

துறவறத் தடைந்தோ ரில்லந் துறந்தமைக் கிரங்க வில்லத்
துறவிருக் கின்ற மாந்த ருள்ளன வெல்லா மீந்து
பிறர்நகை பொரும லந்தப் பெருந்துற வடையப் போகந்
திறமுற விற்கு மின்னோர் செறிதருந் தெருக்கள் பல்ல. (உங)

வருவிருந் தெதிர்கொண் டேற்று மலர்முக மினிது காட்டி
அருமைசான் முகமன் கூறி யறுசுவை யுணுநன் கூட்டித்
திருமலி கவிமு னோர்க்குச் செம்பொன்முன் னான நல்கிப்
பெருமைசான் றொழுகும் பின்னோர் பெருகிவாழ் தெருக்கள் பல்ல.

அன்னியர் பொருளுந் தத்த மரும்பொரு ளென்ன வுள்ளத்
துன்னியொன் றனந்த மாக வுஞற்றும்வல் லபத்தாற் கண்ட
ஏன்னரு மிறும்பூ தெய்து மெழின்மிகும் வணிக ரென்று
மன்னிவாழ் வெய்து மிக்க மறுகுகள் பலவ யங்கும். (உரு)

தேசினிற் சிறந்தோர் செல்வத் திறத்தினி லுயர்ந்தோ ராற்றும்
பூசலில் வென்றி கொள்ளும் போர்ப்புலி யன்னோர் தூய

---

உஉ. விண்+தேவர். இமைத்திலர் - கண் இமைக்காதவர்களாய். பொற்பின் - அழகினையுடைய. நிவந்து உயர் - அதிகமாகக் குவிந்து உயர்ந்திருக்கிற. ஆவணத்தின் - கடைகளின். தண்டாத - அழியாத. இற்று என - இப்படிப் பட்டதென. தாரணி - பூமி.

உங. இல்லத்து+உற. போகம் விற்குமின்னோர் - வேசைகள்.

உச. சால் - மிகுந்த. முகமன் - உபசார வார்த்தை. நன்கு ஊட்டி. அறுசுவை :—புளிப்பு, கைப்பு, தித்திப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு. திருமலி - கல்விச் செல்வம் நிறைந்த. கவிமுன்னோர்க்கு - பாவலர் முதலியவர் கட்கு. முன் ஆன - செம்பொன் முதலானவைகளை. நல்கி - கொடுத்து. சான்று - நிறைந்து. பின்னோர் - வேளாளர்.

உரு. உன்னி - எண்ணி. உஞற்றும் - செய்கின்ற. என்னரும் - எத்தகையினரும். இறும்பூது - ஆச்சரியம். மறுகுகள் - தெருக்கள். வயங்கும் - விளங்கும்.

உசு. தேசினில் - அழகினில். ஆற்றும் - செய்யும். பூசலில் - போரில். அன்னோர் - போன்றவர்களும். தூய - பரிசுத்தமான. மழை என - மேகம்

வாகமார் மாலை மார்பர் மழையென விரவ லாளர்க்
காசறு தான மீயு மரசர்வாழ் மறுகு மோர்பால். (உசு)

மறுவறு முத்தீ யென்றும் வளர்ப்பவ ரைந்தென் றோதுந்
தெறுபுல னவித்த மேலோர் செய்யமால் தனுது செங்கேழ்
நறுமல ருந்தி பூத்த நாதனே யனைய தூயர்
அறுதொழி லாளர் வீதி யவண்பல வயங்கு மன்றே. (உஎ)

தேரொலி புழைக்கை மாக்கள் சீறிசை பரிமா வோதை
வாரியை கழற்கால் வீரர் மணிப்புயந் தட்டு மார்ப்பு
நாரியர் சிலம்பின் சும்மை நரப்பியா மரவ மின்ன
சேரவொன் றாகி யேழு திரைகள்வா யடக்கு மன்றே. (உஅ)

வேறு

அளகை வேந்தனை யனந்தனை மதனனை யரிய
பளகில் செல்வத்தாற் குறைவறு கல்வியாற் பகா
வளவின் மேனியின் வனப்பினுல் வென்றமற் றவர்தந்
தளர்வில் சீர்த்தியைச் சாற்றிட வல்லனல் லேனே. (உகூ)

வேறு

வெள்ளிய கோட்டு வேழ வென்றிவன் றிருகு கோட்டுத்
துள்ளிய தகரின் வென்றி துணர்க்கவிர்ச் சூட்டு முட்காற்

---

போல (கைம்மாறு நாடாது). இரவலாளர்க்கு - பிச்சைக்காரார்களுக்கு. ஆசு அறு - குற்றத்தை யொழிக்கும். தானம் - கொடை.

உஎ. மறு அறு - குற்றமொழிக்கும். மூன்று + தீ = முத்தீ - ஆகவநீயம், தக்ஷிணக்கி, காருகபத்தியம். தெறு - துன்பஞ் செய்கின்ற. ஐம்புலன் அவித்த மேலோர் - பஞ்சேந்திரியங்களை யடக்கிய பெரியோர்கள். செய்ய - அழகிய. மால்தனுது - விஷ்ணு மூர்த்தியினுடைய. செம்மை கேழ் - சிவந்த நிற முடைய. பூத்த - ஈன்ற. நாதனே - பிரமனையே. அனைய - போன்ற. தூயர் - சுத்தர். அறுதொழிலாளர் - பிராமணர். (அறுதொழில் :—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்). அவண் - அவ்விடத்திலே.

உஅ. புழைக்கை மாக்கள் - யானைகள் (புழை - துளை. கை - துதிக்கை). பரிமா - குதிரைகள். ஓதை - ஓசையும். வார் இயை கழல் - வாரினுல் கட்டப்பட்ட வீரக்கண்டை. ஆர்ப்பும் - ஓசையும். நாரியர் - மாதர்கள். சும்மை - ஓசையும். நரப்பு - நரம்பு. அரவம் - ஓசையும். இன்ன - இவைபோன்ற ஓசைகளும். திரைகள் - கடல்கள்.

உகூ. அளகை வேந்தனை - குபேரனை. அனந்தனை - ஆதிசேடனை. மதனனை - மன்மதனை. பளகு - குற்றம். வனப்பினுல் - அழகினுல்.

௩௦. வெள்ளிய கோட்டு - வெள்ளைக் கொம்புகளையுடைய (தந்தம்). திருகு - முறுக்கு. தகர் - ஆட்டுக்கடா. துணர் - கொத்து. கவிர் - முருக்க மலர்

புள்ளிய சேவல் வென்றி புகரிலாக் குறும்பூழ் வென்றி
உள்ளிய பிறவு நாளு முலப்பறு வீரர் கொள்வார். (௩0)

வேறு

தோடலர்நந் தனவனங்கள் துறைமலர்பன் மலர்வாவி
நீடொளிய கோபுரங்கள் நெடுமதிற்பொன் மாளிகைகள்
நாடவர்கள் துதிமுழக்க நாடொறுமின் னியமுழக்கம்
ஆடலொடு பாடலறா ஆலயங்கள் பலவாங்கண். (௩௧)

வேறு

தரங்க வாரிதி சூழ்தருந் தாத்திரி மாந்தர்
இரங்கும் வெண்டிரை வாவியின் மூழ்கிநந் தனத்திற்
குரங்க வார்சினை மல்கிய கொழுமலர் நாளுங்
கரங்கொ டன்புட னருச்சிப்பர் காலங்க டோறும். (௩௨)

வேறு

இன்னவளம் படைத்தெவரு மிறும்பூது கொண்டடையப்
பன்னரிய வுத்தமத்திற் பயிலுநால் வகைக்குடியுந்
துன்னுபுறக் குடிமூன்றுந் தொக்குறைய விளங்கிடுமப்
பொன்னகருக் கணித்தாகப் பொலிபெருங்கா டொன்றுளதால். (௩௩)

மந்தாரங் கச்சோலம் வாகைசே வெட்பாலை
சந்தார்பி டாவகுளஞ் சண்பகங்கூ விளநாக

---

போன்ற. சூட்டு - உச்சிக்கொண்டை. முள்+கால். புகர் - குற்றம். குறும்பூழ் - காடை. பிறவும் - பிறவென்றிகளும். உலப்பு அறு - ஒழிதலில்லா (அளவில்லா).

௩௧. தோடு - இதழ்கள். நந்தனவனம் - பூந்தோட்டங்கள். வாவி - தடாகங்கள். நாடவர்கள் - நாட்டிலே வசிப்பவர்கள். இயம் - வாத்தியம்.

௩௨. தரங்க வாரிதி - அலைகளையுடைய கடல். தாத்திரி - உலகம். இரங்கும் - ஒலிக்கின்ற. நந்தனம் - பூந்தோட்டம். குரங்க - வளைந்த. வார் - நீண்ட. சினை - கிளைகளில். மல்கிய - நிறைந்த. கொழுமலர் - செழுமலர்; நாண்மலர்.

௩௩. இறும்பூது - ஆச்சரியம். பன்னரிய - சொல்லுதற்கரிய. பயிலும் - பழகும். நால்வகைகுடி:—பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திரகுடிகள். புறக்குடி மூன்று:—அநுலோமர், பிரதிலோமர், சங்கர ஜாதியார். தொக்கு உறைய - கூடிவாழ. அணித்தாக - சமீபமாக.

௩௪. மந்தாரம் - செம்பரத்தை மரம். கச்சோலம் - ஏலமரம். வாகை - தசமூலத்தொன்று. சே - அழிஞ்சல் மரம். சந்து - சந்தனமரம். ஆர் - ஆத்தி. வகுளம் - மகிழமரம். கூவிளம் - வில்வமரம். நாகம் - நாவல்மரம். நந்தாத -

நந்தாத வேங்கையொருமை நமைவருக்கை முருக்ககில்யா
சிந்தாத வழைபுன்னை சிந்துவா ரஞ்செருந்தி. (நச)

சிந்துரமா மராவரசு செங்கடம்பே பிலம்பாலை
குந்தமா தளைஞாழல் குங்குமமுந் திரிகையா
கந்திகளா விளாதென்னை கடுக்கைதேக் கோமைமுதல்
அந்தில்பல செழுந்தருக்க ளடர்ந்தொளிரு மவ்வனமே. (நரு)

மலரினிழி கொழுந்தேனும் வைத்தவிறுற் செழுந்தேனும்
அலகில்பல கனித்தேனு மறைகலுழிப் பெரும்புனலும்
உலவையிரண் டுடையகளிற் றூறியமும் மதப்புனலுஞ்
சலசலவென் றோட்டெடுத்துத் தடங்கடலே ழெனப்பெருகும். (நசு)

விளங்கனியு மாங்கனியு மினிர்பாகற் செழுங்கனியுங்
களங்கனியும் விளங்கருணக் கனியுநரந் தக்கனியும்
வளங்கனியு மிவைமுதல வானோரும் வாயூறி
உளங்கனியும் வகைபழுத்த வொண்சினைய தருக்களெல்லாம். (நஎ)

சந்தநறு மலர்ச்சேக்கைச் சதுமுகனு ருகுநாளும்
இந்தவனக் கழிவின்றென் றியாவருநன் கெடுத்துரைப்பக்
கந்தமலர் தளிர்துறுமிக் காய்கனிபிஞ் சுகடூங்க
மந்திகளு மறியாத மரங்கள்பல வோங்கியவால். (நஅ)

---

கெடாத. வருக்கை - பலா மரம். யா - ஒருவகை மரம். வழை - சுரபுன்னை மரம். சிந்து வாரம் - நொச்சி மரம்.

நரு. சிந்துரம் - புளியமரம். மரா - வெண்கடம்பு மரம். குந்தம் - குருந்த மரம். ஞாழல் - கோங்குமரம். ஆ - ஆச்சாமரம். கந்தி - பாக்குமரம். கடுக்கை - கொன்றைமரம். ஓமை - மாமரம். அந்தில்—அசை. (இடத்தை யுணர்த்தும் ஓரிடைச்சொல்லெனினுமாம்). தருக்கள் - மரங்கள்.

நசு. வைத்த (ஈக்களால்) சேர்த்துவைக்கப்பட்ட. இறால் - தேன் கூட்டி னின்றும் ஒழுகும். அலகு இல் - அளவில்லாத. அறை - ஒலிக்கின்ற. கலுழி - காட்டாறு. புனல் - நீர். உலவை - கொம்பு. களிற்று - ஆண் யானைகளிடத் தில். மும்மதம் - கன்னமதம், கபோலமதம், பீசமதம். தடம் - விசாலமாகிய.

நஎ. சினை - கிளைகள். தருக்கள் - மரங்கள். பாகல் - பலா. களம் - களா. அருணம் - எலுமிச்சை. நரந்தம் - நாரத்தை. வளம்கனியும் - வளமை மிகுந்த.

நஅ. சந்தம் - வாசனை. மலர்ச்சேக்கை - தாமரைப் பூப்பீடம். சதுமுக னுர் - பிரமதேவர். உகு - அழியும். வனக்கு - வனம் என்பது சாரியை பெறாது உருபேற்றது. கந்தம் - வாசனை. துறுமி - நெருங்கி. பிஞ்சுகள்+தூங்க. தூங்க - தொங்க. மந்திகளும் - குரங்குகளும்.

### வேறு

இறவு பாய்கட லேறுவர் நீங்குற
நறவு பாயு நறுமலர்க் கொம்பர்வின்
ணுறவு கொண்டிட வுற்றவக் கானிடைக்
குறவ ரும்மருள் குன்றமொன் றுண்டரோ. (௩௯)

மஞ்சு லாவுமம் மாமலைச் சாரலில்
விஞ்சு விற்றொழின் மேவிய வேட்டுவர்
தஞ்சி றாருந் தரக்கின் பறழ்களுங்
குஞ்ச ரக்குழக் கன்றுங் குழுமுமால். (௪0)

உன்னு நற்கனி கந்த வுணவுண்டிம்
பன்னு தோலுடுத் தும்பட ருங்குழல்
துன்னு மாறு தொடர்தரக் கட்டியு
மன்னு வேடரு மாதவர் போல்வரால். (௪௧)

சிங்கம் யானைவெஞ் சீற்றப் புலியுழை
மங்க ருந்திறன் மன்னுகு டாவடி
துங்க யாளி துறுமி யெழுப்புறும்
பொங்கு மோதை புவனம் பொதியுமால். (௪௨)

வார ணத்தின் மருப்புகு முத்தமுங்
காரு லாவுங் கழையுகு முத்தமுஞ்
சீர ளாவித் திகழ்கதிர் வார்கடற்
பாரெ லாமிரு ளோப்பிப் பரக்குமே. (௪௩)

---

௩௯. இறவு - இறால் மீன். ஏறு உவர் - கலந்திருக்கிற உவர்த்தன்மை. நறவு - தேன். மலர் கொம்பர் - பூங்கொம்புகள். அரோ—அசை.

௪0. மஞ்சு - மேகம். விஞ்சு - மிகுந்த. வில்+தொழில். வேட்டுவர் - வேடர். தரக்கின் பறழ்களும் - புலிக்குட்டிகளும். குழவு - இளமை. குஞ்சரக் கன்றும் - யானைக் கன்றுகளும். குழுமும் - கூடும்.

௪௧. கந்தம் - கிழங்குகள். பன்னு - சொல்லப்பட்ட. குழல் - தலைமயிர். துன்னுமாறு - நெருங்கும் வண்ணம்.

௪௨. சீற்றம் - கோபத்தையுடைய. உழை - மான். மங்கு அரு - அழிதலில்லாத. திறல் மன்னு - வலிமை பொருந்திய. குடாவடி - கரடி. துங்கம் - மேலாகிய. துறுமி - ஒன்று சேர்ந்து. ஓதை - ஓசை. புவனம் - உலகம். பொதியும் - நிறையும்.

௪௩. வாரணத்தின் - யானையினுடைய. மருப்பு - கொம்பினின்றும். உகும் - சிந்தும். கார் - மேகம். கழை - மூங்கில். கதிர் - ஒளி. பார் - உலகம். ஓப்பி - ஓட்டி.

## வேறு

பருமணிச் சுடிகைப் பஃறலை யரவம் படமொளி மேருவைப் பொதிந்தாங், கிருளற விமைக்குங் கதிரொளி சமழ்ப்ப வெறிகதிர் மணிபல வேந்தி, மருவுவெள் ளருவி பொதிதர வான்றோய் மால்வரை செறியமிக் குயர்ந்த, பெருவரை முடியி னுள்ளதொன் றளவாப் பெருந்தவ முனிவர்தஞ் சேரி. (சச)

அருமறை முழக்கும் வினைதபும் யாக வழற்கணன் மந்திர முழக்கும், பெருமைசால் சுரரைக் கூயவி யளிக்கும் பெருமுழக் கமுமவ ரேற்குஞ், செருமலி முழக்கு முண்டபி ஞசி செப்பிடு முழக்கமு மொன்றிக், கருநிறக் கரைகொன் றிரங்கெறி தரங்கக் கடல்முழக் கெழாவகை யடக்கும். (சரு)

தருப்பைகொய் குநருஞ் சமிதைதே டுநருந் தழைந்தமா விலைபறிக் குநரும், விருப்பொடு நல்லா னைந்துகூட் டுநரும் வியன்பவித் திரமுடி குநரும், அருப்புமென் மலர்நந் தனவனந் தன்னை யடைந்தெடுக் குநருறு லாய்ந்த, திருப்பொலி பெரியோர்க் குபசரிக் குநருஞ் செறிதர விளங்குமச் சேரி. (சசு)

சரியைய ரொருபாற் கிரியைய ரொருபாற் சார்ந்தயோ கத்தின ரொருபாற், பெரியஞா னத்தி னிற்பவ ரொருபாற் பெட்பொடு போதிப்பா ரொருபால், விரிதரு மோத்துக் கற்பவ ரொருபால் மெய்ப்பொருள் பொய்ப்பொரு ளிரண்டுந், தெரிதர விசாரஞ் செய்பவ ரொருபாற் றிகழ்தரப் பொலியுமச் சேரி. (சஎ)

---

சச. சுடிகை - உச்சிக்கொண்டை. பல்தலை அரவம் - ஆதிசேடன். ஆங்கு - போல. கதிர் - சூரியன். சமழ்ப்ப - நாண. அருவி - சிற்றாறு. பொதிதர - சூழ. மால் - பெரிய; உயர்ந்த. வரை - மூங்கில். வரை - மலை. வரை - கணு. அது சினையாகு பெயராய் மூங்கிலை யுணர்த்தும். பின்னர்த் தானியாகு பெயராய் மலையை யுணர்த்தும்.

சரு. மறை - வேதம். தபும் - கெடுக்கும். அழற்கண் - அக்கினியினிடத்தில். நல்+மந்திரம். சுரரை - தேவரை. கூய் - கூப்பிடும். அவி - அவிர்ப்பாகம். செரு - போர். ஒன்றி - சேர்ந்து. கொன்று - கரைத்து. இரங்கு - ஒலிக்கின்ற.

சசு. ஆன் ஐந்து - பால், தயிர், நெய், கோமயம், கோசலம் (பஞ்சகவ்வியம்) வியன் - பெருமை. ஆய்ந்த - ஆராய்ந்த - செறிதர - நிறைய.

சஎ. பெட்பு - அன்பு. ஓத்து - வேதம்.

ஆங்கதிற் குசேலப் பெயரினோன் முனிவ ரருங்குலத் தினிய பாற் கடலிற், பாங்குறு மதிபோற் றோன்றினோன் வண்டர் பாண் செய மணநறுக் கொழிக்கும், பூங்கம லத்தில் வாழ்பொறி யிலகும் பொருப்பன நிறத்துமால் பதத்தைத், தாங்குறு முளத்தன் பொறிகள் தீச் செயலிற் சார்வுறா தடக்குறு மேலோன். (சஅ)

தன்னுயிர் போல மன்னுயிர் புரத்தல் சான்றவர்க் குறுதியென் றென்று, மன்னிய மறைநூல் மொழிந்திடு மதுமன் வாய்மையே யென்றுணர்ந் தவனுய்த், துன்னிய வுலகி லிருதிணை யுயிருந் தூங்கிய மகிழ்ச்சிமீக் கூர, நன்மையே புரிவான் றன்னமு முளத்தில் நாடிடான் தீமைசெய் தலையே. (சகூ)

அடக்கமும் பொறையுங் கருணையு நண்பு மழுக்கறுத் திலா மையு மென்றும், விடற்கருந் தவத்தோ டொருங்குற வளர்ப்போன் வெகுளியுங் காமமு மயக்கும், கடக்கருந் தீமை நாடொறும் விளைக் குங் கயவர்கள் தொடர்ச்சியுந் தன்னைத், தொடற்கரி தாக வடியறக் காய்ந்தோன் தூயர்க்குந் தூயவன் மாதோ. (ரு௦)

படியிலா மறைநூல் முற்றுணர்ந் தடுத்தோர் பக்குவத் திறன் மதித் தறியா, ஒடிவறு சரியை யாதியா நான்கு முற்றுறப் பயிற் றுசாந் தீபன், அடிமல ரடையா விருக்குமுன் மூன்று மையமுன் மூன்றும்விட் டோடக், கடிகெழு காயாம் பூங்கதிர் மேனிக் கண்ண னோ டமர்ந்துகற் றனனே. (ருக)

---

சஅ. பாங்கு - தன்மை; அழகு. வண்டர் - வண்டு. பாண்செய - இசை பாட. நறா - நறவு; தேன். கொழிக்கும் - சொரியும். பூ - பொலிவான. கமலம் - தாமரைப்பூ. பொறி - இலக்குமி. பொருப்பு அன்ன - மலைபோன்ற. நிறத்து - மார்பையுடைய. மால்பதத்தை - விஷ்ணுமூர்த்தியின் திருவடிகளை. பொறிகள் - புலன்கள்.

சகூ. புரத்தல் - காத்தருளல். சான்றவர் - மேலானவர். மன் - மிகுதி. வாய்மையே - சத்தியமே. இருதிணை - உயர்திணை; அஃறிணை. தூங்கிய - தாங்கிய. மீக்கூர - அதிகப்பட. தன்னமும் - சிறிதும்.

ரு௦. அழுக்கறுத்திலாமையும் - பொறாமைப்படாமையும். வெகுளி - கோபம். காமம் வெகுளி மயக்கம் - இவை முக்குற்றம் எனப்படும். கயவர்கள் - கீழ்மக்கள். தொடர்ச்சியும் - சம்பந்தமும்.

ருக. படி - ஒப்பு. மறை - வேதம். ஒடிவு - கெடுதல். சரியை, கிரியை, யோகம், ஞானம். அடையா - அடைந்து. இருக்கு முன் மூன்றும் - வேதங்களிலே முதல் மூன்று; இருக்கு, யசுர், சாமம். வேதம் முன்னர் மூன்று கூறுடையதாயிருந்தது என்னுங் கருத்தில் இருக்கு மூன்று என்றார் என்று கொள்ளலும் ஒன்று. ஐயம் மூன்று:—ஐயம், திரிவு, அறியாமை (சந்தேக விபரீத அஞ்ஞானம்). கடிகெழு - வாசனை பொருந்திய.

கோழுந்துவிட் டெரியும் பசித்தழ லவித்துக் கோதில்லை ராக்கிய மிக்குற், றழுந்துபட் டிடாத சாந்திரா யணமு னளப்பருஞ் செயற்கரு விரதம், எழுந்துவிட் டொளிரப் பற்பக லாற்றி யென்பொடு நரம்புகள் தோன்றிச், செழுந்தசை வற்றி யிளைத்தயாக் கையனுய்த் திகழ்ந்தனன் சீர்த்தியந் தணனே. (ருஉ)

கதிரவ னுதய கிரிமிசை வருமுன் கன்னலேந் தெனத்துயி லொழிந்து, விதிவழி மலநீர் விடுத்தொளிர் கரக மென்புன லாற் சுத்தி யமைத்து, மதிசெய்பற் கறைதீர்த் தறலினு ஞானம் வயங்குறச் செய்துநற் சந்தி, யதிகமாஞ் செபம்வந் தனைமுதல் நியதி யழுதியற் றிடுந்தொழி லமைந்தோன். (ருங)

ஒன்றுமெய் வாய்கண் ணுசிகா தென்ன வுரைத்திடும் பொறிவழி யூறு, துன்றிய சுவையொள் ளொளிமணஞ் சத்தஞ் சொல்லுமிவ் வைம்புல னென்றும், ஒன்றுபட் டுள்ளக் குறிப்பறிந் தொழுக வொருக்கிய தவவலி யினனுய், நின்றுளா னிவனைப் புகழ்தரா ரெவரே நீடிய பவத்தொடக் கறுப்பார். (ருச)

ஔவிய மவித்த பெருந்தவத் தினர்க ளகம்புற மெனும்பகுப் பிறந்து, முவ்வுல கமுந்தம் மிடமதா வசிப்ப ரெனமறை மொழிவதற் கிசையச், செவ்விய மனத்தன் வீடுகா டென்னத் தெரிந்துறை பகுப்பிலான் சினந்த, தெவ்வுடல் பனிப்ப வெள்ளொளி நெடுவேல் செறிதட றகற்றுபு விதிர்ப்போய்! (ருரு)

---

ருஉ. அழுந்து பட்டிடாத - தாழ்வுபடாத. சாந்திராயணம் - பௌரணை முதல் அமாவாசைவரை அன்னத்தை ஒவ்வொரு கவளம் குறைத்தும், அமாவாசை முதல் பௌரணைவரை ஒவ்வொரு கவளமாக உயர்த்தியும் அநுஷ்டிக்கும் ஒரு விரதம். யாக்கை - உடல். திகழ்ந்தனன் - விளங்கினன். சீர்த்தி - சிறப்பு. அந்தணன் - குசேலன்.

ருங. கதிரவன் - சூரியன். உதயகிரி - தோன்றும்மலே. கன்னல் - நாழிகை. துயில் - நித்திரை. கரகப்புனல் - கரகநீர். பல்கறை - பல்லழுக்கை. அறல் - நீர். நானம் - ஸ்நானம். வயங்குஉற - விளக்கமடைய. சந்தி - சந்தியாவந்தனம். நியதி அழுது - நியமந்தப்பாமல்.

ருச. ஊறு - ஸ்பரிசம். சுவை - ரசம். ஒளி - ரூபம். மணம் - கந்தம். சத்தம் - சப்தம். ஒருக்கிய - அடக்கிய. பவத்தொடக்கு - பிறவிப்பிணி.

ருரு. ஔவியம் - பொறாமை. சினந்த - கோபித்த. தெவ்வுடல் - பகைவர்கள் தேகம். பனிப்ப - நடுங்க. தடறு - உறையினின்றும். அகற்றுபு - வாங்கி. செய்பு என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். விதிர்ப்போய் - அசைப்பவனே.

மெத்திய பற்பல் கிழிதுணி யிணைத்து மெல்லிழைச் சாட்டி
ளுற் பொல்லம், பொத்திய சிதரே நல்லுடை யாகப் புனைந்தகா
ரணத்தினுற் கடல்சூழ், எத்திசை யவருங் குசேலனென் றுருபே
ரிட்டழைப் பர்கண்மதக் கலுழி, தத்திய கரடத் தறுகண்மால்
யானைத் தரியலர் கூற்றெனப் பொலிவோய்! (௫௬)

மாற்கடல் கடந்த மனத்தனும் வேத வரம்புகண் டிலங்குமிக்
குசேலன், பாற்கடல் மிசையோர் கார்க்கடல் போலப் பையர வணை
மிசைத் துயில்வோன், சேற்கரு நெடுங்கட் டிருமகள் வருடச் சிவந்து
காட் டிடுமறை மலர்த்தாள், ஏற்குமென் றுள்ளத் திருவியெந் நாளு
மியற்றரும் பூசனை யியற்றும். (௫௭)

வேறு

திறலிணை தவத்தில் வாறு திகழ்ந்திடுங் குசேல னென்பான்
உறலிணை யத்த வத்திற் குதவிசெய் பாக்கு நாளும்
அறலிணை கதுப்பி ஞேரா ரணங்கினை வதுவை செய்தான்
மறலிய மன்னர் சென்னி மணிமுடி யிடறுந் தாளோய்! (௫௮)

மணமக னுடம்பு போற்ற வல்லவண் மனைவி யேயென்
றுணர்விஞர் மொழியு மாற்ற முவள்செய வேக்கிப் போலுந்
தணவறு மன்புஞ் சாந்தத் தன்மையு நன்மை யான
குணமுமோ ருருவங் கொண்டோர் குடிப்பிறந் தனைய நீராள். (௫௯)

---

௫௬. மத கலுழி - மதநதி. தத்திய - பாய்கின்ற. கரடம் - சுவடு. தறு
கண் - அஞ்சாமை; குரூரம். மால் - பெரிய. தரியலர் - பகைவர்களுக்கு.
கூற்று என - யமனைப்போல. பொலிவோய் - விளங்குபவனே. பொல்லம்
பொத்திய - தைத்த. சிதரே - சீலைத்துணியையே. குசேலன் - குற்சிதமான
ஆடையையுடையவன் (கு - குற்சிதம், பொலிவில்லாத, கிழிந்த. சேலன் -
ஆடையையுடையவன்).

௫௭. மால் - மயக்கம்; ஆசை. வரம்பு - எல்லை. பை - படத்தையுடைய.
அரவணை - சேஷசயனம். சேல் - கயல் மீன். கண் திருமகள். திருமகள் -
இலக்குமி. வருட - தடவ. மறைமலர்த்தாள் - தாமரைப்பூப்போன்ற ஸ்ரீபாதங்
களை. ஏற்கும் - பொருந்தும். இருவி - இருத்தி; பதித்து. இயற்று அரு -
செய்தற்கரிய.

௫௮. மறல் இய - பகையுடைய. திறல் இயை - வலிமைபொருந்திய.
உறல் - பொருத்தம். உதவிசெய்பாக்கு - உதவிசெய்யும் பொருட்டு. அறல்
இயை கதுப்பினுள் - கருமணலையொத்த கூந்தலையுடையவளாகிய. அணங்
கினை - பெண்ணை. வதுவை - கலியாணம்.

௫௯. மாற்றம் - சொல். உவள் - இவள். தணவு அறும் - நீங்குதலில்லாத.
நீராள் - குணமுடையவள்.

மாசிலாக் குலத்து வந்தாள் வருவிருந் துவப்ப வூட்டு
நேசமிக் குடையாள் கொண்க னினைப்பறிந் தொழுகு நீராள்
தேசுறு வாய்மை யுள்ளாள் சினந்திட லென்று மில்லாள்
பேசுதிண் கற்பு வாய்த்தாள் பெற்றதே கொண்டு வப்பாள். (௬0)

அருண்மகப் பெருகி லாருக் கணைகதி நாத்தி யென்று
தெருண்மறை செப்ப லானுஞ் சிறந்ததன் குலநீ டித்துப்
பொருண்முயங் கிடுமா றெண்ணும் புந்திய னாத லானும்
இருண்மருள் குழலன் னாளோ டிருந்தவக் குசேலன் சேர்ந்தான்.

சேர்தலு நரம்பு பைத்துச் சேல்விழி குழிந்து காட்ட
வார்முகங் கிழிக்குங் கொங்கை மருவுபால் சுரந்து காட்டச்
சார்தரு வயாவு நீடித் தணப்பில்பல் சுவைநாக் காட்ட
நேரிழை கருப்பம் வாய்ந்து நிரம்புநாள் மைந்த னீன்றாள். (௬உ)

பின்புசின் னாள்கள் செல்லப் பெய்வளை மக்கட் பேற்றின்
அன்புறு மார்வ மீட்டு மடாத்தன் முயற்சி யாலே
கொன்பெறு கணவற் கூடிக் கூடிநன் குயிர்த்து யிர்த்திட்
டின்புறப் பெற்று நின்றா ளிருபத்தேழ் மைந்தர் சேர. (௬௩)

மலையிட்ட செல்வத் தார்கண் மகிழ்வோர் மகவுந் தாரான்
அலையிட்ட முட்டாட் செய்ய அம்புயத் துறைவோ னோரேழ்
தலையிட்ட விருபான் மைந்தர்த் தந்தனன் பெருமை யன்றோ
சிலையிட்ட தழும்பு வாய்ந்த தெரியலந் தடந்தோள் வேந்தே! (௬௪)

---

௬0. மாசு - குற்றம். உவப்ப - களிக்க. கொண்கன் - கணவன். தேசு - புகழ். வாய்மை - சத்தியம். சினந்திடல் - கோபித்தல்.

௬௧. நாத்தி - இல்லை. தெருள் - தெளிவு. பொருள் - புருஷார்த்தம். முயங்கிடுமாறு - அடையும்படி; தழுவும்படி. புந்தியன் - உள்ள முடையோன். இருள் மருள் - இருளும் மயங்கும். குழல் அனையாளோடு - கூந்தலை யுடைய அவளோடு.

௬உ. பைத்து - பச்சைநிறம் பெற்று. வார் - கச்சு. வயாவு - கருப்ப வேதனை. தணப்பு - நீங்குதல். நேரிழை - அந்தமாது சிரோமணி—அன்மொழித் தொகை.

௬௩. பெய்வளை - அந்த அம்மையார்—அன்மொழித்தொகை. ஆர்வம் - விருப்பம். கொன் - பெருமை. கணவன் கூடி - கணவனைச் சேர்ந்து. உயிர்த்து உயிர்த்திட்டு - ஈன்று ஈன்று.

௬௪. அலை இட்ட - நீரில் உண்டாகிய. முள்+தாள் - முட்டாள் (சிலேடை). செய்ய அம்புயத்து - செந்தாமரைப் பூவில். உறைவோன் - வசிப் பவனாகிய பிரமதேவன். ஓர் ஏழ்தலையிட்ட இருபான் மைந்தர் - இருபத்தேழு புதல்வர். சிலை - வில். தழும்பு - வடு. தெரியல் - பூமாலை.

தன்குல விருத்திக் காகத் தன்மனை யெண்ணம் வாய்ப்ப
நன்குல மறையோன் கூடி நலங்கொளிம் மைந்தர்ப் பெற்றான்
புன்புலத் தவர்கள் காம விச்சையாற் புணர்ந்து பெற்றான்
என்பரா னிற்க வன்றாற் கியைமிடி வெளிக்கொண் டன்றே. (௬௫)

பல்லெலாந் தெரியக் காட்டிப் பருவரல் முகத்திற் கூட்டிச்
சொல்லெலாஞ் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி
மல்லெலா மகல வோட்டி மானமென் பதனை வீட்டி
இல்லெலா மிரத்த லந்தோ இழிவிழி வெந்த ஞான்றும். (௬௬)

இருநிலத் தியாவர் கண்ணு மேற்பதை யிகழ்ச்சி யென்ன
ஒருவிய வுளத்தான் காட்டி லுதிர்ந்துகொள் வாரு மின்றி
அருகிய நீவா ரப்புற் றுனிய மாராய்ந் தாராய்ந்
துருவவொண் ணகத்தாற் கிள்ளி யெடுத்துடன் சேரக் கொண்டு. (௬௭)

வந்துதன் மனைகைந் நீட்ட வாங்கிமற் றவற்றைக் குற்றி
அந்தமெல் லியல்பா கஞ்செய் ததிதிக்கோர் பாகம் வைத்துத்
தந்ததன் பங்க யின்று தவலரு முவகை பூத்து
மந்திர மறைகட் கெட்டா மாலடி நினைந்தி ருப்பான். (௬௮)

இற்றிவன் வாழ்க்கைத் தன்மை யிருபத்தேழ் மைந்த ருக்கு
மற்றவப் பாகஞ் கஞ்சி மட்குழி சியைப்பால் வைத்துப்
பற்றுகோ ரிகையான் மொண்டு வாக்கிப்பற் றுமை கண்டு
வெற்றுடம் பாகி நிற்பள் மெலிவள்பி னென்செய் வாளால். (௬௯)

மேற்படி வேறு

ஒருமகவுக் களித்திடும்போ தொருமகவு கைநீட்டு முந்திமேல் வீழ்ந், திருமகவுங் கைநீட்டு மும்மகவுங் கைநீட்டு மென்செய் வாளால்,

---

௬௫. மனை—இடவாகுபெயர். வாய்ப்ப - இயைய. புன்புலத்தவர்கள் - அற்ப அறிவுடையோர்கள். ஆல் - அசை. மிடி - தரித்திரம்.

௬௬. பருவரல் - துன்பம். துணை - இரண்டு. மல் - பெருமை. வீட்டி - கொன்று. இல் - வீடு. இரத்தல் - பிச்சையெடுத்தல்.

௬௭. இரு - பெரிய ; விரிந்த. யாவர் கண்ணும் - எவரிடத்திலும். ஒருவிய - (இரத்தலை) ஒழித்த. அருகிய - காய்ந்து சுருங்கியிருந்த. நீவாரம் - வனநெல். உருவம் - அழகிய. உருவ - உருவும்படி எனினுமாம்.

௬௮. மெல்லியல் - மாது. அதிதி - விருந்து. பங்கு + அயின்று. அயின்று - சாப்பிட்டு. தவல் அரும் - கெடுதலில்லா. உவகை - ஆனந்தம்.

௬௯. இற்று - இத்தன்மைத்து. குழிசியை - பானையை. பால் - பக்கம். கோரிகை - அகப்பை. வாக்கி - வார்த்து. வெறு + உடம்பு - வெற்றுடம்பு.

௭0. உந்தி - வயிறு. பொருமி - விம்மி.

பொருமியொரு மகவழுங்கண் பிசைந்தழுமற் றொருமகவு புரண்டு வீழாப், பெருநிலத்திற் கிடந்தழுமற் றொருமகவெங் ஙனஞ்சகிப்பாள் பெரிதும் பாவம். (எ0)

அந்தோவென் வயிற்றெழுந்த பசியடங்கிற் றில்லையென அழு மாலோர்சேய், சிந்தாத கஞ்சிவாக் கிலையெனக்கன் னுயெனப்பொய் செப்பு மோர்சேய், முந்தார்வத் தொருசேய்மி சையப்புகும்போ தினிலொருசேய் முடுகி யீர்ப்ப, நந்தாமற் றச்சேயு மெதிரீப்பச் சிந் துதற்கு நயக்கு மோர்சேய். (எக)

இவ்வண்ணங் கலாம்விளைக்கு மைந்தர்களை நனிநோக்கி யிரங்கி யேங்கிச், செவ்வண்ணக் கரதலத்தா லணைத்துமடித் தலத்திருத்திச் சிறப்புச் செய்து, மைவ்வண்ணக் கண்ணீரைத் துடைத்துமுகம் வெரிந்புறந்தை வந்து மாம்பல், அவ்வண்ண வாய்முத்தங் கொண்டு நயத் தோர்விதத்தி லாற்றல் செய்வாள். (எஉ)

அடுத்தமனைச் சிறுவொருவ னின்றுநும தகங்கறியென் னட்டா ரென்று, தொடுத்துவினு யினனாலச் சொற்பொருள்யா ததுதானெச் சுவைத்தன் னுய்நீ, யெடுத்துரையென் றிடுமழவுக் குரைக்கிலது செய்யெனிலென் செய்வா மென்று, மடுத்தவஃ தறிந்திலே னெனமற் றொன் றுரைத்ததனை மறக்கச் செய்வாள். (எங)

வேறுமனைச் சிறுனயின்ற பக்கணங்கண் டோடிவந்து விழிநீர் வாரச், சீறுதலி லாதவனை முகம்பார்த்தின் னுனின்ன தின்று னென்வாய், ஊறுதலா லிப்பொழுதே செய்தளித்தி யெனவுடுத்த வுடைதொட் டீர்க்குந், தேறுதலில் சிறுமகவை யெடுத்துமார் பிடை யணைத்துச் சிந்தை நோவாள். (எச)

---

எக. சேய் - குழந்தை. அன்னுய் - தாயே. முந்து ஆர்வத்து - முன்னே வாங்கவேண்டும் என்னும் விருப்பத்தால். மிசைய - உண்ண. முடுகி-விரைந்து; நெருக்கி. நந்தா - இளைக்காமல். சிந்துதற்கு - சிந்துங்கஞ்சிக்கு. நயக்கும் - ஆசைப்படும்.

எஉ. கலாம் - கலகம். செவ்வண்ணம் - சிவந்தநிறம். மைவண்ணம் - கருநிறம். வெரிந் - முதுகு. தைவந்து - தடவி. வண்ணம் - அழகிய. நயத்து- ஆசைகாட்டி. மாம்பல் - (பிள்ளைகள்) வருத்தத்தை.

எங. நுமது - உமது. அகம் - வீட்டில். அட்டார் - சமைத்தார்கள். தொடுத்து வினுயினுன் - தொடர்ந்து (அடிக்கடி) கேட்டான். ஆல் - அசை. மழவுக்கு - குழந்தைக்கு- மடுத்த - சமையல் செய்த.

எச. பக்கணம் - பக்ஷணம்.

குண்டலமோ திரங்கடகஞ் சுட்டிஅயல் மனையார்தங் குழவிக் கிட்டார், புண்டரீ கக்கண்ணு மெனக்குரீ யிடாதிருக்கும் பொறுமை யென்னே, கண்டெடுத்திப் போதிடெனக் கரைமதலைக் கில்லாதான் கடன்றந் தானுக், கெண்டபச்சொல் வார்த்தையென நாளைக்கு நாளைக் கென் றியம்பிச் சோர்வாள். (எரு)

பருப்போடு குளமளித்தி யெனக்கென்று மெனக்கினிய பால் வெண் ணெய்யும், விருப்போடு தருதியென்று மக்களழும் போதெல் லாம் விள்ளா ளொன்று, நெருப்போடு புகையுயிர்க்கு நிரியாணக் கரடமத நெடுங்கை யானைப், பொருப்போடு செறுநர்படை முழு துழக்கிச் சவட்டிவரும் புகர்வேல் வேந்தே ! (எசு)

சிறியசித மணிப்பூணே யன்றிவே றொருபூணச் சேய்கட் கில்லை, வறியமர நாருரியே யுடையன்றி மற்றுடைகண் மருவ வில்லை, வெறியபொழிற் றழைத்தவிலே யுண்கலமல் லாதுகலம் வேறொன் றில்லை, குறியமனை வயிற்புகுமோ ரெறும்பினுக்கு மாங்குணவு கொடுத்தற் கில்லை. (எஎ)

நண்புகூர் தருமன்னப் பால்சிறிதல் லாமன்மற்றோர் நற்பா லில்லை
பண்புகூர் தவைக்குனயர்க் கென்ஞான்றும் பசிதீர்ந்த பாடு மில்லை
கண்புகா விவ்வறுமை கண்டுமறை யவனுமுளங் கவற்சி யில்லை
எண்புகாப் புகழுவன்றன் செயல்கண்டு மனைவிவிருப் பிகத்த லில்லை.

வருவாய்மிக் குடையரா யளவிறந்த செல்வத்தின் வளமுள் ளார்க்கும், ஒருவாவன் பொருமதலை யெண்ணியவா றளித்தோம்ப லொல்லா தாகும், பொருவாவெங் கடுங்கூற்றுய்க் கொடுவிடமாய்

எரு. புண்டரிகம் - தாமரைமலர் போன்ற. கரை - அழுகின்ற. மத லைக்கு - குழந்தைக்கு. இல்லாதான் - பொருளில்லாத தரித்திரவான். எண் தப - கால அளவுகெட.

எசு. உயிர்க்கும் - உமிழும். நிரியாணம் - யானையினது கடைக்கண் ணுக்கு ஒரு சிறப்புப்பெயர். கரடம் - சுவடு. பொருப்பு - மலை. செறுநர் - பகைவர். உழக்கி - கலக்கி. சவட்டி - வாட்டி ; அழித்து. புகர் - நிறம் ; அழகு. குளம் - வெல்லம்.

எஎ. சிதமணி - வெண்மணி; பாலமணி. பூணே-ஆபரணமே. மருவல்-அணி தல். வெறிய - வாசனையுடைய. மனைவயின் - வீட்டில். வயின் - ஏழனுருபு.

எஅ. கூர்தரு - மிகுந்த. பண்பு - குணம். தயர்க்கு - பிள்ளைகளுக்கு. கவற்சி - வருத்தம். எண்புகா - அளவிடமுடியாத. இகத்தல் - கெடுதல்.

எகூ. வருவாய் - வரும்படி. ஒருவா - ஒழியாத. ஓம்பல் - காப்பாற்று தல். ஒல்லாது - முடியாதது. பொருவா - ஒப்பில்லாத. கூற்றுய் - யமனுய்.

வடவையாய்ப் புகுந்து வாட்டத், திருவாகின் றிடுமிடியிற் பன்மகவுள்ளாள்செய்கை யெற்றே யெற்றே. (எகூ)

இவ்வாறு மிடியென்னும் பெருங்கடலு ளழுந்தியுந்தற் கினிமை சான்ற, செவ்வாய்மை யந்தணனை வெறுத்துரையா ளலர்மொழிகள் சிறிதுஞ் செப்பாள், துவ்வாமை மைந்தர்கள்பால் மறந்துமியற் றுள வள்தன் சுகுண மென்னே, எவ்வாறித் துயர்கடல்நீந் துவமெனுமோ ரெண்ணமுளத் தென்று முண்டால். (அ0)

கற்புடைய அருந்ததியே முதன்மடவார் புகழவரும் கற்பின் மிக்காள்,பொற்பமையா மிடியென்னுஞ் சாகரத்து ளழுந்திமனம் புண்ணேயாகிப், பற்பலநாள் செலவொருநா ளமையமறிந் துளந்துணிந்து பண்பிற் போற்றிச், சொற்பெறுநற் புகழ்க்கணவன் முகநோக்கி யெண்ணியவை சொல்ல லுற்றாள். (அக)

வேறு

காமம்வெங் குரோத முலோபந்தீ மோகங் கரைமத மாற்சரியமெனுந், தீமைசே ராறு பகையினைச் செற்றோய்! செம்மணி கொழிக்கும்வெண் டரங்கப், பாமமா கடலுங் காமுறு மேனிப் பண்ணவன் மலரடித் துணையைத், தோமற வுள்ளத் துள்கியேத் தெடுப்போய் துரிசறு மறைமுழு துணர்ந்தோய். (அஉ)

உரைக்கருஞ் சிங்கஞ் சரபம்வெம் புலிக ளுலவைவயோ ரிரண்டுடை வேழ, நிரைப்படச் சரிக்குங் கானத்தி லணுகி நிகழ்சரு கறல்

---

வடவை - ஊழித் தீ. வாட்டத்து - வருத்தத்தில். இருவா கின்றிடும் - அழுத்துகின்ற. மிடி - தரித்திரம்.

அ0. அலர்மொழிகள் - நிந்தனைச்சொற்கள். துவ்வாமை - வெறுப்பு.

அக. அருந்ததி முதன்மடவார் - அருந்ததி, அகலியை, துரௌபதை, சீதை, தாரை, மண்டோதரி, சுரீதி. பொற்பு - நலம். சாகரத்துள் - கடலுள். அமையம் - சமயம்.

அஉ. காமம் - விருப்பம். குரோதம் - விரும்பியபொருள் கிட்டாதபோது உண்டாகுங்கோபம். உலோபம் - தானும் அனுபவியாது பிறர்க்குங் கொடாமலிருக்குங் குணம். மோகம் - பெண்ணிச்சை. மாற்சரியம் - பொறாமை. இவை அறுபகையெனப்படும். செற்றோய் - காய்ந்தவரே; வென்றவரே. தரங்கம் - அலை. பாமம் - பரப்பு. காமுறும் - விரும்பும். பண்ணவன் - கண்ணன். தோம்- குற்றம். துரிசு - குற்றம்.

அங- சரபம் - சிங்கத்தையுங்கொல்லும் பேராற்றலுடைய எண்கால் பறவை. உலவை - கொம்பு. வேழம் - யானை. நிரை - வரிசை. சரிக்கும் சஞ்சரிக்கும். நிகழ் - உதிர்ந்த; அறல் - நீர். வளி - காற்று. அருந்தி - உண்டு.

வளி யருந்தித், திரைக்கடல் வினைக்கோ ராகர மாகுந் தேகத்தை வாட்டுமெய்த் தவத்தோய் !, நரைத்தவோ திமத்தை யுயர்த்தருள் கமல நான்முக னனையதூ யவனே ! (அங)

துணிபடு கந்தை சூழ்ந்தமெய் யினரிற் றுணையிலா நற்றவ முனிவ !, அணிபடு மனையாண் மக்களி லருத்தி யமைக்கிலா யென்று மன் னியர்பால், நணியிரந் தேற்ற லொழித்தனை யடிகே ளானஃ துணர்ந்துளே னெனினும், பிணிபடு முளத்திற் புகலுமென் மொழியைப் பெட்பொடு கேட்டியென் றியம்பும். (அச)

கொழுந்துவிட் டெரியு முத்தழல் வளர்க்குங் கோதிலா முனிவ ! நஞ் சிறார்கள், அழுந்துபட் டேங்க வெழும்பசி யொழிக்க அனமிலா துயங்கின ரந்தோ, முழங்குமீ ரொன்பான் புராணநன் கோர்ந்தோர் மூரலா லுயிர்நிற்கு மென்று, வழங்குவ ரச்சொன் மறிதிரைக் கடல்சூழ் மண்ணிடத் துண்மையே யாமே. (அரு)

நான்மறை யுவரிக் கடல்புடை யுடுத்த நானிலத் துயிரெலா மின்பத், தான்மன மகிழஉ வாழ்கநன் கென்னுச் சாற்றிடு மதற்குமா றின்றிக், கான்வழிந் தொழுகுங் கற்பக மாலைக் கடவுளர் பராவுநற் புகழோய் !, தேன்வழிந் தன்ன மழலைவாய் மைந்தர் சிறப்புற அருளுதற் கடனே. (அசு)

நித்திலங் கோட்டிற் கொழிக்கும்வெண் டரங்க நெடுங்கடல் புடையுடுத் தகன்ற, தத்தொளி மணிச்சூட் டுச்சியி லரவந் தாங்குமிந் நிலவல யத்தில், எத்தகை யினரும் வெருவரு நிரப்பே யிசைந்

கடல் வினை - கடல்போன்ற வினை. ஆகரம் - இடம். நரைத்த - வெளுத்த. ஓதிமத்தை உயர்த்தருள் - அன்னத்தைக் கொடியாகக் கொண்டருளிய. கமலம் - தாமரைமலரில் வாழும். அனைய - போன்ற.

அச. துணி - துண்டு. மெய்யினரில் - உடலுடையவர்களுள். துணை - ஒப்பு. அணி - அழகு. அருத்தி - அன்பு. என்றும் அன்னியர் பால் நண்ணி இரந்து ஏற்றல். அடிகேள் நான் அஃது. பெட்பொடு - அன்போடு.

அரு. அனம் - அன்னம். உயங்கினர் - வருந்தினர். ஈர் ஒன்பான் புராணம் - பதினெட்டுப்புராணம். அவை :—பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பவிடியம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், கந்தம், வாமனம். கூர்மம், மச்சம், காருடம், வாயவியம். மூரலால் - சோற்றால். மறி - மடிகின்ற.

அசு. உவரி - உவர்ப்பு. கான் - மணம். கடவுளர் பராவும் - தேவர்களுந் தோத்திரஞ்செய்யும்.

அஎ. உம்பரும் - தேவர்களும். நித்திலம் - முத்துக்களை. கோட்டில் - கரையில். கொழிக்கும் - ஒதுக்கும். தத்து - பாய்கின்ற. வெருவரும் - பயப்படும். நிரப்பே - வறுமையே.

தவர் பாவியர் செல்வம், ஒத்துற வினைந்தோர் புண்ணிய ரன்றே
வும்பருந் தொழத்தகு மேலோய்! (அஎ)

தரித்திர மிக்க வனப்பினை யொடுக்கிச் சரீரத்தை யுலர்தர வாட்டுந், தரித்திர மளவாச் சோம்பலை யெழுப்புஞ் சாற்றரு முலோபத்தை மிகுக்குந், தரித்திரந் தலைவன் றலைவியர்க் கிடையே தடுப்பருங் கலாம்பல விளைக்குந், தரித்திர மவமா னம்பொய்பே ராசை தருமிதிற் கொடியதொன் றிலையே. (அஅ)

தரித்திரங் களிப்பாங் கடலுக்கோர் வடவை சாற்றுமெண் ணங்கள்வா ழிடமாந், தரித்திரம் பற்ப றுக்கமுந் தோன்றத் தக்கபே ராகர மென்ப, தரித்திர நன்மை சாலொழுங் கென்னுந் தழைவனந் தனக்கழ றழலாந், தரித்திரங் கொடிய வெவற்றினுங் கொடிதத் தகையதை யொழித்தனன் றுமே. (அகூ)

யாதவர் குலத்திற் றோன்றிய அரசர் யாவர்க்கு மதிபனு மிணையின், மாதவ னுடனீ பலகலைக் கடலை வாய்மடுத் தனையென வகுப்பார், ஆதலி னப்பீ தாம்பரன் மருங்கி லணைந்தவன் பாற்பெருஞ் செல்வந், தீதறக் கொண்டு கொடுத்துநஞ் சிறுவர் செல்லலேய்த் தவிர்க்குதல் வேண்டும். (கூ0)

இளமையி னின்னே டிருங்கலை கற்ற வெழிலிபோல் வண்ணனிற் கண்ட, அளவையே யெல்லாப் பேசரும் வளமு மளிக்குவ னையம தின்றுற், பளகறு நேச னொருவனைப் படைத்தல் பருந்தனப் பொதிபெற்றுற் போன்மென், றுளமிகத் தெளிந்தோர் புகலுநன் மாற்ற முண்மையாம் பொய்ம்மையா காதே. (கூக)

---

அஅ. வனப்பினை - அழகினை. தலைவன் - கணவன். தலைவி - மனைவி. கலாம் - கலகம்.

அகூ. பற்பல்+துக்கம். ஆகாரம் - இடம். அழல் தழலாம் - எரிக்கும் நெருப்பாகும். ஒழித்தல் நன்று ஆம்.

கூ0. மாதவனுடன் - கண்ணனோடு. வாய் மடுத்தனை - குடித்தாய். வகுப்பார் - (யாவரும்) சொல்வார்கள். பீதம் அம்பரன் - பொன்னுடை தரித்தோன். செல்லல் - துன்பம்.

கூக. இளமையில் நின்னோடு. எழிலிபோல் வண்ணன் - மேகம் போன்ற நிறத்தையுடைய கண்ணபிரான். நின் - உன்னை. பளகு அறு - குற்ற மற்ற. போன்ம் - போலும்; மகரக்குறுக்கம். மாற்றம் - சொல்.

உலகமோர் மூன்றும் வெருவரக் கொடிய வுஞற்றிய கஞ்சனு தியர்க்கோன், றலகினன் னெறியோ ரின்புற வளிப்போ னுதலி னுங் கவன் பாற்சென், றிலகுறுஞ் செல்வம் வேண்டிடின் நினக்கு மீகுவன் மற்றவன் மறுக்கிற், குலவவன் பாதங் காண்டலே யமையுங் கோதறு வீடுமெய் தலினே. (௩௨)

கண்ணனைத் துளப மாலிகை நிறத்திற் கமலைவாழ் தரவருள் புரிந்த, மண்ணிய மணியைத் தினந்தினம் போற்று மாசறு தவத் தின ருள்ளத், தெண்ணிய வெண்ணி யாங்களிப் பவனை யெய்திநஞ் சிறுருயச் செல்வ, நண்ணிவா வென்று நங்கைசொற் றிடலு நற்றவக் குசேலனீ துரைக்கும். (௩௩)

வேறு

மக்களுக் கிரங்கி வாடு மடத்தகை யணங்கு! கேட்டி.
தக்கமுற் பவத்தி லான்ற தருமநன் கியற்றி னோர்கள்
ஒக்கவிப் பவத்தி லின்ப மொருங்கனு பவிப்ப ரின்றேல்
மிக்கவெந் துயரத் தாழ்வ ரிதற்குள மெலித லென்னே. (௩௪)

துப்பிதழ் மடந்தை நல்லாய் தோன்றிய சீவ ரெல்லாம்
இப்புவி யிடத்துச் சால வெண்ணுவ ரெண்ணி யாங்கே
எப்படி முற்று முற்ற றெம்பிரா னொருவற் கன்றி
அப்படி முற்றிற் கீழ்மே லாம்பகுப் பிரண்டுண் டாமோ. (௩௫)

தேற்றமுற் பவத்திற் செய்த தீங்குநன் கெனுமி ரண்டும்
ஆற்றல்சால் கரும மென்ப ரக்கரு மத்தை நோக்கிச்
சாற்றுமிப் பிறப்பிற் றக்க தரித்திரஞ் செல்வ நல்கிப்
போற்றுவ னுயிரை யெல்லாம் பொலிசுடர்த் திகிரி வள்ளல்.

---

௩௨. வெருவர - பயப்பட. கொடிய - தீமைகளை. உஞற்றிய - செய்த. கஞ்சன் - கிருஷ்ணமூர்த்தியின் நன்மாமன். ஆதியோர் - பூதனை, சகடன், கேசி முதலியோர். அலகு இல் நன்மை நெறியோர். அலகு - அளவு. குலவு அவன் - விளங்குகின்ற அக்கண்ணன். கோது - குற்றம். வீடு - மோக்ஷம். எய்தல் - அடைதல்.

௩௩. நிறத்தில் - மார்பில். கமலை - இலக்குமி. வாழ்தர - எழுந்தருளி யிருப்ப. மண்ணிய - கழுவிய. மணியை - நீலமணியை. உய்ய - பிழைக்க. நண்ணி - பெற்று.

௩௪. மடம் தகை அணங்கு - அறியாமைத் தன்மையுடைய பெண்ணே. பவம் - பிறவி. ஆன்ற - மிகுந்த. மெலிதல் - தளர்தல்.

௩௫. துப்பு - பவளம் போன்ற. இதழ் - உதட்டினையுடைய. புவி - உலகம். சால - அதிகம். எம்பிரான் ஒருவற்கு அன்றி முற்றாது.

௩௬. தேற்ற - தெளிய. ஆற்றல் - வலிமை. திகிரி - சக்கரம்

மைந்தர்கள் தம்மைப் போற்ற வளநிதி வேண்டு மென்றாய்
நந்திய பறவை கான நயந்துறை விலங்கு முன்னா
வந்தபல் லுயிர்க்குச் சேம வைப்புண்டோ வருவா யுண்டோ
எந்திடத் தேனும் போயொன் றிரப்பது தானு முண்டோ. (௯௭)

அல்லது நாளைக் கென்செய் வாமெனுங் கவலை யுண்டோ
எல்லையி லொன்றி னாலொன் றிடிப்புண்டு வாழ்த லுண்டோ
ஒல்லுமவ் வுயிர்கள் தம்மு ளூணவிலா திறந்த துண்டோ
சொல்லரி பரந்த வுண்கட் டுடியிடைப் பேதை மாதே! (௯௮)

கல்லினுட் சிறுதே ரைக்குங் கருப்பையண் டத்து யிர்க்கும்
புல்லுண வளித்துக் காக்கும் புனத்துழாய்க் கண்ணி யண்ணல்
ஒல்லுநின் மைந்தர்க் காவா தொழிவனோ வொழியா னுண்மை
மெல்லியல்! கொண்ட துன்பம் விடுவிடு மறந்து மெண்ணல். (௯௯)

உரைத்தகன் முதலி டப்பல் லுயிர்க்கெலா முணவே யின்று
வரைத்தவவ் வுயிரவ் வாறு வழங்குத லியல்பே யென்னில்
தரைத்தலை வந்த ஞான்றே சலமலம் விடுத்த லுண்டே
விரைத்தபூங் குழலாய் துய்க்கு முணவின்றி மேவு மேகொல். (௧00)

அலரவன் றீட்டி வைத்த ஆயுளி னளவை காறும்
விலகிலா வினைக்குத் தக்க விருப்புணா வெறுப்பு ணாவும்
இலகவுண் டின்றே லின்றா மின்னுயி ருடம்பின் வாழ்தல்
மலர்தலை யுலகத் தென்று வகுப்பர்நூ லுணர்ந்த வல்லோர். (௧0௧)

---

௯௭. நந்திய - பெருகிய. நயந்து உறை - விரும்பி வாழும். முன்னா - முதலாக. சேம வைப்பு - பாதுகாத்த புதையல்; உரிமைப் பொருள். வருவாய் - தரும்படி. எந்த+இடம் - எந்திடம்—அகரந்தொக்கது.

௯௮. ஒல்லும் - பொருந்தும். அரி - இரேகை. துடி - உடுக்கை. பேதை - அறியாமை.

௯௯. அண்டத்து - முட்டையிலும். புனம் - கொல்லையில் விளையும். கண்ணி - மாலை. மெல்லியல் - பெண்ணே—அன்மொழித்தொகை. எண்ணல் - எண்ணாதே.

௧00. கல் முதல் இடம்:—கல், கருப்பம், அண்டம் முதலியன; அவைகளிலுள்ள உயிர் தேரை முதலியன. வரைத்த - எல்லை செய்யப்பட்ட. விரைத்த - வாசனை வீசுகிற.

௧0௧. அலரவன் - பிரமதேவன். உணா - உணவு. விருப்பு உணா - நல்வினைப்பயன்; இன்பம். வெறுப்பு உணா - தீவினைப்பயன்; துன்பம். மலர் தலையுலகத்து இன்னுயிர் உடம்பின் வாழ்தல் இன்றாம்.

ஆதலி னினது மைந்தர்க் காயுளுள் ளளவை காறும்
ஓதிரு வினைக்குத் தக்க வுணவுண்டு புந்தி மாழ்கேல்
ஏதுவந் தாலு மூழா லெனநினைந் திருத்தல் வேண்டு
மாதர்வாண் முத்த மூரன் மயின்மரு ணடைப்பூங் கொம்பே ! (௧0௨)

வளநிதி படைத்தோ மென்றும் வடிவவில் லுடையோ மென்றும்
அளவில்சே யீன்றோ மென்று மனுபவத் தமைந்தோ மென்றும்
இளமையிற் சிறந்தோ மென்று மெழில்நல முடையோ மென்றும்
உளமகிழ் கூர்வர் சற்று முண்மைநூ லுணர்ச்சி யில்லார். (௧0௩)

உயிர்க்கொலை புரித லுண்ணு முணவுமா றாட்டஞ் செய்தல்
அயிர்ப்பிலா நண்பர் மாட்டு மமைதரக் குய்யஞ் செய்தல்
பயிர்ப்புமிக் குறநல் லோரைப் பழித்தல்பொய்க் கரியு ரைத்தல்
செயிர்ப்பிலா லயத்தி டத்துஞ் சென்றுபட் டிமையி யற்றல். (௧0௪)

இவைமுதற் பலவு மாந்த ரியற்றிநாள் கழியா நிற்பர்
அவையெலாம் பொருள்நி மித்த மாகுமப் பொருளைப் பெற்றுக்
குவையுறப் புதைத்து வைத்துக் குதுகுதுப் படைந்து காத்து
நவையுறு பணப்பே யென்னு நாமமும் பெறுவர் மாதோ. (௧0௫)

ஒருசிறு தரும மேனு முஞற்றிடா ரிரப்போர் வந்து
தருநிகர் கரத்தா யென்று சாற்றினுங் கொள்ளா ராகிக்
கருணைசற் றின்றி யெல்லை கடந்திடத் துரந்து மீள்வர்
மருவுபல் கிளையு மோம்பார் வளம்படைத் தென்பெற் றாரால். (௧0௬)

---

௧0௨. ஓது+இருவினை - நல்வினை தீவினை. புந்தி - புத்தி. மாழ்கேல் - மயங்காதே. ஊழ் - கர்மம் ; வினை. மாதர் - அழகிய. வாள் - பிரகாசமுள்ள. முத்தம் - முத்துப்போன்ற. மூரல் - பற்களையும். மயில் மருள் - மயிலும் மருளும்.

௧0௩. வடிவம் இல் - அழகுடைய மனைவி—இல் இடவாகு பெயர். எழில் - அழகு. நலம் - சிறப்பு.

௧0௪. அயிர்ப்பு - சந்தேகம். அமைதர - நிரம்ப. குய்யம் - வஞ்சனை. பயிர்ப்பு - அருவருப்பு. கரி - சாக்ஷி. செயிர்ப்பு - குற்றம். பட்டிமை - களவு.

௧0௫. குவையுற - கும்பலாக ; குவியலாக. குது குதுப்பு - மிக மகிழ்ச்சி. (இரட்டைக்கிளவி) நவை - குற்றம்.

௧0௬. உஞற்றிடார் - செய்யார். தருநிகர் - கற்பகத்தைப்போன்ற (கற்பக விருக்ஷம் கேட்டவற்றைக் கொடுப்பது). கொள்ளார் - ஏற்றுக்கொள்ளார். துரந்து - துரத்தி. கிளை - சுற்றம். ஓம்பார் - பாதுகாக்கமாட்டார்கள். வளம் - செல்வம்.

முறைதவிர் கொடுங்கோன் மன்னர் முனிவிற்கு நனியு மச்சங்
கறைகெழு களவு செய்வார் கரத்திற்கு மழற்கு மச்ச
மறைவறு தாய மாக்கள் வெளவுவ ரென்று மச்சம்
அறைபொருள் பெற்று ரல்ல ரச்சமே பெற்றார் போலும். (௧0எ)

ஒல்லொழுக் கினரைத் தீய வொழுக்கரென் றுரைக்கச் செய்யும்
புல்லொழுக் கினரைத் தூய புலத்தரென் றுரைக்கச் செய்யும்
நல்லகற் புடைய மாதர் நலத்தையஞ் சாமை செய்யும்
பல்வகைத் துயருஞ் செய்யும் பாழ்ம்பொருள் பற்று ளார்க்கே.(௧0அ)

கோடிபொன் னளிப்ப னின்றே கோடிரோர் மாத்தி ரைக்குள்
ஊடிய கிளைக்கோர் வார்த்தை யுரைத்தடை குவனென் றுலுங்
தேடிய கால தூதர் சிமிழ்த்தல்விட் டொழிவ ரேகொல்
வாடிய மருங்கு னங்காய் ! மாண்பொருட் பயன்கண் டாயோ. (௧0௯)

பொருவறு பந்த மெல்லாம் புணர்த்திடுந் தெய்வ சிந்தை
ஒருவமே விட்டு நிற்கு முறக்கமு மிறக்கச் செய்யுங்
கருவினுட் புகுத்து மின்ன கரிசுகண் டதனு லன்றோ
இருநிலத் திடைவெ றுக்கை யென்மனுர் புலமை சான்றோர். (௧௧0)

சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுள்ளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணு ளாருங் குருடராய் முடிவ ரன்றே. (௧௧௧)

---

௧0எ. முனிவிற்கு - கோபத்திற்கு. நனியும் - மிகுதியும். கறை - குற்றம். கெழு - பொருந்திய. களவு - களவு (கபடம்). கரம் - கை. அழல் - நெருப்பு. அறை - சொல்லப்படும். தாயமாக்கள் - பங்காளிகள். வெளவுவர் - அபகரிப்பார்.

௧0அ. ஒல்லொழுக்கினரை-கூடியமட்டும் நல்லொழுக்கத்திலிருப்போரை. தூய - சுத்த. புலத்தர் - அறிவுடையோர். நலத்தை - கற்பிற்கு.

௧0௯. கோடிர் - கொள்ளுதிர் ; கொள்ளுங்கள் ; கொள்—பகுதி. ஊடிய - பிணங்கிய. கிளைக்கு - சுற்றத்தவர்களுக்கு. காலன் - யமன். சிமிழ்த்தல் - கட்டுதல். மருங்குல் - இடுப்பு. மாண் - பெருமை.

௧௧0. பொருவு - ஒப்பு. அறு - அற்ற. ஒருவ - ஒழிய. கரிசு - குற்றம். வெறுக்கை - பொருள் ; வெறுக்கப்படுவது. புலமை சான்றோர் - அறிவு முதிர்ந்த பெரியோர்.

௧௧௧. செருக்கு - கர்வம். மூகராவார் - ஊமையாவர். பறி - பொன் ; காதணி.

பல்கதிர் விரித்துத் தோன்றிப் பாடுசெய் கதிரே போல
மல்லனீ ருலகிற் றோன்றி மறைந்திடு நம்மை விட்டுச்
செல்வமென் றுறுவ தற்குஞ் செல்வமென் றுரைக்கும் பேர்நன்
றல்லலை விளைப்ப தாகா தரும்பெறற் செல்வம் பாவாய்! (௧௧௨)

மதுமடை யுடைத்துப் பாயும் வனத்துழாய்க் கண்ணி வேய்ந்து
விதுமுகப் பதுமை செங்கை மெல்லென வருடச் சேந்து
கதுமெனக் கருது மன்பர் கருத்தினுட் புகுந்து வாழும்
முதுமறைப் பெருமான் பாதம் பெறுதலே மூரிச் செல்வம். (௧௧௩)

கைப்பொருள் பெற்ற ஞான்றே கடவுளா லயத்திற் கீந்து
மெய்ப்படு புராண நூல்கள் விருப்பொடு கேட்டு வந்தும்
வைப்பென இரப்போர்க் கீந்தும் வருபவ ருளரேற் கூற்ற
மொய்ப்புயத் தண்டந் தப்பி முன்னவ னின்பத் தாழ்வார். (௧௧௪)

குடருநெய்த் தோரு மென்புங் கொழுவும்வார் வழும்புந் தோலுந்
தொடருநா டிகளும் வைத்துச் சுமத்திய தடியுங் கொண்டு
படர்தரச் செய்த பவ்வீப் பாண்டமா மடந்தை நல்லார்
இடருடை வடிவ மந்தோ விதற்குமுண் மயங்கா நிற்பர். (௧௧௫)

கோதுற வமைத்த பவ்வீக் குழம்புபஃ றுவாரந் தோறும்
மோதுற வழியுங் கும்ப மூத்திர பாத்தி ரங்கை
யாதுபல் கிருமிக் குப்பை யடர்ந்ததீ நாற்றக் கூடம்
மாதர்மெய் வடிவங் கண்டு மாழ்குவார் மாழ்கி நிற்க. (௧௧௬)

---

௧௧௨. பாடுசெய் - மறைகின்ற. கதிரே - சூரியனே. மல்லல் நீர் - வளம் பொருந்திய கடல். செல்வம் - போவோம்—எதிர்காலத் தன்மைப் பன்மை வினை முற்று. செல்வம் ஆகாது.

௧௧௩. மது - தேன். வனம் - அழகிய. கண்ணி - மாலை. வேய்ந்து - சூடி. விது - சந்திரன். பதுமை - இலக்குமி. வருட - தடவ. சேந்து - சிவந்து. கது மென - விரைவாக. முதுமறை பெருமான் - பழைய வேதப்பொருளாகிய நாராயணமூர்த்தி. மூரி - பெருமையுடைய. "செல்வன் கழலேத்துஞ் செல் வஞ் செல்வமே"—ஞானசம்பந்தர்.

௧௧௪. வைப்பு - பொருள் வைக்குமிடம். "அற்றா ரழிபசி தீர்த்தல் அஃ தொருவன்—பெற்றான் பொருள்வைப்புழி"—திருக்குறள். உவந்தும் - ஆனந் தித்தும். கூற்றம் - யமன். முன்னவன் - இறைவன்.

௧௧௫. குடர் - குடல். நெய்த்தோர் - இரத்தம். கொழு - கொழுப்பு. வழும்பு - பிணம். நாடி - நரம்பு. தடி-தசை. பவ்வி-மலம். பீ - இடக்கரடக்கல்.

௧௧௬. கோது - குற்றம். பல்+துவாரம்=பஃறுவாரம். கையாது - வெறுக்காது. கிருமி - புழு. மாழ்குவர் - மயங்குவர்.

முன்னமெத் தனைபேர் மைந்தர் முறைமைபா ராட்டி னாரோ
இன்னமெத் தனைபேர் மைந்தர் முறைகொள விருக்கின் றாரோ
அன்னமைந் தரைத்தம் மைந்த ரெனலறி யாமை யாகு
மென்னடைக் கரிய வாட்கண் விரைக்கருந் தாழ்கு ழாலே. (௧௧௭)

மதலையைப் பெறுநாட் டுன்பம் வளர்த்திடு நாளுந் துன்பம்
விதலைநோ யடையிற் றுன்பம் வியன்பரு வத்துந் துன்பங்
கதமுறு காலர் வந்து கைப்பற்றிற் கணக்கில் துன்பம்
இதமுற லெந்நாள் சேயா லெற்றைக்குந் துன்ப மாஞல். (௧௧௮)

இளமையி லியற்றுந் தண்ட மேற்றுமெவ் வெறுப்புய்த் தாலும்
உளநடு நடுங்கிப் பின்னி யுற்றுறப் பற்றி நிற்பார்
தளர்வறு பருவஞ் சார்ந்தாற் றந்தைதாய் நடுங்கச் சீறி
அளமரு தம்ம னஞ்செ லவ்வாறே யொழுகி நிற்பார். (௧௧௯)

சாருறு தந்தை யாருந் தாயரு மனந்தஞ் சன்ம
ஆருமோ ரனந்தம் வாய்த்த வுறவுமோ ரனந்தம் பெற்ற
பேருமோ ரனந்தங் கன்மப் பெருக்கமு மனந்தங் கொண்ட
சீருமோ ரனந்த மின்னுஞ் சேர்வது மனந்த மாமால். (௧௨0)

அத்தகு மைந்த ரார்நீ யாரிஃது ரைக்கு நானார்
இத்தரை யிடைக்காப் பாற்றற் கியான்றிரு நெடுமா லல்லன்
கொத்துறு மைந்த ராசைக் கோட்பட்டு வருந்து கின்றாய்
பித்துளார் செய்கை யீது பெரியரிம் மயக்கம் பூணார். (௧௨௧)

நல்வினை யடைந்த காலை நனிநலந் திளைப்பர் நன்மை
அல்வினை யடைந்த காலை யல்லலிற் றுளைவ ரெல்லாந்
தொல்வினை வழிய தாகுந் தோன்றனு பவங்க டந்தம்
புல்வினை யாலென் றெண்ணல் புலமையோ ரிடத்தின் றாமால். (௧௨௨)

---

௧௧௭. தாழ்குழல்—அன்மொழித்தொகை ; விளியேற்றது.

௧௧௮. விதலை - நடுங்குதற் கேதுவான. வியன் பருவம் - காளைப்பருவம் ; (வியன் - பெருமை). கதம் - கோபம்.

௧௧௯. பிள்ளைகள் இளமைப் பருவத்தில் தாய் தந்தையர்கள் தங்களுக்கு எவ்வளவு வெறுக்கத்தகுந்த காரியங்களைச் செய்தாலும் உட்பட்டுப் பயந்து அவர்களை விட்டுப் பிரியாமலிருப்பார்கள். அளமரு - சுழலுகின்ற.

௧௨௧. கொத்து - கூட்டம். ஆசைகோட்பட்டு - ஆசையால் கொள்ளப் பட்டு ; விழுங்கப்பட்டு. கோள் - குற்றமுமாம். பித்து - பயித்தியம்.

௧௨௨. திளைப்பர் - அனுபவிப்பர். துளைவர் - அழுந்துவர். தொல்வினை - முன் வினை.

இம்மையிற் றரும தான மெழில்பெற வியற்றி னோர்கள்
அம்மையிற் றேவ ராகி யமிர்தமுன் னான போகஞ்
செம்மையிற் றுய்ப்பர் துய்த்துத் தீர்ந்தபின் புவியின் மீட்டுந்
தம்மையர் தாய ரென்றே திலர்த்தழீஇப் பிறப்ப ரன்றே. (௧௨௩)

தழைவிரி கற்ப நாடு சார்தலும் புவியில் யாரும்
விழைதகு போகந் துய்த்து மேவலு நல்லூ ழாமாற்
பிழைபட நிரயத் தாழ்ந்து பெருந்துய ருறலு மண்மேற்
குழைமிடி யாதித் துன்பு கூர்தலுந் தீயூ ழன்றே. (௧௨௪)

இத்தகு துன்ப மின்ப மெய்திடா ரறிவு சான்றோர்
பத்தியின் வழாது நின்று பகரருச் சனையி யற்றிக்
கைத்துமுற் செயலெ லாநிட் காமிய மாக்கி யென்றும்
பைத்தகார் வண்ணத் தெம்மான் பதமடைந் தின்பத் தாழ்வார். (௧௨௫)

சளசள வெனவா யூற றடையின்றி யொழுகப் பற்போய்த்
தளர்வொடு மெலிந்து கூனித் தசையற வற்றி முற்றிக்
கிளர்நடை யொழிந்து பாயல் கிடைகொளுங் கிழவுத் தன்மை
அளவுகண் டிலர்கொ லூற்ற விளமையேர்க் ககங்க ளிப்பார். (௧௨௬)

வேறு

பாவ மிகையாற் பூதத்துற் பவிப்பர் நரகர் புண்ணியங்கண்
மேவு மிகையாற் பூதசா ரத்தின் விண்ணோ ருதித்திடுவர்
பூவி னிடத்தவ் வினையிரண்டாற் பூத பரிணா மத்துயிர்கள்
ஆவ வியன்மா னிடம்விருக மனைத்தும் பையு ளாவனவே. (௧௨௭)

---

௧௨௩. தருமம் - அறம். தானம் - கொடை. இம்மை - இப்பிறப்பு. அம்மை - மறுமை. துய்ப்பர் - அனுபவிப்பர். ஏதிலர் - அயலாரை. தழீஇ - தழுவி.

௧௨௪. கற்பம் - கற்பக விருட்சம். நாடு - தெய்வலோகம். விழைதகு - விரும்பத்தகுந்த. நிரயம் - நரகம். குழை - வாடும். மிடி - தரித்திரம். ஊழ் - வினை.

௧௨௫. அருச்சனை - பூசை. கைத்து - வெறுத்து. நிட்காமியம் - பயன் கருதாது செய்தல். காமியம் - பயன் கருதிச் செய்தல். பைத்த - பசுமையான. வண்ணம் - நிறம். பதம் - ஸ்ரீ வைகுந்தம்.

௧௨௬. ஏர்க்கு - அழகுக்கு. அகம் - உள்ளம். ஊறல் - நீர். இடையின்றி - இடைவிடாது. கிடை - படுக்கை; கிடத்தல்.

௧௨௭. பூதத்து - பூததேகத்தில். பூ - பூமி. வினையிரண்டால் - பாவ புண்ணியங்களால். பரிணாமம் - திரிவு. விருகம் - மிருகம். பை - கருப்பை.

பறவை யுரக முதலாய பலவு மண்டத் துதித்திடுமால்
உறவுற் றுதிக்குங் கசிவினிற்கீ டாதி யுருவ வித்திடமண்
அறல்கால் வெயிலுற் றிடவுதிக்கு மறுகாற் பொறியுஞ் சிறைவண்டர்
நறவுண் டிசைபா டிடமலரு நறிய தருக்கண் முதற்பலவும். (௧௨௮)

அவ்வித் துயிர்ப்ப வவற்றரிய யவைமுன் செந்நெ லீறனை
செவ்விப் பலத்தி னசித்திடுமச் சிறந்த பலமா னிடர்க்குணவாய்
எவ்வத் தகற்றி வளர்க்குமகத் திட்ட வுணவு நீரிவற்றை
ஒவ்வப் பருவ மடுப்பவறல் கீழா வுணவு மேலாக. (௧௨௯)

பகுக்கும் பிராணன் பின்வளிபின் பகுக்குஞ் சாரந் துராலி
ரண்டா, வகுக்கு மழலி தயஞ்சாரம் வதிந்து சமான னுற்பயிலுந்,
தொகுக்கு நாடி யெலாமற்றைத் துரால்பன் னிரண்டாய் வெளிக்
கொள்ளு, மிகுக்குஞ் சார மென்பதுமத் துணைத்தாம் விரைப்பூங்
குழன்மாதே ! (௧௩௦)

இயக்க மிரண்டாய் மிடற்றுவழுக் காய்மூக் கிளகு சளிநீராய்
நயக்கட் பீளை யாய்ச்செவிநா நகம்பல் குய்யங் குதமழுக்காய்க்
கயக்கு ரோமத் துளைதோறுங் கசியும் வேராய்த் துரால்கழியும்
வியக்கு மருங்கற் புடையாரும் விரும்பு மேன்மை மெல்லியலே ! ()

---

௧௨௮. உரகம் - பாம்பு. அண்டம் - முட்டை. கீடம் - புழு. கசிவு - வேர்வை. மண் வித்திட. அறல் - நீர். கால் - காற்று. அறுகால் - ஆறுகால். பொறி - புள்ளி. நறவு - தேன். நறிய - வாசனையுள்ள. தருக்கள் - மரங்கள். நால்வகைத் தோற்றம் - சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பீஜம்; (கருவிற் றோன்றுவன, முட்டையிற் றோன்றுவன, வியர்வையிற் றோன்றுவன, வித்திற் றோன்றுவன).

௧௨௯. உயிர்ப்ப - விளைக்க. யவை - ஒரு தானியம்; வாற் கோதுமையுமாம். முன் - முதலிய. பலத்தில் நசித்திடும் - பலன் தந்து அழிந்துபோம்; எவ்வத்து - துன்பத்திலிருந்து. ஒவ்வு அப்பருவம் - சமமாகும் அப்பருவம்; ஜீரணிக்குஞ் சமயம். அறல் - நீர்.

௧௩௦. பிராணன் - பிராணவாயு. பின் வளி - (பிராணனுக்கு) பின்னதாகிய அபான வாயு; (வளி - காற்று). சாரம் பகுக்கும். துரால் - செற்றையை அழுக்கை. அழல் இரண்டா வகுக்கும்; (அழல் - உதராக்கினி) சாரம் இதயம் வதிந்து. வதிந்து - வந்து நின்று. பயிலும் - இயங்கும். நாடியெல்லாம்-தசநாடிகளும்; (இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, புருஷன், குகு, சங்கினி).

௧௩௧. இயக்கம் இரண்டு - மலஜலங்கள்; (மலவகைசில, ஜலவகைசில). மிடற்று - கழுத்தில். வழுக்கு - நிணம்; கொழுப்பு. நயம் - அழகு; விருப்பம். கண்பீளை. குய்யம் - மர்மஸ்தானம்; ஆண்குறி, பெண்குறி. குதம் - மலவாய் - கயக்கு - கசங்கும். வேர் - வியர்வை.

சார மதனிற் றுவக்கதனி லுதிர மதனிற் றதைநிணமூன்
சேருந் தசையி னரம்புமயிர் செறியு நரம்பி னிடைநாடி
யோரு மதிலென் பதின்மூளை யுகிர்மூ ளையிற்சுக் கிலமதனிற்
சாருங் கருவிங் கனமீரா றாகிப் பயிலுந் தன்மைத்தே. (௧௩௨)

வேறு

*பாயும் வெண்புனல் செம்புன லினுமிகப் பரவின்
ஏயு மாண்சுரோ ணிதமிகிற் பெண்ணிகர்த் திரண்டுந்
தோயு மேலலி யாம்†பிதா நுகர்சுவை பற்றிப்
போயுள் வெண்புனற் பட்டயி ரனைகருப் புகுதும். (௧௩௩)

---

௧௩௨. துவக்கு - தோல். ததை - நெருங்கிய. நிணம் - கொழுப்பு. ஒரும்- ஆராயும். என்பதில் - எலும்பிலும். உகிர் - நகம். மூளை - என்பு மூளை ; தலை மூளை. சுக்கிலம் - வெண்புனல்.

௧௩௩. வெண்புனல் - சுக்கிலம் ; (ஆணினுடையது) செம்புனல் - சுரோணிதம் ; (பெண்ணினுடையது) ஆண் ஏயும் - கருவில் ஆண் உருப்பொருந்தும். இரண்டும். சுக்கில சுரோணிதங்கள். நிகர்த்து - சமமாக. அலி - பேடு. நுகர்- புசிக்கும். சுவை - உணவு. அனை - அன்னை.

*ஆண்மிகி லாணாகும் பெண்மிகிற் பெண்ணாகும்
பூணிரண் டொத்துப் பொருந்தி லலியாகுந்
தாண்மிகு மாகிற் றரணி முழுதாளும்
ஆண்வச மிக்கிடில் பாய்ந்தது மில்லையே.—**திருமந்திரம்**

†"பஞ்சாக்கினிவித்தையி னியல்பாவது:—பார்ப்பனச்சாதி முதலியவற்றிற் பிறந்து வேள்வி முதலிய நல்வினைசெய்தவுயிர்கள், அவ்வினையின் பயனுகர்தற்பொருட்டிவ் வுடம்பினீங்கிச் சூக்கும தேகத்தோடுந் துறக்கத்திற் சென்று இன்பமனுபவித்தற்குரிய பூதசாரவுடம்பெடுத்து ஆண்டு வைகுங் கடவுளரோடு வாழ்ந்து நல்வினைப்பயன்களனுபவித்துத் தொலைந்தவழி, மீள நிலத்தின்வந்து பார்ப்பனச்சாதி முதலியவற்றிற் றோன்றி வினைகளையீட்டு தற்கேதுவாய் எஞ்சிநின்ற வினைச்சேடத்தால் அவ்வுடம்பினை நீங்கிச் சூக்கும தேகத்தோடு மேகமண்டலத்தினையெய்தி, ஆண்டுநின்று மழைத்தாரையினோடு கூடி நிலத்தினை யடைந்து நென்முதலிய பைங்கூழின் விரவி நின்று, **அவையுணவாய்ப் பரிணமித்த வழி அவற்றோடுகூடித் தந்தை வயிற்றுச் சென்று ஆண்டுச் சுக்கிலமாய்ப் பரிணமித்து**, அதனோடுகூடித் தாய்வயிற்றிற் சென்று ஆண்டுக்கருவாய்ப் பரிணமித்துப் பார்பபனச்சாதி முதலியவற்றிற் குரித்தாகிய தூலதேகத்தோடு நிலத்திற்றோன்றுமென்றுணர்க. ஆன்மாத் தூலவுடம்பினீங்கிய வழித்துறக்கமும், மேகமண்டலமும், நிலனும், தந்தையும், தாயும் என்னும் ஐந்து நிலைக்களத்தும் வைகித் தோன்றுதலின் இவை ஐந்திடமும் அங்கியாகவும், அவற்றினெய்திய ஆன்மா ஆகுதியாகவும் இங்ஙனம் தியானிப்பதொரு சாதகமாகலின் இது பஞ்சாக்கினி வித்தை"— சிவஞான முனிவர்.

உயிர்ப டுங்கரு வற்றைநாட் குன்றியை யொக்கும்
இயலு மைந்திற்புற் புதமொக்கு மேழின்மெல் லூனும்
பயிற ரும்பதி னொன்றிற்செந் நீர்பர வூனுஞ்
செயிரி லையைந்திற் பேசமுற் றிடுஞ்சிறி தாக. (௧௩௪)

சிரங்க ளம்புற மென்புநாண் முப்பதிற் செறியுங்
கரங்க டாளடி மருங்குமு னிருமதி காணுந்
தரங்கொள் சந்திகள் வடிவின்மும் மதியிடைச் சாரும்
வரங்கொண் மாதராய்! விரல்களுன் மதியிடை மருவும். (௧௩௫)

நாசி யானன நகங்கன்னங் குய்யநன் னகையூன்
பேசு மைந்திலா றினிற்கன்னத் துளைபெறு மேழில்
ஆசி லாதபல் குறிகளும் விளங்கிட வமையு
நேச மாய்க்குத முந்திமற் றங்கமு நிரம்பி. (௧௩௬)

ஓங்கி டும்பிரா ணன்முதல் வளிகளு முற்றுத்
தேங்கி டும்மதி யெட்டினற் றுய்நுகர் செறியூண்
பாங்கு றுஞ்சுவை யுந்திவா யகட்டுறும் பற்றி
வாங்கு மின்பதுன் பங்களு மனுதியா னுகரும். (௧௩௭)

உற்றி டுங்கருப் பாசயப் பையுறுத் துதன்முற்
சொற்றி டுந்துய ரழுந்திமுன் னிகழ்ச்சியுந் தோன்றப்
பற்றி டும்புவிப் பிறந்துநன் னெறிநின் று பவநீர்
வற்றி டச்செய்வா மென்றுள்ளிப் பிறக்கும்பின் மறக்கும். (௧௩௮)

---

௧௩௪. அற்றை நாள் - அன்றைய தினத்தில். குன்றி - குன்றிமணி. புற்புதம் - நீர்க்குமிழி. பயில்+தரும். செந்நீர் - இரத்தம். செயிர் - குற்றம். ஐ ஐந்து - இருபத்தைந்து.

௧௩௫. களம் - கழுத்து. புறம் - முதுகு. மதி - மாதம். மருங்கு - இடுப்பு. தரம் - உறுதி.

௧௩௬. ஆனனம் - முகம். நல்நகை - அழகிய பற்கள். கன்னம் - காது. குய்யம் - மர்மஸ்தானம். குதம் - மலவாய். உந்தி - கொப்பூழ். ஆசு - குற்றம்.

௧௩௭. பிராணன் முதல் வளிகள் - பிராணன் முதலிய வாயுக்கள். அவை-பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிரகான், தேவதத்தன், தனஞ்சயன். அகட்டு உறும் உந்திவாய் - தாய் வயிற்றிலுள்ள கொப்பூழ் மூலமாக. மனம்+ஆதி=மனாதி.

௧௩௮. முன் - முதலாக. (கருப்பாசயப்பையுறுத்தல், அதில் சலம் பூரித்தல், உதராக்கினியால் வேவல், பிராகிருதவாயு முறித்துத் தள்ளுதல், யோனித்துவாரத்தால் நெருக்குண்டல்). முன்னிகழ்ச்சி - முற்பிறவியுணர்ச்சி. பவநீர் - பிறவிக்கடல்.

### வேறு

இவ்வித மின்ப முத்தி யெய்திடுக் காறு மாறு
தெவ்வநோ யுறும்பிறக்கு மிறக்குமித் துயர மோர்ந்த
செவ்விய மனத்தர் மாயன் றிருவடிப் புணையாற் சென்மப்
பௌவமே யுழையுங் கடப்பர் பரிந்துசோ காப்பர் மற்றோர். (௧௩௯)

நாடிக ளுரோமந் தந்த நகங்கள்வீ ரியமே பித்த
நீடிய கபநிணந்தோ னெய்த்தோரூன் மூளை யின்ன
கூடிய விரண்டைந் நூறு தொடியெனக் கூறு நூல்கள்
ஓடிய விரண்டி யக்கக் குறுத்திய வளவை யின்றே. (௧௪௦)

புலைத்தொழில் பயின்ற விந்தப் புன்புலாற் சுமையை நாளு
நிலைத்ததென் றெண்ணி யெண்ணி நேயம்வைத் துறுகாப் பாற்றி
மலைத்தலைக் துழல்வ தெல்லா மடமையோர் செய்கை யாகுஞ்
சிலைத்தொழில் விளக்கி யாங்குச் செறிகரும் புருவப் பாவாய்! (௧௪௧)

தரித்திர மென்று பல்காற் சாற்றினை யெதிர்ம றுத்தல்
பரித்திடு மச்சொ றன்மைப் பன்மைமுற் றாக வல்லோர்
விரித்துரை பொருணீ சற்றும் விளங்கிட வுணர்ந்தா யல்லை
அரித்தடங் கருங்கண் மாதோ யாதலி னிலைத்த தன்றால். (௧௪௨)

பாற்கட லடுத்த மீனப் பால்விரும் பாது மற்ற
வேற்குமா விரும்பி னுற்போ லெம்பிரான் றிருமுன் சார்ந்து
நாற்கதி கடக்கு மின்பச் செல்வத்தை நண்ணி டாமற்
சேற்கருங் கண்ணாய்! துன்பச் செல்வமோ நண்ணு வேன்யான். ()

---

௧௩௯. எவ்வ நோய் உறும் - கேவலமான துன்பங்களை அடையும். ஓர்ந்த - ஆராய்ந்துணர்ந்த. செவ்விய - குற்றமில்லாத, நேர்மை. பௌவம் - கடல். பரிந்து சோகாப்பர் - வருந்தித் துக்கிப்பர்.

௧௪௦. நாடிகள் - நரம்புகள். தந்தம் - பற்கள். நெய்த்தோர் . உதிரம். தொடி - பலம். இரண்டு இயக்கம் - இடைகலை பிங்கலை ஓட்டம்.

௧௪௧. சிலை தொழில் விளக்கி - வில்லைப்போல் வளைந்து. ஆங்கு—உவம உருபு. செறி - மயிர் நிறைந்த.

௧௪௨. எதிர் மறுத்தல் பரித்திடும். எதிர் மறைப்பொருளைக் கொண்டுள்ள. தரித்திரம்—எதிர்மறைத் தன்மைப் பன்மைமுற்று. ஓரிடத்திலுந் தங்கியிரோம் என்பது பொருள். தரித்திரம் என்பது வடமொழியாயினும் ஈண்டுத் தென்மொழியாகக் கொண்டது நயங்கருதி யென்க. அரி - இரேகை.

௧௪௩. சேல் - சேல் மீன்போன்ற. மீன் அ பால் எனப் பிரிக்க.

மானமற் றிழிவு பூண்டு வளமனைக் கடைதோ றெய்தி
ஈனமுற் றிரந்தி ரந்திவ் வுடல்பருத் திடச்செய் தாலுந்
தூநகைக் கரிய வாட்கட் சுடர்த்தொடீ ! நிலைப்ப தன்று
பேனமார் வெள்ள நீரிற் பிறந்திடுங் குமிழி போலும். (கசச)

நன்றியி லுடலைப் போற்ற னன்றுளார் செய்கை யன்று
பன்றிகண் மலத்தழுந்தி மாசுக மென்றுற் போல
ஒன்றுமிக் குடும்பச் சேற்றி லுழன்றிடே னுழன்றி டேன்யான்
என்றுரைத் திறுத்தான் பற்றி லிருந்தவ வேறு போல்வான். (கசரு)

அந்தண னுரைத்த மாற்ற மனைத்துமஞ் செவியி லேற்று
நந்தலி லுண்மை யீதென் றுணர்ந்துந்தா னயந்து பெற்ற
மைந்தர்பால் வைத்த ஆசை மயக்கறு ளாகிப் பின்னும்
புந்தியின் விரும்பிப் பாதம் போற்றிநின் றிதனைக் கூறும். (கசசு)

வேறு

கலைமுழு தோர்ந்து கரிசெலா மறுத்த காந்தனே பருமணி யரவத்
தலைகிடந் திமைக்குந் தாத்திரி யதனிற் சாற்றருந் தக்கநன் முயற்சி
உலைவறப் புரியா வொருவனுக் கெங்ஙனுற்றிடுஞ்செல்வநன் னிலத்தை
நிலைபெற வுழுது வித்திலான் றனக்கு நீள்பய னுற்றிடுங் கொல்லோ.

மானிட னொருவன் றனக்கருஞ் செல்வம் வாய்க்கவென் றனுதின முயற்சி
தானுஞற் றுவனேற் கடவுளு மதனைத் தந்தளிக் குறுமதா லன்றோ
ஆனபே ரறிஞர் திருவினை முயற்சி யாக்குமம் முயற்சியில் லாமை
ஈனமா ரின்மை புகுத்திடு மாலென் றியாருநன் குணர்தர நவில்வார்.

மக்களே தேவர் நரகரென் றறிஞர் வகுக்குறு முயர்திணை யாதி
தக்கபல் லுயிர்க்குஞ் சக்கர முதலாச் சாற்றுமைம் படைகரத் தேந்து
மைக்கடன் மேனி வள்ளல்வேண் டியவீ வானென வாய்மலர்ந் தனையான்
மிக்கபன் முயற்சி புரிகிலார் தமக்கவ் விண்ணவன் யாங்ஙன மருளும்?

---

கசச. சுடர்த்தொடீ - ஒளி பொருந்திய வளையலை யணிந்தவளே—அன்மொழித்தொகை. அளபெடுத்து விளிபெற்றது. பேனம் - நுரை.

கசரு. இறுத்தான் - விடையளித்தான். பற்று இல். ஏறு - ஆண் சிங்கம்.

கசசு. மாற்றம் - மறுமொழி. நந்தல் - கெடுதல்.

கசஎ. கரிசு - குற்றம். காந்தனே - நாயகனே. அரவம் - ஆதிசேடன். தாத்திரி - பூமி. உலைவு - அச்சம் ; கெடுதி.

கசஅ. உஞற்றுவனேல் - செய்வானாயின். "முயற்சி திருவினையாக்கும் முயற்றின்மை, இன்மை புகுத்திவிடும்"—திருக்குறள். திருவினை - செல்வத்தை. இன்மை - தரித்திரம்.

கசகூ. ஐம்படை - சக்கரம், வில், வாள், தண்டு, சங்கு. இவைகளின் பெயர்:—சுதரிசனம், சாரங்கம், நாந்தகம், கௌமோதகி, பாஞ்சசன்னியம். மை - கரிய. வேண்டிய ஈவான். வள்ளல் - கண்ணன்.

செயத்தகு முயற்சி செய்திடிற் செயிர்தீர் செய்யவண் மணாளனுமிரங்கி
வியத்தக வேண்டு மியாவையு மளிப்பன் விளம்புறு முயற்சிசெய் யானேல்
நயத்தகு போக மளித்திடா னென்று நானிலத் தறிஞர்நன் குரைப்பர்
உயத்தகு நெறிமா லடியுன லென்றே யோர்ந்தமா தவப்பெருங் கடலே.

முன்புநல் வினைசெய் தவர்முயற் றின்றிமுன் னியவெலாமுண்பரென்னி
லின்பவா லரியே முதலுப கரண மெலாமினி துடையவ ரேனும்
வன்புற மடுதன் முயற்சியில் லாமை வயிற்றெழு பசித்தழ லவிய
நன்பத மாமோ மறைமுழு துணர்ந்த நற்றவக் குணப்பெருங்குன்றே !

கடவுளீ குவனென் றெண்ணிநித் தியமுங் கருதுறு முயற்சி செய் யானேல், அடலுறு செல்வ மடைகுவ னேகொ லருங்கலத் திட்டபா லடிசின், மிடலுடைக் கரத்தா லெடுத்துண் டெங்ஙன் வீங்கும்வெம் பசிப்பிணி யொழிப்பன், உடல்பவந் தனக்கோ ராகர மாகு முடனனி வாட்டுமெய்த் தவத்தோய்! (கருஉ)

முன்பொரு கராவான் மொய்வலி சிந்து மும்மதக் கறையடிக் கயமும், வன்புடைப் பொன்னன் புரிகொடு மையினுன் மனமெலி பிரக லா தநனும், அன்பினோ டேத்தி யழைத்தலா னன்றே யலைகடல் வண் ணன்வந் தாண்டான், என்பரா தலினுன் முயற்சிசெய் பவருக் கெய் தரும் பொருளுமொன் றுளதே. (கருங)

கமலமே லவனைத் தோற்றிய வுந்திக் கமலன்வந் தொடரெனப் பகரு, மும்மலவே ரறுத்த முனிவர்வேண் டாம லெங்ஙன முயறிரு வளிப்பன், விமலவே தியநீ யுளத்தின் வேண்டுவையேல் வேண்டிய

கருO. செயிர் - குற்றம். செய்யவள் - திருமகள். மணாளன் - நாராயண மூர்த்தி. உனல் - தியானித்தலே.

கருக. முயற்று - முயற்சி—தொழிற்பெயர். முயல்—பகுதி ; து தொழிற் பெயர் விகுதி ; லகர தகரங்கள், றகரமானது சந்தி. முன்னிய - நினைத்த. வால் - வெண்மை. அரி - அரிசி. அடுதல் - சமைத்தல். பதம் - அன்னம்.

கருஉ. அடல் - வெற்றி. பால் அடிசில் - பாற்சோறு. மிடல் - வலிமை. உடல் பவம் தனக்கு ஓர் ஆகரம் ஆகும் உடல். உடல் - வருத்துகிற. பவம் - பிறவி. ஆகரம் - இடம்.

கருங. கராவால் - முதலையால். வலிசிந்தும் - வலிகெட்ட. கறை அடி கயம் - உரல் போன்ற காலையுடைய கஜேந்திரன். பொன்னன் - இரணியன் (இரணியம் - பொன்) என்பார் ஆதலினுல். எய்து அரும் - கிடைத்தற்கரிய.

கருச. கமலமேலவனை - தாமரைப்பூ மேலிருக்கின்ற பிரமதேவனை. உந்திக்கமலன் - நாபிக்கமலத்தையுடைய நாராயணமூர்த்தி. மும்மலம் - ஆணவம், கன்மம், மாயை. முயல் திரு. திரு - அருட்செல்வம். விமலம், அமலம் - பரிசுத்தம்.

வேண்டியாங் களிக்கும், அமலநால் வேத மாமுசாத் திரநன் காய்ந்த வர் தமிழ்சிறந் தவனே. (கருச)

முன்னரும் பற்பன் முனிவரர் பன்னுண் முயலரு மருந்தவ முயன்று
பன்னரும் பேறு மாதவ னளிப்பப்படைத்தனர் பவளவாய்ச் செங்கால்
அன்னவே றுயர்த்த நான்மறை முனிவ னனையநற் பெருந்தவ ரேறே!
உன்னருஞ் செல்வ மன்னமா லீய வுறிற்புக ழன்றிவே றிலையே.(கருரு)

அப்பரந் தாம னிணையடி யன்றி யாதர விலையென வறிந்தாய், செப்பரு மாசை பொய்கொடுஞ் சீற்றஞ் செற்றுளா யெனினும்விண் ணுளு, நப்புரந் தரனு தியர்தொழு மன்னு னண்ணுறுந் துவாரகை யணுகி, ஒப்பில்பல் வளனுந் தருதியென் றிரக்கி லூறுங்கொலோ தாழ்வதி னுணர்ந்தோய்! (கருசு)

மாசறு கற்பின் மடவரல் தனக்கு வகுக்கருங் கொழுநனே யுலகம்
ஆசறத் துதிக்குங் கடவுளா மென்னு வரியநான் மறைசொலு மதனுற்
பாசமுற் றிரியப் பலகலை யொருங்கு பளகறத் தேர்ந்தநீ யெனக்குப்
பேசருங் கடவு ளாமெனி யேனைப் பெட்பொடு புரத்தல்நின் கடனே.

மடமையேன் றனக்குக் கடவுளு நீயே வகுக்கரு மிறைவனு நீயே
அடலுறு தானந் தவமுதல் யாவு மாற்றுநின் பணிவிடை யன்றோ
மடலவிழ் துளப மாலிகை புனைந்த வாசுதே வன்பத மலரைத்
திடமுற நெஞ்சத் துன்னிவல் வினையைச் சிதர்தரச் செகுத்தமா மறையோய்!

வெண்டிரை வீசுங் கருங்கடற் புடவி விண்ணகம் பாதல மிவற் றுண், மண்டிய வுயிர்க ளெவற்றையுங் கமலை மார்பினன் புரப்பனே யெனினும், அண்டர்கள் புகழு மைய! நீ யுயிர்த்த அரியமக் களையு மென் றனையும், பண்டைநூற் கியையப் பாதுகாத் தளித்தல் பகருநின் கடனெனப் பகர்ந்தாள். (கருகூ)

---

கருரு. முன்னம் - முற்காலத்திலும். பன்னரும் - சொல்லுதற்கரிய. பேறு - பாக்கியம். மாதவன் - நாராயணன். அன்ன ஏறு - ஆண் அன்னம். நான்மறை முனிவன் - பிரமதேவன். அனைய - போன்ற. ஏறே-ஆண்சிங்கமே. உன்னரும் - நினைத்தற்கரிய. அன்னமால் - அந்த விஷ்ணு. உறின் -பெற்றால்.

கருசு. சீற்றம் - கோபம். செற்று - வென்று. நப்புரந்தரன் - நல்ல இந்திரன்; (நக்கீரனுர் என்பதுபோல). அன்னுன் - அப்பரமன்.

கருஎ. மடவரல் - பெண். கொழுநனே - கணவனே. இரிய - கெட, ஓட. மாசு - ஆசு. பளகம் - குற்றம். பெட்பு - அன்பு. புரத்தல் - காத்தல்.

கருஅ. வகுக்கரும் - சொல்லுதற்கரிய. இறைவன் - தலைவன், கணவன். அடல் உறு - வலிமை மிகுந்த. மடல் - இதழ். செகுத்த - அழித்த.

கருகூ. புடவி - உலகம். மண்டிய - நிறைந்த. கமலை - இலக்குமி. அண்டர்கள் - தேவர்கள். பண்டைநூற்கு இயைய-பழய வேதாகமங்களுக்குப் பொருந்த.

### வேறு

இடம்பா டிலாமை முகன்சாம்பி யிரங்கக் கூறுந்
திடம்பா டுகொண்ட பெருங்கற்பின தேமொழிக்கு
மடம்பா டறுத்துக் கலைமுற் றுணர் வாய்மை சான்றோன்
உடம்பா டிலாமை யுடையா னலனாயி னானே. (கசுO)

கண்ணன் றனைக்கண் ணுறிற்கண் ணுங்கதியு நன்கு
நண்ணுஞ் சிறுமைந் தர்களா லுளநையு மின்னாள்
எண்ணு நிரம்புமெனச் சில்பொழு துள்ளத் தெண்ணி
ஒண்ணு மனையாண் முகநோக்கி யுரைக்க லுற்றான். (கசுக)

தெய்வங் குரவ னரசன் திருமுன்னர்ச் செல்வோர்
மெய்வந்த அன்றா ரருள்வேண்டி விரும்பு தேனுங்
கைவந்த பெற்றுச் செலீஇக் காண்குவர் கண்ணன் முன்பு
மைவந்த கண்ணாய் ! இனிதென் கொடுவல்லை செல்வல். (கசுஉ)

### வேறு

தேறுங் ரப்புளோர் வாழ்ந்திடு செல்வர்பாற் செல்வரேல் மதியார்கண்
மறுவு றுத்தவ மானமு மியற்றுவர் மானமுள் ளவராயிற்
குறுகு மவ்வவ மானத்தா லுயிர்விடு கொள்கையிற் றலைநிற்பார்
நறுமலர்க்குழால் ! ஆதலா லவரிடை நண்ணனன் றெனவெண்ணல்.

இருங்க டற்புவி யிடத்தினில் லாரையெல் லாருமெள் ளுவரென்று, ஒருங்கு ணர்ந்தமுன் னோருரைத் திட்டவஃ துண்மையென் றுளங்கொண்ணீ, நெருங்கு பற்றுறு தாய்தந்தை யருநிரப் புறுநரை வெருப்பாரேற், சுருங்கு மன்பின்மற் றெவர்வெறுத் திடாதவர் தூநகை மலர்க்கொம்பே ! (கசுச)

---

கசுO. இடம்பாடு - செல்வம்; இடம் - செல்வம். பாடு - முதனிலை திரிந்த தொழிற்பெயர். முகன் - முகம்; போலி. சாம்பி - வாடி. தேன்+மொழிக்கு. மடம் பாடு - அறியாமை. வாய்மை - உண்மை. உடம்பாடு இலாமை உடையான் அல்லன் ஆயினான் - உடன்பட்டவனானான்.

கசுக. கண் - பெருமை. கதி - முத்தி. உள்ளம் நையும் - மனம் வருந்தும். எண்ணும் - எண்ணமும். ஒண்ணும் - இசைந்த.

கசுஉ. குரவன்-குரு. விரும்பு எது ஏனும். கைவந்த-கையிற்கிடைத்ததை. கொடு-கொண்டு. வல்லை-விரைவாக. செல்வல்-போவேன்-எதிர்காலவினைமுற்று.

கசுங. தெறும் - வருத்தும். நிரப்பு - வறுமை; தரித்திரம். மறு உறுத்து-குற்றஞ்சுமத்தி. நண்ணல் - சென்றடைதல். எண்ணல் - எண்ணாதே; எதிர்மறை ஒருமை ஏவல்.

கசுச. இரு - பெரிய. எள்ளுவர் - இகழுவர். கொள்கீ. நீரப்பு உறுநரை-தரித்திர மடைந்தவர்களை. நகை - பல்.

ஒன்றும் வேண்டல ராயினுஞ் செல்வர்பா லுறுமிடி யவர்சார்ந்தால்
இன்று வந்தமை யாதினைக் கருதிமற் றிவரென வுளத்தெண்ணிக்
கன்று மாறுபல் குறிப்புரை நவிற்றுவர் காதலி னவர்பாற்போய்
மன்ற வந்தது சிறுமையே யிவர்க்கன்றி மற்றிலை யறிபாவாய்! (௧௬௫)

இந்த வாறிவ னுரைத்தலென் னெனவுளத் தெண்ணிடே லெக்காலும்
பந்த மானிடர் தன்மையிற் றெனப்படாந் தேன்பரம் பொருளாய்
சந்த மாமறைத் தலைவன்பா லுறுவது தகாதென்றே னலன்கண்டாய்
எந்த வாறுகை யுறையிலா தையன்முன் யான்படர் குவன்மாதே. ()

எழுக டற்கொரு புன்னுனிப் பனித்துளி யென்னுவ கையைச்செய்யுங்
கொழும லைத்துணைத் தேவுக்கம் மலைத்துணை கொண்டுபோற் றிட லுண்டோ
செழும திக்குச்சின் னூலிழை பறித்திட்டுச் சிந்தித்த துறல்போல
முழுமு தற்குமே தாவது கையுறை கொண்டுமுன் னுறல்வேண்டும்.

வேறு

என்றுரைத்த கொழுநனுரை கேட்டுமகிழ் ந்திதற்கென்னே செயலென் றெண்ணி, அன்றுமுத லுபவாசந் தானிருந்து மாமுனிவ னரிதிற்றேடி, நன்றளிக்கு நெல்லினிற்றன் னொருபாகம் வேறெடுத்து நலக்கச் சேர்த்துத், துன்றியவந் நெல்லையொரு தினத்தறலி னனைத்து வறுத் தெடுத்துத் தூய்தா. (௧௬௮)

கறையிட்டு நனிகாண வுலக்கைகொடு மிக்கிடித்துக் கரிசு போக்கி
நிறையிட்ட வவலாக்கிக் குசேலமுனி கந்தையினி னேடி யோர்பான்
மறையிட்ட வொழுங்குடையாள் முடிந்துகொடுத் தினிதுபோய் வருகவென்றாள்
சிறையிட்ட பவநீங்கும் வழிகண்டோன் வழிதேடிச் செல்ல லுற்றான்.

---

௧௬௫. மிடியவர் - வறியவர். கன்றுமாறு - மனம் வருந்தும்படி. மன்ற - மிகுதியும்.

௧௬௬. இற்று - இத்தன்மைத்து. கையுறை - காணிக்கை. படர்குவன் - செல்வேன்.

௧௬௭. உவகை - சந்தோஷம். கொழுமை - செழுமை. மலைத்துணை - மலையளவு. மதி - சந்திரன். கன்னியர்கள் விரைவில் தங்கட்கு நற்கணவன் வாய்க்குமாறு நிலாச்சோறு சமைத்து தங்களது முன்தானையில் சிறிது நூலிழை பறித்திட்டுச் சந்திரனை வழிபடுவது மரபு. உறல் - அடைதல். "மலையளவு தெய்வத்திற்குக் கடுகளவு கற்பூரம்"—ஒரு பழமொழி.

௧௬௮. உபவாசம் - விரதம். துன்றிய - சேர்ந்த, மிகுந்த. அறல் - நீர். தூய்து ஆ - சுத்த முடையதாக.

௧௬௯. கறை - உரலில். நனி - மிகவும். கரிசு - உமி தவிடு முதலியன. மறையிட்ட - வேதத்தில் சொல்லப்பட்ட. பவம் - பிறவி.

முன்னுநெடுந் தூரவழி நடந்தறியான் றோட்கோப்பு முதலா தாரந்
தன்னமுமி லான்பதிகர் தமைவினவி வழிதேர்ந்து தடையி லாது
பன்னெடுங்கா வதம்போகிக் கவர்வழிகண் டுளமயங்கிப் பரிந்து நின்றங்
குன்னிமதிப் பாலிதுசெல் வழியெனத்தேர்ந் தவணின்று முற்றுச் செல்வான்.

வேறு

வாங்குவிற் கருங்கார் மருங்குற மருண்டு மையலம் பிடியென வளைந்த
தேங்குமும் மதம்பெய் களிற்றினைக் கண்டு சிறுபிடி யூடவக் களிறு
பாங்குறப் போகி யடிக்கடி வணங்கிப் பரிந்துபைங் கற்பகந் தளிர்த்த
பூங்குழை யூட்டிப் புலவிதீர்த் தணைக்கும் பொருப்புகள் பற்பல கடந்தான்.

மிக்கசெந் தழலின் சிகைக்கொழுந் தெழுந்து மெய்வெதுப் புறு மென வஞ்சித், தக்கபொன் னுலகத் துறைகுநர் முகிலைத் தடையென நவின்றுகிழ்த் தாழ்த்தி, ஒக்கலோ டொளிர்கற் பகநிழன் மருந்துண் டுயிரையோம் புறக்கடுங் கொடுமை, தொக்கநீள் பரப்பு நிரப்புறு முரப்புச் சூழல்கள் பற்பல கடந்தான். (கஎ௨)

ஆறலைத் துயிருண் டுடல்கவர்ந் தொளிக்கு மவர்க்குமவ் வுடல்கருதாது
கோறலைக் குறித்த குடாவடி சீயங் கொடுவரி வேங்கையெய் ஆமான்
மாறலைத் தெழும்போ தகமுத லாம்பன் மாக்கட்கு மிடமதாய்க் கொடுமை
காறலைச் செய்யா தடர்ந்துயர்ந் திருண்ட காடுகள் பற்பல கடந்தான்.

மாங்கனி யுதிரப் புலியடிப் பைங்காய் வாழைக்கூன் குலைபல முறியத்
தேங்கனிந் தொழுகும் வருக்கைகள் கிழியச்செறிகமுகம்பழஞ்சிதறத்

கஎ0. தோள் கோப்பு - தோளில் கோப்பது ; கட்டுச்சோறு. தன்னமும் - சிறிதும். பதிகர் தமை - வழிச்செல்வோர்களை. கவர் - கிளை. பரிந்து - துன்பப்பட்டு. மதிப்பால் உன்னி - அறிவால் யோசித்து.

கஎக. வாங்கு - வளைந்த. வில் - வானவில். கார் - மேகம். மருந்து - பக்கத்திலே. மையல் - மோகமுள்ள. அம் - அழகிய. பிடி - பெண்யானை. களிற்றினை - ஆண்யானையை. ஊட - பிணங்க. பாங்கு - பக்கம். குழை - தழையை. புலவி - ஊடல். பொருப்புகள் - மலைகள்.

கஎ௨. வெதுப்புறும் - சுட்டெரிக்கும். பொன்னுலகம்-சுவர்க்கம். உறைகுநர் - வாழுந்தேவர்கள். ஒக்கல் - சுற்றத்தார். மருந்து - அமிர்தம். முரம்பு சூழல்கள் - பருக்கைக் கற்கள் நிறைந்த மேட்டுநிலம்.

கஎ௩. ஆறு அலைத்து - வழி பறித்து. உடல் - பொருள். கோறலை - கொல்லுதலை—தொழிற்பெயர்; கொல்—பகுதி. குடாவடி - கரடி. சீயம் - சிங்கம். கொடுவரி - வளைந்த வரிகளையுடைய. எய் - முட்பன்றி. ஆமான் - காட்டுப்பசு. போதகம் - யானை. பல்மாக்கட்கும் - பலமிருகங்களுக்கும். கால்+தலை=காறலை.

கஎச. புலி அடி - புலி அடிபோன்ற. கனிந்து தேன் ஒழுகும் வருக்கைகள் - பலாப்பழங்கள். முப்புடைக்காய் - தென்னங் காய்கள். பகடு -

தாங்குழுப் புடைக்கா யுடைதரப் பகட்டுத் தகட்டகட்டிளவரால்பாயும்
வீங்குநீர்ப் பழன முடுத்ததே யங்கண் மென்மெலப் பற்பலகடந்தான்.

காமனும் பெண்மை யவாவுறப் பொலிந்த காளையர் மார்பிடைவயிரத்
தோமறு பூணிற் றந்திழல் வேற்றுத் தோகைய ரெனநினைந் தூடிக்
கோமள மடவார் மறுகிடை யெறிந்த குரூஉமணிப் பூணவட் குறுகு
நாமநீ ளிருளை நக்கிவா ளெறிக்கு நகரங்கள் பற்பல கடந்தான்.

துன்னிய வஞ்ச மழுக்கறல் வெகுளி தோன்றிடா வகையுளத் தொடுக்கி, நன்னய முடையார் போல்வெளிக் காட்டி நாட்டிய திறை யுநன் குய்த்துச், சென்னிமே லிருகை குவித்துநன் கொழுகிச் செயி ருறு சமயமுற் றறிந்து, மன்னரை யலைக்குங் கொலைத்தொழிற் குறும்பர் வாழ்நகர் பற்பல கடந்தான். (கஎசு)

கந்தமென் மலரும் வயிரமும் பொன்னுங் கரிப்பெரு மருப்பும் வெண் முத்துஞ், சந்தனக் குறடுங் காழகிற் றுணியுந் ததைமயிற் பீலியு மெடுத்துச், சிந்துவெண் டரங்கக் கரங்களா லிருபாற் செறி குலை யுடைத்துவார் பரவை, நந்தலில் வயிறு கிழிதரப் பாயு நன்னதி பற்பல கடந்தான். (கஎஎ)

## வேறு

மெய்த்தசையி லாதொடுங்கி மேலாய தவத்தொடுங்கான்
எய்த்தினிநா மற்றைவழி யெவ்வாறு கடப்பதென
உய்த்துணர்ந்து மென்மெலச்செ லுறுபொழுது மறுகும்வகை
மொய்த்தெழுதீ வெப்புடற்று முதிர்வேனில் வந்ததுவால். (கஎஅ)

---

பெருமை. அகட்டு - வயிற்றையுடைய. பழனம் - வயல். உடுத்த - சூழ்ந்த.

கஎரு. தோம் - குற்றம். கோமளம் - இளமை. மறுகிடை - தெருவில். குரு - ஒளி. பூண் அவண் குறுகும். நாமம் - அச்சந்தரும். நக்கி - உண்டு; ஒழித்து. வாள் - பிரகாசம்.

கஎசு. அழுக்கறல் - பொறாமை. வெகுளி - கோபம். திறை - பகுதி; வரி. உய்த்து - செலுத்தி. செயிர் உறு - ஊனம் நேரிடுகிற. அலைக்கும் - வருத்துகின்ற, கொல்லுகின்ற. குறும்பர் - சிற்றரசர்கள்.

கஎஎ. கரி - யானை. மருப்பு - தந்தம். குறடு - கட்டை. காழ்அகில்துணி - வயிரமுள்ள அகில் கட்டைத்துண்டு. ததை - நெருக்கிய. தரங்கம் - அலை. குலை - கரை. வார் - நெடிய - பரவை - கடல். நந்தல் - கெடுதல்.

கஎஅ. எய்த்து - மெலிந்து. மறுகும் - மருளும்; மனங்குழம்பும். உடற்றும் - வருத்தும். முதிர்வேனில் - முதுவேனில்; ஆனி ஆடி.

மண்கொதிப்ப வறல்கொதிப்ப வளிகொதிப்ப வெண்ணுவார்
ளெண்கொதிப்ப நறுநீழ லியைமனைவிட் டகலார்க்குங்
கண்கொதிப்பக் கரங்கொதிப்பக் கால்கொதிப்பக் கற்பகஞ்சார்
விண்கொதிப்ப வவ்வேனில் வெம்பருவ மேவியதால். (கஎசு)

சூலவுதனை விழுங்குவகை கொண்டகோட் கினமாகி
யிலகரவ நாடனைத்து மிதுசமய மெனப்பரிதி
பலகதிரும் புகுந்துடற்றப் பண்ணியசெவ் வழிபோலு
நிலமகள்த னுடல்வெடிப்ப நேர்தோன்றும் பெருங்கமர்கள். (கஅ0)

நலக்கதிர்செய் நம்பகையை நான்மறையோ ரிதுகொண்டே
விலக்குவர்நாங் கொண்டிருப்பின் மேவாதெப் பகையுமெனப்
புலத்தமைத்துக் கவர்ந்தான்போற் பொய்கைகுளங் கானதிமுன்
நிலத்தமைத்த நீரெல்லா நெடும்பரிதி கவர்ந்தனனால். (கஅக)

தேள்ளுபுன னசைமிக்குத் திரிமருப்பி னிரலையெலா
நள்ளரிய பேய்த்தேரின் பின்றொடர்ந்து நலிந்திடுமால்
வள்ளலென வெளிக்காட்டி வஞ்சிக்கு முலோபர்கள்பின்
எள்ளுவறு மைப்பிணியோர் தொடர்ந்துதொடர்ந் திளைப்பதுபோல்.

புறங்கொடாத் திறல்வீரர் பூம்போர்வை நெகிழ்த்தகற்றிப்
பிறங்குசாந் தாற்றிவிடு வளிக்களித்துப் பெரிதுவப்பார்
அறங்கொண்மா தருங்கணவ ரங்கையன்றித் தடவுதலின்
மறங்கொள்குயஞ் சிவிறிவிடு வளிதடவ வம்பவிழ்ப்பார். (கஅரு)

சாலோடை வாவிகுள முதலாய கணக்கிலவன்
மேலோடும் புனல்வறப்ப வவற்றுறைமென் பறவைகணற்
பாலான வொருவனிடம் பற்றியினி துண்டகிளை
ஏலாத்துன் பவனுறுங்கா லிரிவதெென விரிந்தனவால். (கஅச)

---

கஎசு. அறல் - நீர். வளி - காற்று. எண் - மனம்—ஆகுபெயர்.

கஅ0. கோட்கு - கிரகத்திற்கு (இராகுகேதுக்கள் என்னும் பாம்புகளுக்கு) அரவம் - நாகம். பரிதி - சூரியன். கமர்கள் - வெடிப்புகள்.

கஅக. பகையை-மார்தேயரை. இவர்கள் நாடோறுஞ் சூரியனை மறைப்பவர்கள். இவர்களை அறிஞர்கள் சந்தியாவந்தன ஜலத்தால் வென்றொழிப்பார்கள்.

கஅஉ. இரலை - மான். புனல் - நீர். நசை - வேட்கை; அவா. பேய்த்தேர் - கானற்சலம். வள்ளல் - வரையாது கொடுப்போர்.

கஅரு. சாந்தாற்றி - விசிறி. வளிக்கு - காற்றுக்குத் (தம்முடம்பை). குயம் - முலை. சிவிறி - விசிறி. வம்பு - கச்சை.

கஅச. அவல் - பள்ளம். நற்பால் ஆன - நல்வினையுடைய. கிளை - பந்துக்கள். இரிவதென - ஓடுதல்போல.

வாவிகாள் குளங்காணீர் வற்றினீர் முன்னளித்த
மேவியவின் சுவைப்புனலால் வீங்கினே மிதுபொழுது
பாவியவப் புனலளிப்பேம் பற்றுமெனக் கால்வதுபோற்
பூவியன்மக் கள்ளுடம்பு பொங்குவெயர் நீர்காலும். (௧அ௫)

நண்ணருமிக் கொடும்பருவ நகைதருவெள் ளொளிகாட்டி
எண்ணுமனங் கரைந்துருக விந்தியமு முடனுருகத்
துண்ணெனும்வெந் தீவெப்பந் தொகுமைந்தர்க் குறுத்துதலால்
வண்ணமணி நகைத்துவர்வாய் மடநலார் தமைப்பொருவும். (௧அ௬)

வாங்குகட லகம்புகுந்து வடவைவதி வதையறிந்தாம்
ஓங்குகடல் சுவற்றவென வுலகுரைத்த லதுபொய்யே
தேங்கியவிப் பருவத்தாற் செறிவெப்பிற் காற்றாமை
ஆங்குகுளி ரிடந்தேடி யஞ்சியொளித் ததுபோலும். (௧அ௭)

இத்தகைய வேனிலிடை யிரும்பசியா லறமெலிந்தும்
மைத்ததரு நிழலிருந்தும் பள்ளமெலா மாராய்ந்துந்
தத்துபுனல் கிடையாமைத் தாகத்தால் வாய்புலர்ந்துஞ்
சுத்தவிர தத்தவநற் றுறைநின்றோன் செல்லுமால். (௧அ௮)

சுடர்மறைய வூரகத்துத் துயில்வதற்கா ரிடங்கொடுப்பார்
படர்வழிச்செ னமக்கிவ்வூர்ப் பழக்கமுடை யாரிலரென்
றிடருடைய மனத்தினனா யெதிர்கோயின் முன்னுறங்கி
அடர்கதிரோ னெழுமுனெழுந் தாறுணர்ந்து நடந்திடுமால். (௧அ௯)

கானவேன் முட்டைத்துக் காலூன்ற முடியாமல்
ஈனமார் முள்வாங்குங் கருவியுமங் கில்லாமன்
மானமார் பெருந்தவத்தோன் மனமெலிந்து முகம்புலர்ந்தோர்
தானமே வுறவிருந்துட் டதையவிவை யெண்ணுவான். (௧௯0)

---

௧அ௫. குளங்காள் நீர்வற்றினீர். பாவிய - பரவிய. கால்வது - கொப்பளிப்பது.

௧அ௬. இந்தியம் - இந்திரியம். மைந்தர்க்கு - ஆடவர்களுக்கு. வண்ணம் - அழகு. மணி நகை - முத்துப்போன்ற பல். துவர் - பவளம். பொருவும்-ஒக்கும்.

௧அ௭. சுவற்ற - வற்ற. வதிவதை - வசிப்பதை. வெப்பிற்கு ஆற்றாமை.

௧அ௯. சுடர் - சூரியன். ஆறு - வழி.

௧௯0. கானவேல்,முள்தைத்து. உள் ததைய.

சேறிதருதன் மனப்படியே செய்தலொரு வற்கினிதாம்
அறிவுறுக்குங் குருமொழிகேட் டாக்கலஃதினுஞ் சிறப்பாம்
முறிதருமே திலர்சொற்கேட் டுஞற்றன்முனி துயர்மனையாள்
வறியவுரை கேட்டுஞற்றன் மண்ணிறனேர் கெடுதியுறும். (கஙக)

இதுதெரிந்து மனையாட்டி யியம்பியசொற் குடம்பட்டு
முதுவெயிலா லுடல்வருந்தி மூர்ச்சித்து மெலிகின்றேன்
கதுமெனப்பல் காவதங்கள் கடந்தேன்வண் டுவரைநகர்
எதுவெனக்கேட் டிடிலெவரு மின்னுநெடுந் தூரமென்பார். (கஙஉ)

மற்றைவழி யுங்கடக்க வலியின்றோர் விதத்தினுல்
உற்றிடினிங் கருங்கடல்யா ருதவிகொடு கடந்திடுவேன்
பொற்றவது கடப்பினுமப் புரத்திலெனை யார்மதிப்பார்
சற்றுமுண ராதுவழித் தலைப்பட்டே னென்செய்தேன். (கஙங)

மாமகுட முடிமன்னர் நணிவந்து காத்திருக்குங்
கோமகன்றன் றலைவாயி லெவ்வாறு குறுகுவல்யான்
பூமலியு மவ்வாயில் புகினுமவன் றிருச்சேவை
ஏமமுற வேழையேற் கெளிதுகிடைத் திடுங்கொல்லோ. (கஙச)

கற்பகத்தைச் சார்ந்தும்வறுங் காய்கேட்கத் துணிவார்போற்
பொற்புடைய வெம்பிரான் றிருமுனரி திற்புகுந்தும்
அற்பமுறு திருவேட்ட லறிவேகொ லெனவுளத்துப்
பற்பலவு மெண்ணியயர் வுயிர்த்தானப் பனவனே. (கஙரு)

என்னதுய ரினியுறினு மிதுகாறும் வந்தமையான்
முன்னமனைக் குரைத்தபடி முற்றும்போய் வருவலெனத்

---

கஙக. ஏதிலர் - அயலார். முனி - வெறுக்கத்தக்க. மண் இறல் நேர் - உலகு முடிதலையொத்த.

கஙஉ. கதுமென - விரைவாக.

கஙங. பொற்ற - மெதுவாக. புரம் - பட்டணம். தலைப்படல் - தொடங்கல்.

கஙச. ஏமம் - இன்பம்.

கஙரு. அப்பனவன் - அந்தப் பிராமணன்; குசேலன். வறுங்காய் - பயனில்லாக்காயை. அரிதில் - கஷ்டமாக. அற்பம் உறு. திரு - செல்வத்தை. வேட்டல் - விரும்புதல். அயர்வு - சோர்வு. உயிர்த்தான் - பெருமூச்சு விட்டான்.

கஙசு. மனைக்கு - மனைவிக்கு.

தன்னுளத்தி லெண்ணியெழீஇத் தனிநடந்து சின்னுளின்
மின்னுமிழ்கார் முகில்பயிலு மேல்கடலின் கரையிறுத்தான். (கசுசு)

என்னவெடுத் துரைத்தசுக முனிவனிணை யடிவணங்கி
மன்னர்மணி முடியிடறும் வார்கழற்கால் வயவேந்தன்
நன்னர்கொண் மற்றைக்கதையு நடத்துகென நனியிரப்ப
இன்னலிலா துயர்ந்தமுனி யின்புறவாய் மலர்கின்றுன். (கசுஎ)

குசேலர் மேல்கடலடைந்த அத்தியாய முற்றிற்று

ஆகச்செய்யுள் - உஉரு



கசுஎ. வயம் - வெற்றி. வேந்தன் - பரீக்ஷித்து. நனி இரப்ப - பெரிதும் வேண்ட. இன்னல் - துன்பம். வாய்மலர்தல் - சொல்லுதல்.

இரண்டாவது

# குசேலர் துவாரகை கண்டு தந்நகர்ப்புறமடைந்த அத்தியாயம்

கடவுள் வணக்கம்

பஃறொடை வெண்பா

பூமேவு நான்முகத்தோன் போற்றித் துதிப்பதுவுந்
தேமேவு பைந்துளவஞ் சேரக் கமழ்வதுவும்
மாமேவு மாமறைகள் வாழ்த்தப் பொலிவதுவுந்
தாமேவு வஞ்சச் சகட முதைத்ததுவுந்
தீமேவு மாரணியஞ் சென்று திரிந்ததுவுந்
தூமேவு மன்பருளந் தோன்றப் பயில்வதுவும்
பாமேக வண்ணன் பதம். (க)

ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவந்த

ஆசிரியத்தாழிசை

கோர்பைங் கொண்ட னிகர்திருமே னிப்பெருமான்
பாராா நின்றசெழும் பங்கயச்செம் போதடிகள்
தேர்வார் வினையிருட்குச் செங்கதிரோ னென்பரால்.

காயாம்பூ வொத்த கதிர்த்திருமே னிப்பெருமான்
பாயா ரணமணக்கும் பங்கயச்செம் போதடிகள்
ஆய்வார் வினைவாரிக் கார்வடவை யென்பரால்.

வற்றாக் கடனேர் வருதிருமே னிப்பெருமான்
பற்றார் கழலொலிக்கும் பங்கயச்செம் போதடிகள்
உற்றார் வினையரவுக் கோருவண மென்பரால். (உ)

---

க. தா - வலிமை. மேவு - பொருந்திய. சகடம் - (வண்டில்) வண்டிலுருவ மாய் வந்தவன் ; சகடாசுரன். ஆரணியம் - காடு. பா - பரவிய.

உ. கொண்டல் நிகர் - மேகத்தை யொத்த. பார் ஆர - பூமியிற்பொருந்த. செழும்பங்கயப் போது - செந்தாமரைப்பூ. தேர்வார்-தெளியும் அன்பர்கள். கதிரோன் - சூரியன். ஆரணம் - வேதம். வாரிக்கு - கடலுக்கு. உவணம் - கருடன்.

### வெள்ளொத்தாழிசை

திண்ண மென்று தீய தீர
எண்ண மொன்றி யென்று முள்வர்
கண்ணன் கமலக் கழல். (௩)

### ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவந்த வெள்ளொத்தாழிசை

பற்றிற் பழுதியற்றும் பந்தத் துழனெஞ்சே
செற்றச் சகடுதைத்தான் றாள்குறியா தென்கொலோ
முற்ற வொழிந்து விடல்.

துன்று பவம்விளைக்கும் பந்தத் துழனெஞ்சே
கன்று குணில்கொண்டான் றாள்குறியா தென்கொலோ
என்று மொழிந்து விடல்.

நந்தும் வினைக்கிடனும் பந்தத் துழனெஞ்சே
யுந்தி மருதிடந்தான் றாள்குறியா தென்கொலோ
வந்தோ வொழிந்து விடல். (௪)

### வெளி விருத்தம்

வேதந் தெரித்தானும் வேதத்திற் குள்ளானுங் கண்ணன்போலும்
போதந் தருவானும் போந்தொளியாய் நிற்பானுங் கண்ணன்போலும்
ஏதந் தவிர்ப்பானு மெவ்வுயிருங் காப்பானுங் கண்ணன்போலும். ()

### வேறு

முற்று விளமென் றளிர்க்கரத்தான் முனிவி லாது மெல்லெனச்செம்
பொற்று மரையிற் குடியிருக்கும் பூவை வருடுந் தொறுஞ்சேக்கும்

௩. தீய தீர - தீமை ஒழிய. எண்ணம் - மனம் (ஆகுபெயர்). ஒன்றி - ஒருமைப்படுத்தி; ஐக்கியஞ் செய்து. கழல்—இரண்டாம் வேற்றுமை உருபு தொக்கது. திண்ணம் - உறுதி; மெய். உள்வர் - கருதுவர்; தியானிப்பர்.

௪. ஒழிந்து - மறந்து. முற்ற ஒழிந்துவிடல் என். துன்று - மிகுதியாக. பவம் - பிறவி. குணில் - குறுந்தடி. (சகடு - சகடாசுரன். கன்று - வச்சாசுரன். மருது - நளகூபரன், மணிக்கிரீவன்.—விரிவு பாகவதத்திற் காண்க.)

ரு. ஏதம் - குற்றம். போலும் - இசைநிறை அசை; ஒப்பில் போலியுமாம்.

சு. முனிவு - வெறுப்பு; கோபம். பொன்+தாமரை=பொற்றாமரை. பூவை - இலக்குமி. வருடும் - தடவும். சேக்கும் - சிவக்கும். வில் - ஒளி. தார் -

விற்று ரணிநற் பதமிரண்டும் வியன்பா நிலந்தீண் டிடநடந்து
கற்று மேய்த்த சிற்றுயன் காமர் சீர்த்தி வாழியவே. (௬)

வேறு

பலதலை யனந்த னேடெண் பகடுமெய்ப் பாறி நிற்ப
மலர்தலை யுலகந் தாங்கு மாலையந் தடந்தோள் வேந்தே
குலமறை யுணர்ச்சி மிக்க குசேலன்சென் றிறுக்கப்பட்ட
நலமலி நெய்தல் சார்ந்த நளிர்கடல் வளமிக் கன்றே. (௭)

சீருறு சங்கம் வாய்ந்து செழுங்குவ லயமுண் டாக்கி
ஓருறு கமட மீன வுருவங்கொண் டுயிர்க ளோம்பி
ஏருறு பவளச் செவ்வா யியைந்துபொன் புணர்ந்து தண்ணெனக்
காருறு நிறமுங் காட்டிக் கண்ணனைத் துணையும் வாரி. (அ)

வாங்குதெண் கடலின் மீன முதலுயிர் மருவ லாலே
வீங்கிய புலவு மாற்றி மிளிர்தரப் பூத்த நெய்தல்
தேங்கிய மணங்கான் றன்ற சிறப்பினைச் செய்யுந் தம்மைத்
தாங்குறு களைக ணானோர் தம்பழி மறைப்பார் போல. (௯)

அலையெறி மணியு முத்து மலகும்பன் மீனு மற்றுந்
தலைமயக் குற்று முன்றிற் சார்தரு குப்பை யாகக்

---

பூ மாலை. வியன் - விரிந்த. கன்று + ஆ = கற்று. சிறு ஆயன் - சிறிய இடைய னாகிய ஸ்ரீ கண்ணபிரான். காமர் - விரும்பும்.

௭. அனந்தனோடு - ஆதிசேஷனோடு (அனந்தன் - அழிவில்லாதவன்) எண் பகடும் - அஷ்டதிக்கு யானைகளும். எய்ப்பு - (பூமியைத் தாங்கும்) இளைப்பு. இறுக்கப்பட்ட - தங்கிய. நெய்தல் நிலம் (கடலைச் சார்ந்தது). நளிர் - குளிர்ந்த.

அ. இது கண்ணனுக்குங் கடலுக்குஞ் சிலேடை. வாரி - கடல். சங்கம் - சங்கு. குவலயம் - உலகம்; நீலோற்பலம். கமடம் மீனம் உருவம் கொண்டு - கூர்ம (ஆமை) மச்சாவதாரங்களைக் கொண்டு; ஆமைமீன் முதலியவற்றைத் தாங்கி. ஓம்பி - காத்து. பவளச்செவ்வாய் - பவளம்போலச் சிவந்தவாய்; பவளம் உண்டாவதற்குரிய இடமாய். பொன் - இலக்குமி; பொன். துணையும் - ஒக்கும்.

௯. களைகண் ஆனோர் - ஆதரவா யிருப்பவர்கள். வாங்கு - வளைந்த. மருவல் - வாழ்தல். புலவு - புலால் நாற்றம். மிளிர்தர - விளங்க. நெய்தல் - நெய்தல்மலர். கான்று - வீசி.

௧௦. அலகும் - பலகறையும். தலைமயக்குற்று - எங்கும் நெருங்கி; ஒன்றோடொன்று கலந்து. முன்றில் - முற்றத்தில். மருங்கு குலை இயற்றும் -

குலைமருங் கியற்றும் பெண்ணை மடற்புனை குரம்பை தோறும்
வலைவளத் தொழின்மேற் கொண்டு வாழ்வன பாரதச் சாதி. (க0)

அயில்விழிப் பகையா மென்ப தறிந்துயிர் செகுப்பார் போலக்
குயின்மொழிப் பரவ மாதர் குரைகடன் மீன்கள் போழ்ந்து
வெயிலிடை யுணக்கிப் பின்னும் விற்றுள மகிழ்வார் யாரே
செயிருறு சீற்றத் தெவ்வைச் சிதைத்துளத் துவகை செய்யார். (கக)

இணங்குகைத் தோணி யேறி யெறிவலை வீசு மார்ப்பும்
அணங்குறப் பட்ட பன்மீ னருங்கரை யுய்க்கு மார்ப்பும்
உணங்கன்மீன் கவர்புள் ளோப்பு மார்ப்புமிக் கோசை போக்கி
வணங்குநுண் ணிடையா ரம்மீன் மாறிடு மார்ப்பு மல்கும். (கஉ)

மீன்விலைக் கொளவச் சேரி விருப்பொடு புகுந்த மைந்தர்
வானவிற் போலு நெற்றி வலைச்சியர் கண்மீன் பாய
மானமால் கொண்டன் னார்சொல் வரம்பினைக் கடவா ராகி
ஈனமிக் குறப்பொன் னெல்லா மீந்தளித் தவையே கொள்வார். (கங)

கோழுஞ்சுறுக் கொழுமீ னோடு கூட்டிநன் கருத்த வாங்காங்
கெழுங்கரும் பெண்ணை தோறு மிறக்குகண் மாறப் புக்கார்
செழுங்கதிர்த் தாளக் குப்பை சேயொளிப் பவளஞ் சால
வழுங்கலில் பரத மாக்க ளிடைக்கிடை யளிப்பக் கொள்வார். (கச)

பெருகிய செல்வ ருள்ளும் பயனிலா ருளராற் பேணி
அருகிய செல்வ ருள்ளும் பயனுளா ருளரென் றுய்ந்து
பெரியவர் சொலுஞ்சொற் றேற்றும் பெரியநீர்க் கடலு மாங்காங்
குரியவெண் மணற்சிற் றூரற் கேணியு முரிய நீரால். (கரு)

---

பக்கங்களிலே குலை தள்ளுகிற. பெண்ணைமடல் புனை - பனமடல்(ஓலை)களால் மூடிய. குரம்பை - குடிசை. பாரதச்சாதி - பாரதச்சாதியார்; வலைஞர்.

கக. அயில் - வேல். செகுப்பார் - அழிப்பார். பரவர் - வலைஞர். உணக்கி - உலர்த்தி. செயிர் - வயிரம். சீற்றம் - கோபம். தெவ்வை - பகைவரை. உவகை - சந்தோஷம். செய்யார் யார்.

கஉ. ஆர்ப்பு - சந்தடி. அணங்கு - வருத்தம். புள் - பறவைகளை. ஓப்பு - ஓட்டும். வணங்கும் - வளையும். மல்கும் - நிறையும்.

கங. மானம் மால் - பெருவேட்கை; மோகம்.

கச. பெண்ணை - பனைமரங்கள். இறக்கும் கள் மாற. தாளம் - முத்துக்கள். சேய் - சிவந்த. அழுங்கல் - வருத்தம். இடைக்கு இடை - அளவுக்கு அளவு.

சிற்றிடை வலைச்சி மார்கள் தெருத்தொறுங் கூறி விற்கும்
வற்றன்மீ னாற்றம் போக்கு மவர்மணிக் குழற்றா மம்பூ
பற்றுபு பரதர் கோட்டிற் பரப்புமீ னாற்றம் போக்கும்
மற்றவர் திணிதோள் வேய்ந்த நெய்தலங் கண்ணி மாதோ. (கசு)

மருங்கிலாப் பரத்திமார்கண் மடநடை கற்பான் வேண்டி
ஒருங்குவந் தடைந்தாற் போல வுயர்கரும் புன்னைச் சேக்கை
அருங்குலப் பார்ப்பி னோடும் பெடையொடு மன்னந் துஞ்சுங்
கருங்கொடி யடம்பு சூழ்ந்த கைதையங் கானல் வேலி. (கஎ)

தினைமுதல் வரகு முன்செஞ் சாலிமுன் விளைக்கு மூன்று
வனைபுகழ் நிலத்தார் நன்கு மழைவளம் வேண்டி நிற்பர்
பனைசெறி யிந்நி லத்துப் படுமுப்பு விளைப்போ ரென்றும்
வினைதவா தூற்ற மிக்க வெயில்வளம் வேண்டி நிற்பர். (கஅ)

இவ்வகை வளங்க ளெல்லா மினிதுகண் விட்டு நோக்கிச்
செவ்விய விறும்பூ தெய்திச் சீகரந் துளிப்பத் தன்மெய்
யொவ்வமெல் வளிதண் ணென்ன வருடவோர் புன்னைநீழல்
ஔவிய மவித்த மேலோன் சற்றிருந் தயர்வு யிர்த்தான். (கக)

இக்கல முகைப்பாற் குப்பொன் னிம்மியு மீதற் கில்லை
மிக்கவன் கேளா துய்ப்ப விரும்புறு சிறப்பு மில்லை
நக்கசெங் கமலக் கண்ணன் சேவைக்கு நடக்கி றேனென்
றொக்கமெய் யுரைத்திட் டானு முண்மையென் றுள்ளங் கொள்ளான்.

---

கசு. கோட்டில் - கரையில். வேய்ந்த - சூடிய. நெய்தல் கண்ணி - நெய்தற் பூமாலை.

கஎ. மருங்கு - இடை. சேக்கை - பறவை தங்குமிடம்; படுக்கை (கூடு). பார்ப்பு - குஞ்சு; (பறவைகளின் இளமைப் பெயர்). கருமை - பெருமை. அடம் பங்கொடி. கைதை - தாழம்பூ. கானல்வேலி - கடற்கரையிலுள்ள சோலைகள்.

கஅ. தினை முதலியன குறிஞ்சி நிலத்திலும், வரகு முதலியன முல்லை நிலத்திலும், செஞ்சாலி முதலியன மருத நிலத்திலும் விளைவன. வினைதவாது ஊற்ற - தங்கள் தொழில் கெடாமல் செய்ய.

கக. சீகரம் - (கடல்) நீர்த்துளி. வளி - காற்று. ஔவியம் - பொறாமை. அயர்வு உயிர்த்தான் - இளைப்பாறினான்.

௨0. கலம் உகைப்பார்க்கு - தோணி செலுத்துபவனுக்கு. இம்மி - மிகச் சிறிய அளவு; தொள்ளாயிரத்தறுபதில் ஒருபாகம்; மத்தங்காய் புல்லரிசி என்பர் நச்சினார்க்கினியர். மிக்கவன் - மீகாமன். உய்ப்ப - செலுத்த. நக்க - மலர்ந்த.

என்செய்வா நன்சொற் கூறி யிரப்பதே துணிவென் றெண்ணிப்
பொன்செய்த மலர்ப்பூம் புன்னை நிழலினின் றெழுந்து போந்து
வன்செயன் மீகாற் சார்ந்து மனமிரங் குரைபல் கூறி
நன்செய லேறி நின்று னடைக்கல மேறி னானே. (உக)

கூம்புடைக் கலமீ கானுற் குரைகடல் கிழிய வோடித்
தேம்பலி றுவார கைக்குச் செலீறுறை யிறுத்த லோடும்
பாம்பணைக் கடவுள் பாத பங்கய முள்ளத் துள்வோன்
ஓம்பலுற் றிறங்கு வாரோ டிறங்கின னுவகை யெய்தி. (உஉ)

**வேறு**

பான லந்துவ ரைப்பன்மி னார்கண்வா
யான லந்துவ ரைப்பற் றுறுதவன்
வான லந்துவ ரைப்படுப் போன்பின்வாழ்
கான லந்துவ ரைப்பதி கண்ணுற்றான். (உங)

தருமந் தன்னகந் தங்கிப் பொலிவுறத்
தெருமந் தன்னகு பாவஞ் சிதைதர

---

உக. மீகான் - மீகாமன்; கப்பலோட்டி.

உஉ. கூம்பு - பாய்மரம். தேம்பல் இல் துவாரகைக்கு. தேம்பல் - துன்பம்; கெடுதி. செல்+துறை=செலீறுறை. பாதபங்கயம் - திருவடித்தாமரைகளை. ஓம்பல் உற்று - கப்பலோட்டியால் பாதுகாக்கப் பெற்று

உங. பானல் அம் துவரை - நீலோற்பல மலரையும் அழகிய பவளத்தையும், பன் - உவமை சொல்லத்தக்க, மின்னார்கண் வாயான் - மகளிர்களது கண்களாலும் வாயினாலும், அலந்து உவரைபற்று உறுதவன் - (மனந்திரிந்து) வருந்தி அவர்களை விருப்பஞ் செய்யாத குசேலன், வான் அலம் துவரை படுப் போன் பின்வாழ் - பெரிய கலப்பையினால் துன்பத்தை யொழித்த பலராமனுக்குத் தம்பியாகிய கண்ணபிரான் வீற்றிருக்கின்ற, கானலம் துவரை பதி கண்ணுற்றான் - கடற்கரையுடைய துவாரகாபுரியைக் கண்டான். வான் நலந்து வரை மடுப்போன் பின்வாழ் - தேவலோகம் நலம்பெற மலைகளின் (சிறகுகளை) அறுத்த தேவேந்திரன் பின்தோன்றிய உபேந்திரன் (கண்ணன்) எழுந்தருளியிருக்கின்ற என்றும், பின்வான் நலம் துவரை படுப்போன் வாழ் - பின்பு (அக் குசேலர்) தேவர்களுக்கு (ஆகவேண்டிய) நலங்களை விரையச் செய்பவனை கண்ணன் வாழ்கின்ற என்று கொள்ளினும் பொருந்தும்). இச்செய்யுள் திரிபு.

உச. தருமம் தன் அகம் தங்கி பொலிவுற - தருமமானது தன்னிடத்தில் தங்கி விளங்கவும், அல் நகு பாவம் - இருளையும் கீழ்ப்படுத்தும் (இருளினுங் கொடிய) பாவமானது, தெருமந்து - கலங்கித் தடுமாறி, சிதைதர - அழியவும்,

அருமந் தன்னவன் வைகலி னாரனர்க்
கருமந் தன்னமு மின்றக் கடிநகர். (௨௪)

கோடிய விஞ்சிவட் காரைக் குனித்திடுங்
கொடிய விஞ்சிவட் காரைக் குனித்திடுங்
கடிய கற்சிக் கிடங்கராக் காலுறுங்
கடிய கற்சிக் கிடங்கராக் காலுறும். (௨௫)

குவலை யங்கம லங்குல வாம்பன்மல்
குவலை யங்கம லங்கு குதிக்குமுன்
குவலை யங்க மலங்குறத் தோற்றிநன்
குவலை யங்க மலங்குயிற் றந்நகர். (௨௬)

இன்ன மாநகர்க் காண்டலு மேர்முகில்
அன்ன மேனியற் காண்டலொப் பாமகிழ்ந்
தின்ன றீர்தர வெட்டி விசைகொளீஇ
நன்னர் நெஞ்ச னடக்கத் தொடங்கினான். (௨௭)

---

அருமந்து அன்னவன் வைகலின் - தேவாமிர்தத்தைப் போன்ற ஸ்ரீகிருஷ்ண மூர்த்தி வாழ்கின்றமையால், அக்கடிநகர் - அந்தக் காவலையுடைய துவாரகையில், ஆர் அனர் கருமம் தன்னமும் இன்று - (பொறுத்தற்கு) அரிய துன்பச்செயல்கள் சிறிதும் இல்லை. அருமருந்து - அருமந்து—மரூஉ. இச்செய்யுளுந் திரிபு.

௨௫. கொடிய விஞ்சி வட்காரை குனித்து அடும் - கொடுமை அதிகரித்துப் பகைவர்களை வளைத்துக் கொல்லுகின்ற, கொடிய இஞ்சி - கொடிகளை யுடைய மதிலானது, வள்காரை - நெருங்கிய மேகத்தை, குனித்து - அசைத்து, அடும் - (மழை பொழியக்) கலக்கும். கடி அகற்சி கிடங்கு - காவலையுடைய அகன்ற அகழியானது, அராகாலுறும் - (பாதாள லோகத்திலுள்ள) சர்ப்பங்கள் உமிழ்ந்த, கடிய கல் சிக்கு இடம் - பிரகாசித்தலையுடைய மாணிக்கக் கற்கள் மலிந்துள்ள இடங்களில், கரா கால் உறும் - முதலைகளின் கால்கள் பதியப் பெறும். இச்செய்யுள் ஈரடி மடக்கு.

௨௬. குவலயம் கமலம் குலவு ஆம்பல் - நீலோற்பலமும் தாமரையும் நெருங்கிய அல்லியும், மல்கு வலயம் கம் - நிரம்பிய வட்டமான (அகழி) நீரிலே, மலங்கு குதிக்கு முன் - மலங்கு மீன்கள் துள்ளுதற்கு முன்னே, கம் அலங்கு உற தோற்றி - ஆகாயம் விளக்கமுறத் தோற்றி, நன்கு வலயம் குவலயம் - நன்றாக வட்டமாகிய பூமியில், கமலம் குயிற்று - ஜலத்தில் பதியப்பெற்றிருந்தது போன்றது. இது மடக்கு ; யமகம்.

௨௭. ஏர் - அழகிய ; எழும். முகில் அன்ன மேனியன் - மேகம் போன்ற நிறத்தையுடைய ஸ்ரீகண்ணபிரானை. இன்னல் தீர்தர-(மனக்களிப்பால் தனக்கு நேர்ந்த இளைப்பு பசி முதலிய) துன்பங்கள் ஒழிய. எட்டி-தாவி. நன்னர்-நல்ல

பரிக்கொ துங்கியும் பாய்தரு மும்மதக்
கரிக்குந் தேர்க்குமொ துங்கியுங் கார்க்குழல்
அரிக்கண் மாதர்க் கொதுங்கியு மாழ்வினை
பரிக்க லாதான் படருகின் றனரோ. (உஅ)

முன்னும் பார்க்கு முதிரொளி தோன்றலாற்
பின்னும் பார்க்கும் பெருநிலத் தூருயிர்
உன்னும் பார்க்கு முறுவர் குழாமெலாம்
இன்னும் பார்க்க வெழுதிடுஞ் சீர்த்தியான். (உகூ)

சீத நீழற் செலிற்சிற் றுயிர்த்தொகை
போதச் சாம்புமென் றெண்ணிய புந்தியான்
ஆத வந்தவ ழாறு நடந்திடுங்
காத லங்கை விரித்துக் கவித்தரோ. (௩0)

வேறு

நாகுவண் டொலிப்பப் படுங்கடச் செருக்கா லுடொறு மின்பிடி யூட்டும், பாகுடல் குமைக்குங் கறையடிக் களிறு பாவிய கூடமுங் கடுங்கால், ஏகுவாம் பரிமந் திரங்களும் வாட்போ ரிலகுகல் லூரியும் விண்ணிற், போகுய ரிரத நிலைகளு மிகுத்த புடைவளப் பெருநகர் கடந்தான். (௩க)

---

உஅ. பரிக்கலாதான் - சுமக்க முடியாதவனை குசேலன். பரி - குதிரை. கரி - யானை. கார் - மேகம்போன்ற. அரி - இரேகை ; வண்டு.

உகூ. உறுவர் குழாம் - முனிவர் கூட்டம். எழுதிடும் - நூல்களிற் புகழ்ந்து எழுதிய. சீர்த்தியான்...ஊர்உயிர் - நகர்ந்துசெல்லும் எறும்பு முதலிய உயிர்களை. உன்னும் பார்க்கும்-(தன் கால்பட்டு இறவாதபடி) கவனித்துச்செல்வான்.

௩0. சீதம் நீழல் செலில் - குளிர்ந்த (மர) நிழலிலே சென்றால். சிறு+ உயிர் - சிற்றுயிர். போதசாம்பும் - மிகவும் துன்பப்படும். புந்தியான் - அறிவுடையவன். ஆதவம் தவழ் ஆறு - வெயில்படர்ந்த வழியிலே.

௩க. நாகு - இளைய. படும் - பெருகும். கடம் - மதம். செருக்கால் - களிப்பால். பிடி - கவளம். பாகு - பாகனுடைய. குமைக்கும் - வருத்துகிற. கறை அடிகளிறு - உரல்போன்ற கால்களையுடைய யானைகள். பாவிய - பரவிய. கூடமும் - பந்தியும். கால் - வாயு ; காற்றுப்போல. பரிமந்திரங்களும் - குதிரைப் பந்திகளும். வாள்போர் இலகு கல்லூரி - சிலம்பக்கூடம். கல்லூரி - பாடசாலை. புடை - பக்கம்.

கூந்தலம் பிடியுங் கோணைமாக் களிறுங் கூடியாட் டயர்ந்தென மணிப்பூண், ஏந்தெழி லிளமங் கையருமைந் தரும்பொன் னியை தரு சிவிறியும் பந்துஞ், சேந்தகைத் தலங்கொண் டொள்ளற விறைத் தூச் செறிகளி யின்புவந் தாடும், பூந்தட மலிந்து பலவள நிறைந்து பொலிதரு மிடைநகர் கடந்தான். (௩௨)

செப்பரு மருநூன் மடந்தபு தேர்ச்சிச் செந்தமிழ்ப் புலவர்தந் தூக்கில், திப்பிய வணியும் பலபொருள் வாய்ப்புந் தெளிதரு நீர்மை யுஞ் சீருந், தப்பிலா மூழுங்கொண் டலர்மண முடைத்தாய்ச் சாற் றுதோ றகலமுற் றெவரும், ஒப்பருங் குரைத்தென் றுரைத்திடப் பொலியு முண்ணக ரகழியைக் கடந்தான். (௩௩)

படங்கிள ரரவப் பாயுடைப் பகவன் பாரளந் திட்டநாள் வளர்ந் தாங், கிடங்கொள்விண் ணுலகம் போழ்ந்துமேல் வளரா வெதிர்தரி யலருயிர் மடங்க, முடங்குளை மடங்க லடங்கரு முழுவை முதற் கொடும் பொறிபல வுடைத்தாய்த், தடங்கொளீஇ நின்ற மதிற்பெரு வாயிற் றடையையுந் தடையறக் கடந்தான். (௩௪)

உட்புகு மரசை முன்புகுந் திருந்த வோரர செதிர்கொளுங் காலை, விட்புலம் புகழு மற்றுமோ ரரசு விரைவினுட் புகுவது காணூஉ, நட்புடை யிவ்வீ ரரசுநன் கெதிர நடப்பவிவ் வாறரு துற லாற், கட்புலம் புகாதா நெருக்கிடை யொதுங்கிக் கரங்கண்மேற் றாக்கியுட் புகுந்தான். (௩௫)

---

௩௨. பிடி - பெண் யானை. கோணை - கொடுமை. எழில் - அழகு. சிவிறி, பந்து - நீர்த்துருத்தி. (சிவிறி பெரியது; பந்து சிறியது). சேந்த - சிவந்த. அறல் - நீர்.

௩௩. இது செய்யுளிற்கும் அகழினுக்குஞ் சிலேடை. மடம்தபு - அறியா மையை யழிக்கிற. தூக்கு - பாட்டு. திப்பியம் - திவ்வியம். அணி - அலங் காரம்; அழகு. பொருள் - அறமுதலியன; சங்கு முதலியன. நீர்மை - குணம்; நீர். சீர் - செய்யுளுறுப்பினுளொன்று; சிறப்பு. அலர்மணம் - விரிந்த புகழ்; மலர்மணம். அகலம் - பொருள் விரிவு; அகலம்.

௩௪. அரவப்பாயுடை பகவன் - சேஷசயனமுடைய ஸ்ரீ நாராயண மூர்த்தி. பார் - பூமி. தரியலர் - பகைவர். முடங்கு உளை - வளைந்த புறமயி ருடைய. மடங்கல் - சிங்கம். உழுவை - புலி. பொறி - யந்திரம். தடம் கொளீஇ - பரந்து விரிந்து.

௩௫. இவ்வீர் அரசு - இரண்டு இரண்டு அரசர்கள். விண்புலம். நட்பு உடை. இவ்வாறு அருது உறலால்.

விடம்படு வடிவாண் மள்ளருக் கொதுங்கின் விரைவினவ் வொதுங்கிடம் வளிபோல், திடம்படு பரிக டாவிட மதற்குந் திரிந் தொதுங் கிடுமிடஞ் சிறிக், கடம்படு களிறு பாயிட மதற்குங் கண் டொதுங் கிடுமிடங் கொடிஞ்சி, இடம்படு மிரத முன்பினு ரிடமற் றெவ்விட மிவனடங் கிடுவான். (கசு)

போதரு மிடங்க டொறுநெருக் குறலாற் பொன்வரை யனையதோண் மைந்தர்
மேதகு மார்பத் திலங்குமா லைகளும் விரைகெழு கலவையு மிளமை
மாதர்மெய்ப் பூசுங் குங்குமச் சேறு மான்மத மளாவியைந் நூற்றுக்
காதநா றிடுசெஞ் சந்தமுங் குசேலன் கந்தையு நாறின மாதோ. (கஎ)

வெளிவரு வாரு முட்புகு வாரும் வீதியிற் கலாம்விளைப் பாரும்
அளிமலர் மாலை சாந்தமுன் கொடுபோ யலங்கரிப் பாருமுன் வாயில்
ஒளிபெறு கதவந் தட்டிநிற் பாரு முழலுகின் றாருமாய் மைந்தர்
களிதரப் பயிலப் போகம்விற் றுண்ணுங் கணிகையர் சேரியைக் கடந்தான்.

சங்கரிந் தெடுத்தாற் போன்றவா லரியாற் சமைத்திடப் படு புழுக் கலுந்தீம், பொங்குபாற் குழம்பு மளையுமாச் சியமும் பொருவில் பல் சுவைக்கறி களுந்தேன், தங்குமுக் கனியு மமைத்துண்பார்க் குத வத் தக்கபொன் முதலவுள் ளனவெண், றெங்குமா ராய்வுற் றழைத் திடும் பின்னோ ரிருந்தெரு நோக்கியுண் மகிழ்ந்தான். (கசு)

குருமலர் வெண்பொற் கட்டிமூன் றமைத்த குமுதத்திற் பொற் கலஞ் செறித்துப், பொருவறு பனிநீ ருலையின்முத் தரிசி புகட்டி யொண் மணித்தழ லிட்டுத், திருகில்வித் துரும விந்தன மடுக்கித் திரு மலி வணிகர்தந் தெருவி, னருமைசால் சிறிய பிணுக்கள் பண் ணையினு மடுந்தொழில் கற்பது கண்டான். (௪0)

---

கசு. விடம் - விஷம். மள்ளருக்கு - வீரர்களுக்கு. வளி - காற்று. பரிகள் தாவு இடம். கடம் - மதம். கொடிஞ்சி - (தேர்) மொட்டு.

கஎ. போதரும் - போகின்ற. வரை - மலை. மேதகு - பெருஞ் சிறப்பு வாய்ந்த. விரைகெழு-வாசனை பொருந்திய. கலவை - கலவைச்சாந்து. மான் மதம் - கஸ்தூரி. சந்தம் - சந்தனம். கந்தையும் - கந்தையிலும்.

கஅ. கலாம் - கலகம். அளி - வண்டு ; தேன். கணிகையர் - பொது மகளிர் (வேசைகள்).

கசு. வால் - வெண்மை. அரியால் - அரிசியால். புழுக்கல் - அன்னம். அளை - தயிர். ஆச்சியம் - நெய். பொருவு - ஒப்பு. முக்கனி - வாழை பலா மா. பின்னோர் - சூத்திரர்.

௪0. குரு - ஒளி. குமுதம் - அடுப்பு. பனி - குளிர்ந்த. திருகு - மாறு பாடு. வித்துருமம் - பவளமாகிய. இந்தனம் - விறகு. பிணுக்கள் - பெண்கள். பண்ணை - மகளிராடலிலொன்று. அடும் - சமைக்கும்.

ஆப்பியான் மெழுகி முத்தநுண் டுகளா ளவிர்தரு கோலமு மியற்றிப்
பூப்புனை கூந்தற் பார்ப்பன மகளிர் பொலிமற்றைப் பணிதலை நிற்பத்
தூப்பயி லுபக ரணங்கொடு மறையோர் துணர்த்தழல் வளர்த்தவி யமரர்க்
கூப்பிடு பளிக்கும் பன்மகச் சாலைக் கூட்டமாங் காங்குகண் டுவந்தான்.

கறைதபு கலைத்தோன் முடிந்தபூ ணூலர் கவின்றரு முஞ்சிநா ணரையில், நிறைதரு தானைச் சொருக்குமுன் றூங்க நீளவிட் டவர் குழாங் கூடி, மறைபல கற்குங் கிடைகளு நடைதேர் மாண்புடை யாசிரி யன்சொற், குறைவற வுணர்த்தும் பெருமையுங் கண்டுங் கேட் டுமுள் ளுவகைகூர்ந் தனனால். (சஉ)

சீதளப் பளிக்கு மாடமேன் மடவார் செறிதரு புலவியில் வெறுத்த
தீதறு மணிபொன் றரளமா லிகைகள் செல்பவர் காலுறப் பின்னி
மாதர்மேன் மைந்தர் மைந்தர்மேன் மாதர் மாறிவீழ் தரவடிக் கடிசெ
யேதமி லரச வீதியிற் புகுந்தா னிருந்தவக் குசேலமா முனிவன். ()

மணிகள்கால் யாத்த மாளிகை தோறு மருவிய புலவிதீர் பாக் குப், பணிதரு மைந்தர் சென்னியிற் புயத்திற் பதமெடுத் தோச்சிடு மாதர், அணிகிளர் சிலம்பி னொலியும்பின் னெழுபொன் னவிர்தரு காஞ்சியி னொலியுங், குணில்பொரு முரச முதலிய மடங்கக் குமுறு தல் கேட்டுள்ளே நகைத்தான். (சச)

வரைமிசை முளைத்த கழைநுனிக் கழன்ற மாசுண வுரியசைந் தாற்போல், நிரைபடு மாடச் சிகைநடு பதாகை நெடுமரத் துகிலசை

---

சக. ஆப்பி - பசுவின் சாணம். துகள் - தூள்; பொடி. தூபயில் - தூய்மை (பரிசுத்தம்) பொருந்திய. உபகரணம் - தருப்பை முதலியன. துணர் தழல் - கொழுந்துவிட்டெரியும் அக்கினி. துணர் - சிகை. அமரர்கள் - தேவர் களை. கூப்பிடுபு - கூப்பிட்டு. மகசாலை - யாகசாலைகள்.

சஉ. கறை - குற்றம் தபு - கெடுத்த; நீங்கிய. கலை - மான். கவின் - அழகு. முஞ்சி - நாணற்புல். தானை - வஸ்திரம். தூங்க - தொங்க. குழாம் - கூட்டம். கிடை - வேதபாடசாலை. கூர்தல் - உள்ளது சிறத்தல்.

சஙு. பளிக்கு - பளிங்கு. புலவி - பிணக்கு; ஊடல். தரளம் - முத்து. ஏதம் - மாசு. இருந்தவம் - பெருந்தவம்.

சச. மணிகள் கால் யாத்த - இரத்தினங்களிழைத்த. தீர்பாக்கு - தீர்க் கும் பொருட்டு. பாக்கு - எதிர்கால வினையெச்ச இடைச்சொல். காஞ்சி - மாதர்களிடையிலணியு மெண்கோவையணி.

சரு. வரை - மலை. கழை - மூங்கில். மாசுண உரி - பாம்புத்தோல். நிரை - வரிசை. சிகை - உச்சி. பதாகை - கொடி. துகில் - சீலை. புரைதப -

வதுவும், புரைதபச் செறித்துக் கட்டிய மணியாற் புனைந்ததோரணங் களின் மீது, திரைநரை மூப்பி லமரருர் விமானஞ் சிக்குண்டு கிடப்ப துங் கண்டான். (சரு)

பாற்றினஞ் சுழலும் வசிநுதி நெடுவேற் பார்த்திபர் முன்கடிப் போச்சும், ஏற்றுரி முரச வேற்றிடி முழக்க மெழுதலும் வெளிறபுத் தெழுந்து, கூற்றுமுண் ணடுங்க வெதிர்பரிக் காரர் குறுகிடா வகை செலுங் களிறு, காற்றுவெம் பரிவி லாழிநீர்ச் சேற்றில் கால்பதிந் தெழாவகை கண்டான். (சசு)

தம்மிடை யேற்று ரவரிடைச் சிறந்த தரணிமன் னவரும்வந் தேற்பச், செம்மையிற் கொடுக்கும் பொருளுட னொழுக்குஞ் செழுங் கர கப்புனல் பெருகி, மும்மைநல் லுலகும் வியப்பநீ ணதியாய் முடு கிடக் கதிரவ னுறுத்தும், வெம்மைதீர் பாக்குச் சிறுவர்கைத் தோணி விட்டுலா யாடுதல் கண்டான். (சஎ)

தெள்ளிய தரள நீற்றிய சுண்ணந் தீற்றிய மாடவாய் தோறும், வெள்ளியாற் பொன்னாற் பதுமரா கத்தால் வித்துரு மத்தினன் மற்றை, ஒள்ளிய மணியா லமைத்தகந் திகண்மீ யுயர்கத லிகள்பசுங் கழைகள், உள்ளிய வானத் தலமர நிறுத்தி யுறுத்தல்பல் லணிகளுங் கண்டான். (சஅ)

தம்மையூ ரிறைவ னகர்வளங் கண்ட சலதரக் குலமவன் பின்னோன்
செம்மையா ரரசு புரிநகர் வளத்தின் சிறப்புநோக் கிடல்குறித் தாங்குத்
தம்முதீப் பொறிய வேலிள மைந்தர் துணைவிய ரோடுமின் பமரும்
விம்முவான் செல்வ மாடமா ளிகையின் மேற்றவழ்ந் திடுவன கண்டான்.

---

குற்றம் நீங்க. செறித்து - நெருக்கி. திரை - தோல்சுருக்கம். நரை - மயிர் வெளுப்பு. மூப்பு - கிழப்பருவம்.

சசு. பாறு - பருந்து. வசி - கூர்மை. நுதி - முனை. பார்த்திபர் - அரசர். கடிப்பு - குறுந்தடி. ஏறு உரி - எருத்துத்தோல். வேறு + இடி = வேற்றிடி. கூற்றும் - யமனும். பரிகாரர் - குதிரைவீரர். பரிவிலாழி - குதிரை வாய்நுரை.

சஎ. தரணி - பூவுலகம். கரகப்புனல் - தாரைநீர். உலாய் - உலாவி.

சஅ. தரளம் - முத்துக்கள். வித்துருமம் - பவளம். கந்திகள் - பாக்கு மரங்கள். கழைகள் - கரும்புகள்.

சகூ. தம்மை ஊர் இறைவன் - தங்களை ஏறிச் செலுத்துகிற தேவேந் திரன். சலதரக்குலம் - மேகக்கூட்டங்கள். பின்னோன் - தம்பியாகிய ஸ்ரீ கண்ணபிரான். இந்திரன் தந்தையாராகிய காசிபமுனிவர்பால் நாராயண மூர்த்தி வாமனனாகத் தோன்றி உபேந்திரன் என்னும் பெயர் பெற்றமையால் இந்திரன் பின்னோன் என்று கூறினர். தம்மு - நெரிக்கின்ற.

மன்னர்தம் பவளக் காற்குடை பிச்சம் வரைந்திடு கேதன மொலியல்
நன்னர்கொள் சிவிறி யாலவட் டங்க ணனிதுவன் றுயிருள் பரப்பப்
பன்னக மணியும் வயிரமு முத்தும் பதித்தபொன் மகுடமுங் குழையும்
மின்னல்செய் வாகு வலயமும் வாளும் வெயிலுறப் பரப்புதல் கண்டான்.

வெண்மையிற் றிகழ்ந்த மேனிலை மாட வியலுப ரிகையிடை யிருந்து, நுண்மையிற் புனையப் புகுந்தவோர் மைந்த னுவலருங் காமத்தான் மயங்கிப், பண்மையிற் பொலிந்தாள் வழக்கறுத் தமர்க் கும் படாரிக் கண்ணித னுதலென், றண்மையிற் செறிந்த சிறுபிறை யிடைப்பொட் டணிந்துவெள் கிடுவது கண்டான். (ருக)

பொற்றைநன் மாடத் தும்பரோர் மடந்தை புரிகுழற் றாள வெண்பிறையு, மற்றொரு மாடத் தும்பரிற் றங்கு மங்குலிற் செறிந்த வெண் பிறையும், கற்றவர் புகழும் பெருந்தவ முனிவன் கண்டிரு பிறைகளுள் ளனவோ, வுற்றவித் தன்மை யென்னென மயங்கி யுண்மைதேர்ந் துண்ணகை கொண்டான். (ருஉ)

நவமணி மாட மீமிசை யிட்ட நறும்பரி யங்கத்தி னன்கு, துவளிடை மடவா ரொடுநல னுகர்ந்த தோள்வலி மைந்தர்க ளவர்பூ, இவர்குழல் சேர்த்துக் கட்டிடக் கதிர்நா ணெடுத்தனர் மயங்குபண் மையிற்றூழ், உவர்குடி குயினிற் கட்டின ரதனை யுறுமின்னே யென்ன வுட் கொண்டான். (ருங)

---

ரு0. பிச்சம் - மயிற்பீலிக்குஞ்சம். கேதனம் - கொடி. ஒலியல் - வஸ் திரத்தால் செய்த அலங்காரத்தூக்கு. சிவிறி - விசிறி. ஆலவட்டம் - பெரு விசிறி. நனிதுவன்று - மிகவும் நெருங்கி. பன்னகமணி - நாகரத்னம்.

ருக. புனைய - அலங்கரிக்க. நுவல்அரும் - சொல்லமுடியாத. பண்மை யின் பொலிந்தாள் - தகைமையுடைய தன் மனைவி. வழக்கு அறுத்து - பிணக்கை (புலவியை) ஒழித்து. நுதல் - நெற்றி. அண்மையில் - சமீபத்தில். வெள்கிடுவது - நாணமடைவதை.

ருஉ. பொற்றை - மலையொத்த. உம்பர் - மேலே. ஓர் மடந்தை. தாளம் - முத்தினுற் செய்யப்பட்ட. மங்குலில் - மேகத்தில்.

ருங. பரியங்கத்தில் - கட்டிலில். முலைப் பாரத்தால் பெண்களுக்கு இடை துவளும். பூ இவர் குழல் - மலரணிந்த கூந்தலை. கதிர்நாண் - ஒளியையுடைய கயிற்றை. பண்மை - தகுதி. உவர்குடி - கடல்நீரைப் பருகும். உவர் - பண் பாகுபெயர். குயினில் - மேகத்தில்.

பாயொளி விரிக்கும் பொற்றக டிணங்கப் பதித்துநன் கியற்றிய மறுகின், மேயின வரசர் வில்லிடு மகுட மிடைதலி னொன்றொ டொன் றுரிஞச், சேயபன் மணியும் வயிரமு மற்றுஞ் சிதர்தர வுதிர்ந் துதங் குவதாற், காயும்வெம் பரல்போற் செல்லுகின் றார்தங் காலிடை யுறுத்துதல் கண்டான். (௫௪)

மாங்குயின் மருட்டு மழலையங் கிளவி மதர்த்தரி படர்ந்துமை தோய்கட், பூங்குழன் மடமா தர்களொடுங் கண்ணன் பொன்னுல கோரழுக் கறுப்பப், பாங்குறப் புரியு மின்பநற் கலவிப் பகுப்பெலாங் கைவலாற் கொண்டு, தேங்குமந் நகரார் தங்கண்மா ளிகைமுன் சித் திரித் திருப்பன கண்டான். (௫௫)

தரைமிசைக் கொடுங்கோ னடவிய கஞ்சன் சாளவ னேசிசு பாலன், வரைநிகர் தோட்கா லயவன னாதி மாற்றலர்ச் செகுத்த போர்க் கண்ணன், விரைகெழு வென்றிப் பெரும்புகழ் யாப்பின் மேவர வியைத்திடந் தோறுந், திரைசெறி கடல்சூ ழுலகினர் வியப் பத் தித்திக்கப் பாடுதல் கேட்டான். (௫௬)

தன்வயிற் றுலக முழுவது மடக்கித் தந்துமீட் டளித்திடு பிரானை, மின்வயிற் பொலிய வுயர்ந்தமா ளிகையென் வியன்வயிற் றடக்கிமீட் டுமிழும், பொன்வயிற் பொலிந்த விந்நகர் வளப்பம் புகலு தல் சேடற்கு மரிதான், முன்வயிற் காண விந்திரன் றனக்கு முடி வரி தாலென மதித்தான். (௫௭)

மாந்தளிர் மேனி யிலக்குமி மணாளன் மலர்தலைப் புவிவருக் குறுங்காற், றேந்தட மலராற் கணிநக ரிம்மா திரிகைசெய் யெனத் தெரி விப்பச், சேந்ததன் னான்கு கரங்களாற் சிருட்டி செயப்படு

௫௪. மறுகு - வீதி. வில் - ஒளி. மிடைதலின் - நெருங்குதலால். உரிஞ- உராய. சேய - சிவந்த. பரல் - பருக்கைக்கற்கள்.

௫௫. கிளவி - சொல். பொன்னுலகோர் - தேவர்களும். அழுக்கறுப்ப - பொறாமைப்பட. கைவலான் - கைதேர்ந்த ஒருவனை.

௫௬. நடவிய - செலுத்திய. வரைநிகர் - மலையொத்த. மாற்றலர்செகுத்த - பகைவர்களைக் கொன்ற. யாப்பு - பாடல்கள்; செய்யுள்கள்.

௫௭. அளித்திடும் - இரட்சித்தருளுகிற. மின்வயின்பொலிய - பிரகாசம் தன்னிடத்தில் விளங்க. என் - என்கின்ற. வியன் - பரந்த; பெரிய. முன் வயின் - எதிரிடத்தில்.

௫௮. மணாளன் - மணவாளன்; கணவன். வருக்குறுங்கால் - படைக் குங் காலத்தில். தேந்தட மலராற்கு - தேன்சொரியும் விசாலமான தாமரை மலரில் எழுந்தருளியுள்ள பிரமதேவனுக்கு. கை - ஒழுங்கு. சேந்த - சிவந்த.

மாநகர் போலும், வேந்தர்க ளொருங்கு முரசுகண் படாவிவ் வியனக ரெனவுமுட் கொண்டான். (௫அ)

சிறந்தவந் நகர வளத்திலிவ் வாறு சிறிதறிந் தற்புத முறலால்
விறந்தபல் காத வழிநடந் ததனுன் மேவிய வருத்தமு மிளைப்பும்
பறந்தன பசியு மொழிந்தது நாவிற் பைம்புன லூறிய துறவும்
அறந்தழை மனத்தா னுடலமுஞ் சிறிது தளிர்த்ததா லதிசயம்பயப்ப.

ஐந்துதுந் துபியின் முழக்கமு மன்ன ரவிர்கழ லொலியும் வாம் பரியின், நந்தலி லார்ப்புங் கந்தடு களிற்றி னரலலுந் தேரர வமுஞ் சேர்ந், தந்தினின் றெழுந்து விண்முக டுடைக்க வளவில்பல் வளத்த வாய்ப் பொலியுஞ், சந்தமார் கண்ண பிரான்றிருக் கோயிற் றனித் தலை வாயிலைச் சார்ந்தான். (௬௦)

கண்டன னலைவா யிற்பெருஞ் சிறப்பைக் கழியவு முள்ளத் துத் திகைப்புக், கொண்டன னடங்கி லாவிறும் பூதுங் கொண்டன னெண்ணிடு தற்கும், விண்டசிற் றிடமு மின்றெரு கற்ப மேவிநாங் காத்திருந் திடினுந், தண்டலி னெருக்கந் தவிர்ந்திடா துள்ளாற் சார்வதெவ் வாறென நினைந்து. (௬௧)

கன்னல்பல் கழிதல் கண்டுபா ணித்தல் காரிய மன்றினித் துணிந்திம்
மன்னிய நெருக்கிற் புகுந்திடி னமக்கு வருவன வருகவென் றோர்ந்து
துன்னினு னங்கோ ரரசனைச் சூழ்ந்த சுடர்ந்தகஞ் சுகப்படி வுடையார்
மின்னிய வாளாற் பற்பலர் தூரப்ப வெரீஇயினுன் சேயிடையகன்றான்.

---

முரசு கண்படா - முரசவாத்தியங்கள் முழங்கிக்கொண்டே யிருக்கிற. கண்படல் - உறங்கல்.

௫௯. பைம்புனல் - குளிர்ந்த ஜலம். உறவும் - மிகவும். விறந்த - மிகுந்த; விறப்பு - செறிவு; வெருவுதல் - ("விறப்பு முறப்பும் வெறிப்புஞ் செறிவே" "விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும்" - தொல்காப்பியம்). துறவும் அறமும் தழைமனத்தான் எனக் கோடலு மொன்று.

௬௦. ஐந்து துந்துபி-தோற்கருவி, தொளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக்கருவி. துந்துபி - வாத்தியம். மன்னர் - அரசர். அவிர் - விளங்குகிற. கழல் - வீரக்கழல். வாம்பரி - தாவுங்குதிரை. நந்தல் - குறைதல். கந்து - கட்டுத்தறியை. அடு - முறிக்கும். நரலலும் - சப்தமும். அந்தில் நின்று - அவ்விடத்திலிருந்து. தனி - ஒப்பற்ற.

௬௧. கழியவும் - மிகவும். இறும்பூது - ஆச்சரியம். எண் - எள். விண்ட - ஜனநெருக்கமில்லாத. கற்பம் - ஊழிகாலம். தண்டல் இல் - ஒழிவில்லாத.

௬௨. கன்னல் - நாழிகை - பாணித்தல் - தாமதித்தல். கஞ்சுகம் - மேற் சட்டை. படிவு - வடிவம்; உடல். வெரீஇயினுன் - பயந்தான். சேய்மை-தூரம்,

மீட்டுமுட் டுணியா வணிகொளாங் கொருசார் மென்மெல மேவின னுங்குத், தாட்டுணை பணிந்து கண்ண னுக் களக்குந் தயங்கு செம் பொற்பொதி குவித்த, மோட்டிட மதனுற் காவலர் பலரு முடுக்கினர் வாளுறை கழித்துத், தீட்டரும் புகழோ னென்செய்வா னடுங்கித் தியங்கியோட் டம்பிடித் துய்ந்தான். (௯௩)

பின்னரெங் ஙனம்யாம் புகுவதென் றுளத்துப் பெரிதுமா ராய்ந்துநின் றிடுபோ, தொன்னருங் கடவுட் கண்ணன தருள்போ லோவருந் தானைதற் சூழ, மன்னனுங் கொருவ னடைந்தனன் கண்டான் மற்றவன் சேனையுட் புகுந்தான், பன்னரும் வருத்த முடங்குறல் யாவும் பரித்தனன் மென்மெல நடந்தான். (௯௪)

நெருக்கினுட் படலா னுடலரை பட்டு நீளிடைக் கானிலத் துறுமல், வெருக்கொளச் சென்றுங் கரங்கண்மே லெடுத்தும் விடாதுகை யிடிப்புண்டும் வளைந்தும், பெருக்குறு வெயரின் மூழ்கியு மிரண்டாம் பிறப்பிது நமக்கென வுணர்ந்து, திருக்கிளர் துவார பாலர்நிற் கின்ற செவ்விய விடத்தினை யடைந்தான். (௯௫)

நெடியவ னடியா ரிவரென வெவரு நிகழ்த்திடத் தருமடை யாளம், படியறப் புனைந்து பொலிவுறுந் துவார பாலரைக் கண்டனன் மகிழ்ந்தான், மடிவில்லை வைவசி காமணி களாகு மற்றிவர் வைகுந்தத் துறையுங், கடிதலில் செயவி சயர்களே யிவரைக் கடுப்பவ ரிலரென நினைந்தான். (௯௬)

முகத்திடை நீண்ட வுரோமமிக் கவனெண் முடிதற்கு மிடமற யாரு, நகத்தகு பற்ப றுளையுடைக் கந்தை நயந்துகொண் டவன்மதிப் பிலாமை, மிகத்தரும் யாக்கை யுடையவன் றுவார மேவுமப் பாலர் முன் குறுகி, இகத்தலில் குணத்தீர் கேட்டருள் வீரென் றியம்புறத் தொடங்கின னன்றே. (௯௭)

---

௯௩. மீட்டும் உள் துணியா. தாள்துணை - இருதிருவடிகள். மோட்டிடம் - பெருமையுள்ள இடம். கழித்து - வெளியிலெடுத்து ; உருவி. முடுக்கினர் - ஓட்டினர். தீட்டு - எழுதலுக்கு. உய்ந்தான் - பிழைத்தான்.

௯௪. ஒவு அரு - நீங்குதலில்லாத. தானை - சேனைகள். தன் - தன்னை. உடங்கு . நெருக்கம். பரித்தனன் - சகித்தவனாய்.

௯௫. அரைபட்டும் - நசுங்கியும். கால் நிலத்து உறாமல். வெரு - அச்சம். வெயரில் - வியர்வையில். துவாரபாலர் - வாயில்காப்போர்.

௯௬. நெடியவன் - விஷ்ணுமூர்த்தி. படிஅற - ஒப்பில்லாத. புனைந்து - அணிந்து ; சூடி. மடிவு - அழிவு. உறையும் - வாழும். கடிதல் - வெறுத்தல். செய விசயர் - ஜெயவிஜயர் ; இவர்கள் பரமபதத்தின் கீழ்வாயில் காப்போர். கடுப்பர் . ஒப்பானவர்.

௯௭. எள்முடிதற்கும். யாக்கை - உடல். இகத்தல் - இகழ்ச்சி ; வெறுப்பு.

### வேறு

மக்களுண் மிக்கீர் நீல வண்ணனுக் கடியீர் தூய்தாந்
தொக்கபுண் ணியத்தீர் பாவந் தொலைத்தமா தவருஞ் செய்ய
நக்கபூங் கமலத் தோனு நண்ணரும் புகழ்பெற் றுள்ளீர்
எக்கலை களினும் வல்லீ ரியம்புமென் ஞசி கொண்மின். (சுஅ)

உங்களை நோக்குந் தோறு முவரியும் வெஃகு மேனிச்
செங்கண்மா றனைக்கண் டாங்குச் செறிந்திடு முவகை யந்தக்
கொங்கவிழ் கமலச் சேக்கைக் கோமள வல்லி மார்பன்
றுங்கநற் சேவை யாற்றித் தூயரா தலினு லன்றே. (சுகூ)

### வேறு

எளியனேன் மறையோர் தங்குலத் துதித்தே னென்பெயர் குசேலன்மிக் கொலிக்கு, நளிகொள்வெண் டாரங்கப் பாற்கட னுப்ப ணுகணைத துயிலொழிந் தடியார்க், களிசெய்தல் லார்க்கீ றுறுத்திட வவதா ரஞ்செய்த கண்ணபி ரானே, டிளமையிற் பற்பல் கலைபயின் றுள்ளே னிசைக்குமிக் குற்றமு மகல. (எ0)

கத்துவெண் டரங்கக் கடலைமீ கானற் கடந்துவண் கரைப்பட ரொருவற், செத்துமண் டியபன் னெருக்குடை வாயிற் செழுங்கட றன்னைநல் லருளே, பொத்துநெஞ் சகநும் மாற்கடந் தடியார் பொருள்பெறு முத்தியங் கரையென், றுரைத்துமா மறைகள் சொலப்படுங் கண்ண னிடையடை தரவுள நினைந்தேன். (எக)

---

சுஅ. தூய்து ஆ - பரிசுத்தமாக. நக்கபூங்கமலத்தோனும் - பிரமனும். நக்க - மலர்ந்த.

சுகூ. உவரியும் வெஃகும் - கடலும் விரும்பும் (கடலினுங்கரியன் என்றபடி). ஆங்கு - போல. கொங்குஅவிழ் - மணம்வீசும். கமலம்சேக்கை - செந்தாமரைப் பூவாகிய பீடத்தையுடைய. கோமளவல்லி - இளங்கொடிபோன்ற இலக்குமி. துங்கம் - சிறந்த.

எ0. தரங்கம் - அலைகளையுடைய. நாப்பண் - மத்தியில். நாகம் அணை - சர்ப்பசயனம். அல்லார்க்கு - அடியரல்லாத பாவிகளுக்கு. ஈறு உறுத்திட - அழிக்க. முக்குற்றம் - ஐயம், திரிபு, அறியாமை.

எக. கத்தும் - ஒலிக்கும். மீகான் - மீகாமன்; கப்பலோட்டி. வண்கரை படர் - அழகிய கரையை அடைகிற. ஒருவன் செத்து - ஒருவனைப்போன்று; செத்து - உவம வாசகம். மண்டிய - நெருங்கிய. பொத்தும் - நிறைந்த. நெஞ்சகம் நும்மால் - மனமுடைய உங்களால். உததி - கடல். அடைதர - போய்ச்சேர.

வச்சிரத் தடக்கை வாசவ னேவ மஞ்சினம் பொழிசிலா மழை யை, நச்சும்விண் ணுரிஞ்சும் போகுயர் குவட்டோர் நாகமேந் தித்த டுத் தருளும், அச்சுதன் பாற்சென் றேழையேன் வருகை யறிவித் தென் றனையவட் சேர்த்தன், மெச்சுநுங் கடனென் றுரைத்தன னெவரும் விரும்புறு குசேலமா தவனே. (எஉ)

இன்னணம் வாயில் காப்பவர் தம்மோ டிங்கிவன் புகன்மொழி கேளா, அன்னவர் பக்க லுறுஞ்சிலர் மடமை யாலட ரப்படு மனத் தார், அன்னரு மறைநன் கோர்ந்தவிக் குசேல னொளிர்முகத் திணை விழி பாப்பிப், பன்னரு மிழிசொற் புகலலுற் றாரற் பரவைசூ ழுல கெலாம் புரப்போய் ! (எங)

வேறு

வருத்தபல் லுலகும் போற்ற மாற்றலர் கூற்றூர் மேவச்
செருத்தர சாளுங் கண்ணச் செம்மலெங் கோநீ யெங்கே
இருத்தபஃ றுவாரக் கந்தை யேழைப்பார்ப் பானே சற்றும்
பருத்தறிந் திடலற் றாய்கொல் பயனின்மூப் படைந்தாய் போலும். ()

மின்மைசெய் பகைஞர் மோலி மிதித்திடு கழற்காற் கண்ணன்
தன்மையு மேழை யாநின் றன்மையுந் தெரிந்து நோக்கில்
வன்மைசெய் புழைக்கை மாவு மசகமும் போலும் வாரிக்
கொன்மைசெய் நீரு மாவின் குளப்படி நீரும் போலும். (எரு)

கனகமால் வரையு மண்ணாங் கட்டியும் போலுஞ் செங்கேழ்த்
தினகர வொளியு மோர்கத் தியோதத்தி னொளியும் போலும்

---

எஉ. வாசவன் - இந்திரன். மஞ்சு - இனம் ; மேகக்கூட்டம். நச்சும்-விரும் பும். குவடு - சிகரம். நாகம் - மலையை (கோவர்த்தனகிரியை). அச்சுதன் பால் - ஸ்ரீ கண்ணபிரானிடம். அவண் - அவ்விடம்.

எங. இன்னணம் - இன்னவண்ணம் ; இவ்வாறு. மடமை - அறியாமை. அடர்ப்படும் - நிறையப்பெற்ற. இணை - இரண்டு. பரவை - கடல். புரப்போய்- காக்கும் பரீக்ஷித்து மகாராஜனே.

எச. மாற்றலர் - பகைவர். கூற்றூர் - யமலோகம். மேவ - அடைய. செருத்து - கொன்று. இருத்த - இழிவான. பல்+துவாரம் - பஃறுவாரம்.

எரு. மின்மை - பிரகாசம். மோலி - முடி. புழைக்கை மா - யானை. (புழை- துவாரம். கை - துதிக்கை). மசகம் - கொசுகு. வாரி - கடல். கொன்மை - பெருமை. ஆவின் - பசுவின். மா எனக்கொண்டு மிருகம்எனினும் பொருந்தும்.

எசா. கனகம் - பொன். மால் - உயர்ந்த. வரை - மேருமலை. செங்கேழ்- சிவந்தநிறம். தினகரன் - சூரியன். கத்தியோதம் - மின்மினி (கம் - ஆகாயத்

அனகமார் தருவும் புன்சீழ் கம்புலும் போலுஞ் சேடப்
பனகமுஞ் சிறுநாங் கூழும் போலும்பாய் மிடிப்பார்ப் பானே. (எகூ)

பொருணனி யுளனென் றியாரும் புகலுமோர் வார்த்தை வேண்டும்
இருகையுங் கடகம் வேண்டு மிலங்குருத் டலங்கள் வேண்டும்
வருவிர லாழி வேண்டு மார்பிடை மதாணி வேண்டும்
உருவமுத் தாரம் வேண்டு முயர்ந்தபட் டாடை வேண்டும். (எஎ)

சிவிகைமுன் னூர்தி வேண்டுஞ் செழும்பொருட் செலவு வேண்டுங்
குவிகையே வலரும் வேண்டுங் கோலமார்ந் திருக்க வேண்டுங்
கவிகைதாங் குநரும் வேண்டுங் கையுறை சிறப்ப வேண்டும்
அவிகையில் விளக்கம் வேண்டு மரசவை குறுகு வார்க்கே. (எஅ)

சிறப்புறச் செல்வ ராகிற் சிறப்புறு முகமன் செய்வர்
பெறப்படு மிடிய ராகிற் பிடர்பிடித் துந்து வார்கள்
வறப்பிலுன் முன்னு ணட்பை மறந்திடா திருக்கின் றன்கொல்
இறப்பநேற் றுண்ட கூற்றை யின்றியா மறப்ப மாகில். (எகூ)

இலகுமோர் நகரச் செல்வ ரிடத்தினுஞ் செல்வர் நட்பே
நிலவுற நிற்கு மேழை நீர்மையர் நட்பு நில்லா
தலகில்செல் வத்த னாகி யரசர்யா வருந்தற் போற்ற
மலர்தலை யுலகங் காக்கு மன்னன்மாட் டுன்னட் பெற்றே. (அo)

நிலத்திரு வேட்டு நாட்டு நெடும்புகழ்த் தும்பை சூடி
உலப்பெருந் திணிதோண் மாற்று ருயிர்தப வுடற்றுங் காலை

தில், தியோதம் - விளங்குவது). அனகம் ஆர் - சுத்தம் பொருந்திய (புண்ணிய ரூபமான). தரு - கற்பகவிருக்ஷம். சீழ்கம்புல் - ஒருவிதபுல். சேடப்பனகம் - ஆதிசேஷன். நாங்கூழ் - நாகப்பூச்சி.

எஎ. நனி - அதிகமாக.

எஅ. அரசு அவை - ராஜசபை. சிவிகை - பல்லக்கு. முன் - முதலிய. ஊர்தி - வாகனங்கள். குவிகை - குவித்த கையையுடய (கும்பிட்டகை). ஏவலர் - வேலையாட்கள். கோலம் - அழகு. ஆர்ந்து - பொருந்தி. கவிகை - குடை. கையுறை - காணிக்கை. அவிகை - அவியாத. விளக்கம் - விளக்கு.

எகூ. முகமன் - உபசாரவார்த்தை. மிடியர் - தரித்திரர். பிடர்பிடித்து - கழுத்தைப்பிடித்து. உந்துவார்கள் - தள்ளுவார்கள். இறப்ப - அதிகமாக. கூற்றை - ஆகாரத்தை. வறப்பு. குறைவு.

அo. இலகும் - விளங்கும். நிலவுற - மாறுபடாது ; நிலையாக. நீர்மை - தன்மை. அலகுஇல் - அளவில்லாத. தன் - தன்னை. உன் நட்பு எற்றே. எற்று - எத்தன்மையது.

அக. நிலம்திருவேட்டு - உலகச்செல்வத்தை விரும்பி. தும்பை - போர் வெல்வார்க்குரிய மாலை. உலம் - கல்லையொத்த (கல் - மலை). மாற்றார் - பகை

நலப்படுந் தந்தை மைந்தர் நந்துமுன் னோர்பின் னோர்தன்
குலப்படு மற்றோ ரேனுங் கொல்பவர் நட்பென் னுமால். (அச)

மாற்றலர்ச் செற்ற ஞான்றே மற்றவர் நகர முற்றும்
வேற்றுவண் கழுதை யேரின் விரைதர வுழுவித் துண்ணப்
போற்றலில் வரவு கொண்முற் பொலிதர விதைப்பித் துப்பிற்
சீற்றமாற் றிடுவார் நட்போ சிறந்தது மிடிக்கோட் பட்டாய். (அஉ)

ஆவுமா னியற்பார்ப் பீரு மாடமைத் தோளி னீரு
மேவுநோய்க் கோட்பட் டீரு மிளிர்பிதிர்க் கருமஞ் செய்யப்
பூவினன் மகப்பே றுள்ளும் புந்தியி னீரு மம்பு
தூவுமு னரணஞ் சேர்மி னென்பர்பின் றோன்ற வாயார். (அங)

கோதறு கல்வி சாலூர்க் குடியிருந் தறியா னேனும்
ஓதருஞ் செல்வ மிக்கோ னொருவனே சிறந்தோ னவன்
காதலின் வேத முன்னுங் கலைகள்கற் றுணர்ந்தோ னேனுந்
தீதமை மிடிய னுயிற் சிறந்திடான் வேத்த வைக்கே. (அச)

காமமே வெகுளி யேயுட் கலந்திடு மயக்க மேயென்
றாமவை யமையப் பட்டோ ரவற்றொரோ வொன்று தோன்றின்
மாமறை முழுங்கிக் கூறி வருவிதி விலக்க யர்ப்பர்
தோமறு மமைச்சி டித்துச் சொல்வதுங் கொள்ளா ரம்மா. (அரு)

கலைபயி னுணட் பென்று கரைந்தனை யந்த நட்பிச்
சிலைவலாற் கிருக்கு மாயிற் சென்றபற் பலவாண் டிற்குள்
உலைவரு முடங்க றீட்டி யொன்றிரண் டனுப்ப லாமே
மலைவறு தூதுய்த் துன்னை வருகவென் றழைக்க லாமே. (அசு)

---

வர். தப - அழிய. உடற்றுங்காலை - யுத்தம் புரிந்து வருத்தும்போது. நந்தும் - வளரும். முன்னோர் - அண்ணனுர். கொல்பவர் - கொல்லும் அரசர்களுடைய.

அஉ. மாற்றலர் செற்ற ஞான்றே - பகைவரை வென்ற அந்தக்ஷணமே. கொண்முன். உப்புஇல்சீற்றம் - அளவில்லாத கோபம். மிடி - தரித்திரம். கோள் படல் - கொள்ளப்படல்.

அங. ஆவும் மான் இயல் - பசுவையொத்த குணத்தையுடைய. பார்ப்பீர் - அந்தணீர். ஆடு அமை தோளினீரும் - அசையும் மூங்கிலைப்போன்ற தோள்களையுடைய மாதரீரும். உள்ளும் - விரும்பும். அரணம் - காவல்.

அச. சால் - மிகுந்த. வேத்து - வேந்து; அரசன். அவை - சபை.

அரு. வெகுளி - கோபம். அவற்று - ஒரோ ஒன்று. அயர்ப்பர் - மறந்துவிடுவர். தோம் - குற்றம். அமைச்சு - மந்திரி.

அசு. கலைபயில் நாள் நட்பு என்று. கரைந்தனை - சொல்லினை. இச்சிலைவலாற்கு - இந்த வில்வித்தையில் தேர்ச்சியுடைய கண்ணபிரானுக்கு. உலைவு - அழிவு; கெடுதி. முடங்கல் தீட்டி - ஓலையெழுதி. மலைவு - மாறுபாடு. உய்த்து - செலுத்தி.

அந்தநாட் டகுதிக் கேற்ப வாக்கினன் போலு நின்னட்
பிந்தநாட் டகுதி வானத் திறைவனு மணுகொ ணாதம்
முந்தைநா ணட்பை யெண்ணி முடுகிநீ செலக்கூ டாதால்
எந்தநா ளினும்பூ பாலர் யாவர்க்கு நண்ப ரல்லர். (அஎ)

அல்லது மிகுநட் பேயென் றற்றநோக் காது செல்லின்
ஒல்லையி னினக்குண் டாயிற் றுறுமவ மான மெய்யே
நல்லதன் மனையின் வாக்கு நறுநெயுண் டொளிர்வ தேயென்
றெல்லடர் சுடரை முத்த மிடிற்சுடா தமைவ துண்டோ. (அஅ)

பழியிலுன் குலத்தோர் செய்யப் படுந்தொழி னன்கி யற்றி
இழிவற வுண்டு டுத்த லின்றிமிக் கெண்ணங் கொண்டு
வழிநடந் திளைத்தாய் மெய்யும் வாடினை யந்தோ வானிற்
கழிமதி வருக வென்றுட் கசிந்தழு மழவு போன்றாய். (அகூ)

மாத்திருந் தளகை வேந்தும் வானர சளிக்கும் வேந்தும்
பாத்திருந் தியசீர் கேட்டுப் பரிவுறப் போகந் துய்க்கும்
ஏத்திருந் தியவில் வல்லான் சேவைக்கு வந்திவ் வாயில்
காத்திருக் கின்ற மன்னர்க் கண்டிலை போலு மாலோ. (கூ0)

இந்திர திருவ னென்ன வீங்குநிற் கின்ற வள்ளல்
பந்தியின் மடந லார்பொற் பந்தெறிந் தாட னோக்கி
நந்திய பொழிலிற் றேமா நறுங்கனி பறித்துக் கொண்டு
மந்திய மாடல் செய்யு மகதநா டாளு மன்னன். (கூக)

---

அஎ. நின்நட்பு ஆக்கினன்போலும். வானத்து இறைவனும் - தேவேந்திரனும். முடுகி - விரைந்து. பூபாலர் - அரசர்கள்.

அஅ. அற்றம் - சமயம். ஒல்லையில் - உடனே ; சீக்கிரம். உண்டாயிற்று - துணிவுபற்றி வந்த காலவழுவமைதி. எல் - வெளிச்சம்.

அகூ. கழிமதி - செல்லுஞ் சந்திரனே. மழவு - குழந்தை.

கூ0. மா - அழகு ; சிறப்பு ; திருமகள் ; பலபொருள் ஒருசொல். திருந்து - திருத்தமாக. அளகைவேந்து - குபேரன். வான் அரசு அளிக்கும் வேந்து - இந்திரன். பா - பாக்கள். பரிவு - அன்பம். துய்க்கும் - அனுபவிக்கும். ஏ திருந்திய- அம்பினைத் திருத்தமாகத் தொடுத்தற்குரிய. வில் வல்லான் - கண்ணன்.

கூக. இந்திர திருவன் - இந்திரனையொத்த செல்வன் என்று சொல்லும்படி. பந்தி - வரிசை. நந்திய - செழுமையாயுள்ள. பொழில் - சோலை. தித்திப்பது தேமா. புளிப்பது புளிமா. மந்தி - பெண்குரங்கு.

படுங்கடக் கரிபோன் றுங்கோர் பரிக்கரு காநிற் கின்றோன்
ஒடுங்கலில் வருக்கை நையா வொழுகுறு செழுந்தே னோடி
அடுங்கருப் பாலை வீழ்த்தி யடர்புலி யடிப்ப சுங்காய்க்
கொடுங்குலைக் கதலி சாய்க்குங் கொங்கண நாட்டு வேந்தன். (கூஉ)

ஒளிர் நுதி வடிவா ளேந்தி யூங்கெழி றாநிற் கின்றோன்
அளிசெறி மலர்நீர் வாவி யடர்மருப் பெருமை பாயக்
களிதரு செருக்கி னோடு கால்விசைத் தெழுந்து வாளை
குளிர்மதி கிழியப் பாயுங் கூர்ச்சர நாட்டு வேந்தன். (கூங)

மலையெடுத் தனைய திண்டோள் வலயம்வில் விடநிற் கின்றோன்
குலையெடுத் திருக்கும் வாழைக் கூன்குலை முறிந்து சாய
நிலையெடுத் துறையுங் கந்தி நெடுங்கழுத் திறப்பன் முத்தம்
அலையெடுத் தெறியும் வாவி யங்கநா டாளும் வேந்தன். (கூச)

மேவரு மதன னென்ன வெண்குடை நிழனிற் கின்றோன்
தாவரு நகர்க ளெல்லாந் தயங்குபொன் மனைக டோறும்
மாவகிர்க் கண்ணா ராக்கு மண்டுகுய்ப் புகையெண் ணூற்றுக்
காவதங் கமழுஞ் செல்வக் காம்போச நாட்டு மன்னன். (கூரு)

வாகைவேல் வலத்தி னேந்தி மடங்கலே றெனநிற் கின்றோன்
ஓகையங் களிப்பு மீக்கொண் டொளிவள ரரங்கு தோறும்
பாகைநேர் மொழியா ராடப் பைந்தளிர்ச் சோலை தோறுந்
தோகைமா மயில்க ளாடுந் துளுவநா டாளு மன்னன். (கூசு)

---

கூஉ. படும் கடம் கரிபோன்று - சிந்தும் மதத்தையுடைய யானையை யொத்து. பரிக்கு - குதிரைக்கு. வருக்கை - பலாப்பழம். அடும் - காய்ச்சும். புலிஅடிபோன்ற பசிய காய். கதலி - வாழை.

கூங. நுதி - நுனி. இங்கு - சமீபம்; அங்கு - தூரம்; ஊங்கு - நடு. எழில் தர - அழகுவிளங்க. அளிசெறி - வண்டுகள் நிறைந்த. வாவி - தடாகங்களில். மருப்பு - கொம்பு. கால் - காற்றுப்போல. மதி - சந்திரன்.

கூச. மலை எடுத்து அனைய - மலைகளைத் தாங்கினாற்போன்ற. வில் - பிர காசம். குலை எடுத்தல் - அசைதல். கூன் - வளைந்த. நிலை எடுத்து உறையும்- நிலைத்தற்றொழிலைக் கொண்டுள்ள. கந்தி - பாக்குமரம். இற - ஒடிய. பல முத் தம் அலை எடுத்து எறியும்.

கூரு. மதநன் - காமன். தாஅரு - அழிதலில்லாத. ஆக்கும் - சமைக்கும். மண்டு - அதிகமான. குய் - தாளிதம்.

கூசு. வாகை - வென்றி. மடங்கல் ஏறு - ஆண்சிங்கம். ஓகை - உவகை. அம் களிப்பு - சந்தோஷத்தால் விளையும் மதர்ப்பு. அரங்கு-நடனசபை. பாகு- சர்க்கரைப்பாகு- நேர் - ஒத்த.

காளையர் சூழ மோலி கதிரெறிந் திடநிற் கின்றோன்
வாளைபாய் நீத்தம் வந்த வலம்புரி கமுகி னேறி
வேளைவாய்த் திடப்பன் முத்தம் விருப்பொடு காண்போர் கந்தி
பாளையீன் றதென வீனும் பல்லவ நாட்டு மன்னன். (கூஎ)

வயிரவொண் குழைம தாணி வாளெறித் திடநிற் கின்றோன்
பயிருறு களைகட் டோம்பும் பான்மொழி யுழத்தி மார்தஞ்
செயிரறு வதனங் கண்டு திங்களென் றெண்ணி யெல்லுங்
கயிரவ மலரும் பண்ணைக் கலிங்கநா டாளு மன்னன். (கூஅ)

அளவில்பல் சேனை சூழ வமரணி கொடுநிற் கின்றோன்
வளமலி நறும்பூ மல்கும் வாவியிற் றூண்டில் வாய்நின்
றுளம்வலித் தெழுந்த வாளை யொய்யெனக் கற்ப கத்தின்
கிளர்கழுத் தொடியப் பாயுங் கேகய நாட்டு வேந்தன். (கூகூ)

கோழுநிணந் தின்று சோரி குடிக்கும்வே லொடுநிற் கின்றோன்
எழுகதிர்ப் பரிவாய்க் கௌவ வெழுந்தசெஞ் சாலிச் செய்யிற்
குழுமுபல் கயன்மெய் கீளக் குதித்தென்றும் பாய்த லாலே
செழுமுகிற் பொழிவ றாத சிங்கள நாட்டு மன்னன். (க00)

பாயசீர்ப் போர்வை போர்த்துப் படர்கதி ரெனநிற் கின்றோன்
மேயபூம் பொய்கை வேண்டா மரையமென் சேவ லன்ன
நேயமோ டணைப்பக் கண்டு நெறிபிழைத் தாயென் றூடித்
தூயபே டொதுங்கி மாழ்குஞ் சோனக நாட்டு மன்னன். (க0க)

---

கூஎ. மோலி - கிரீடம். நீத்தம் - வெள்ளம். வலம்புரி - வலம்புரிச்சங்கு. கந்திபாளை - கமுகின் பாளை. ஈனும் - சொரியும்.

கூஅ. வாள் - ஒளி. களைகட்டு - களைகளைந்து (பிடுங்கி). பயிர் ஓம்பும் - பயிர்களை வளர்க்கின்ற. செயிர் - குற்றம். வதனம் - நெற்றி ; முகம். எல்லும்- பகலிலும். கயிரவம் - அல்லி. பண்ணை - வயல்கள்.

கூகூ. அமர் அணி - போர்க்கோலம். ஒய்என - விரைவாக.

க00. சோரி - இரத்தம். கதிர்பரி - சூரியனுடைய குதிரைகளையும். செய்யில் - வயல்களில். குழுமும் - கூடும். கயல் - மீன். மெய் - உடம்பு. கீள - கிழிய. முகில் பொழிவு அறாத - மழைபொழிவது நீங்காத.

க0க. பாய - பரவிய. கதிர் - சூரியன். ஊடி - பிணங்கி. பேடு - பெண் அன்னம்.

குஞ்சரக் குழாத்து நாப்பட் கோளரி போனிற் கின்றோன்
கஞ்சமட் டொழுகப் பூத்த கழனிகா லோடைக் கண்ணின்
றஞ்சிறை யுகுத்த கூர்வாய்ப் பெருங்கிழ நாரை யாரல்
வஞ்சனைத் துயில்கொண் டுண்ணும் வங்கநா டாளு மன்னன். (க0உ)

போத்திய கவச மெய்யிற் பொலியநிற் கின்ற காளை
கத்திகைக் குழலா ராடுங் காமரு மஞ்ச ணீர்பாய்ந்
தெத்திசை யினும்வ ளர்ந்த கதலியின் குருத்தேழ் மாவை
மத்திகை யெனப்பு டைக்கு மராடநா டாளும் வேந்தன். (க0௩)

அயலெலாஞ் சேனை சூழ வணிந்துநிற் கின்ற சிங்கங்
கயலெலாம் வெருவுங் கண்ணார் களையரிக் கழூநீ ரோடிச்
செயலெலாஞ் செயும்ப டப்பைச் செழுங்கரும் போங்கப் பாய்ந்து
வயலெலாம் விளைக்குஞ் செல்வ மச்சநா டாளு மன்னன். (க0௪)

கருகிருண் மோலி மேயக் கடாக்களி றெனநிற் கின்றோன்
வருவிறன் மடங்கன் மன்னன் வருடைதே ளதிபன் முன்னும்
பெருவிடை துலாக்கோன் பின்னும் பிரிவின்றிச் செலச்செல் காலுங்
குருமுகின் முழங்கிப் பெய்யுங் குடகநா டாளும் வேந்தன். (க0௫)

கையுறை யொடுநிற் கின்றோன் கவின்முழுச் சலரா சிக்கண்
ஐயமா மதிநின் றன்னாற் கைந்தேழொன் பானி லோர்கட்
செய்புக ரேனும் வெய்யோன் சேயேனு நிற்கு நாள்போற்
பெய்முகி லென்று மாறாப் பெருமைக்காந் தார வேந்தன். (க0௬)

---

க0உ. குஞ்சரம் - யானை. குழாத்து - கூட்டத்து. நாப்பண் - நடுவிலே. கோளரிபோல் - சிங்கம்போல். கஞ்சம் - தாமரை. மட்டு - தேன். அம்சிறை உகுத்த - அழகிய சிறகுகளை யிழந்த. ஆரல் உண்ணும். ஆரல் ஒருவகைமீன்.

கௐ. கத்திகை - பூமாலை. கதலி - வாழை. திசை - திசை. ஏழ்மாவை - சூரியனது ஏழு குதிரையை. மத்திகை - சம்மட்டி.

கௐ. சிங்கம் - சிங்கம்போன்றவன். வெருவுதல் - அஞ்சுதல். அரி - அரிசி. படப்பை - கொல்லை, தோட்டம்.

கௐ. விறல் - வெற்றி. மடங்கல் மன்னன் - சிங்கராசிக்குரிய சூரியன். வருடை - மேஷராசிக்கும். தேள் - விருச்சிகராசிக்கும். அதிபன் - அதிபனாகிய செவ்வாய். விடை - இடபத்திற்கும். துலா - துலாவிற்கும். கோன் - உரிய சுக்கிரன். இவை மழையின்மையைக் குறிக்கும் கிரகநிலைகள். இந்தக்காலத்திலும் குடகநாட்டில் மழைபொழியும் என்றபடி.

கௐ. கையுறை - காணிக்கை. கவின் - அழகிய. சலராசி - மீனராசி. ஐய - அழகினையுடைய. மாமதி நின்று அன்னாற்கு ஐந்து ஏழ் ஒன்பானில். ஓர்கண்செய் புகர் - ஒரு கண்ணுடைய சிவந்த சுக்கிரன். சூரியன்சேய் - சூரியன்புதல்வனாகிய சனி. இவை மழைபெய்யுங் கிரகநிலைகள்.

இத்தனை மன்னர் தம்முள் யாரைநீ யொப்பாய் கந்தை
பொத்திய மேனி யோயெண் ணிரட்டியா யிரம்பொ னன்னூர்
மெத்திய மனத்த ராகி மேவுறப் பொலியுங் கண்ண
வித்தகன் சேவை காண லெண்மையின் மேவுங் கொல்லோ. (௧0எ)

முடங்குகை காலோர் பேதை மூரிவா னணவுங் கோட்டின்
இடம்படு தேத்தி ருலுக் கிச்சைவைத் ததனைப் போலுந்
தொடங்கிய சிராத்த வில்லந் தோறுஞ்சென் றிரத்த னீத்து
விடங்கொள்வாண் மன்னற் காண விருப்புவைத் தனைது மாதோ.

இத்தலை வாய்நிற் கின்ற விவர்க்கெலா மிரும்பொ னுண்டு
மெத்திய வேவ லாளர் மிகவுமுண் டாத லாலே
எத்தனை பற்ப ளுள்காத் திருக்கினுங் குற்ற மில்லை
பொத்துநோய் மிடிக்கோட் பட்ட நினக்கிது பொருந்தா தாகும்.

ஆதலின் வந்த வாற்றை யறிந்துநின் னூர்க்குப் போதன்
மேதகு கருமமென் றம் மடமையோர் விளம்ப லோடுந்
தீதறு குணத்தான் மாண்ட செழுந்தவக் குசேல மேலோன்
ஏதமிக் குறத்தன் னுள்ளத் திவையிவை யெண்ணு வானல். (௧௧0)

மின்செய்த மதாணி யாமுத் தாரமாம் விளங்கு பட்டாம்
பொன்செய்த வூர்தி யாமிப் போதியாம் பெறுவ தெங்கே
நன்செய னம்மூ தாதை நாளினுங் கேட்ட தின்றால்
என்செய்வா மெண்ணு தொன்றை யியற்றுத லென்றுந் தீதே. (௧௧௧)

கந்தையிற் பொதிந்த நந்தங் கையுறை கண்டா ராகில்
நந்தலி லிகழ்ச்சி பொங்க நகைப்பரே யெனவுட் சாம்பி
அந்திலின் றுயங்குங் காலவ் வடர்மட மையரை நோக்கிச்
சுந்தர வறிவின் மாண்ட துவாரபா லகர்சொல் வாரால். (௧௧௨.)

---

௧0எ. எண்இரட்டி ஆயிரம்பொன் அன்னூர் - பதினாயிரம் கோபிகாஸ்திரீகள். மெத்திய - விரும்பிய. எண்மை - எளிமை.

௧0அ. மூரி - பெரிய. வான்அணவும் - ஆகாயமளாவிய. கோட்டின் - மரக்கிளையின். தேத்து இறாலுக்கு - தேன்கூட்டிற்கு.

௧௧0. ஆற்றை - வழியை. மாண்ட - மாட்சிமைப்பட்ட.

௧௧௧. ஊர்தி - வாகனம்.

௧௧௨. கையுறை - காணிக்கை. நந்தல் - கெடுதல். சாம்பி - வாடி. அந்தில் - அங்கே. உயங்குங்கால் - வருந்தும்போது. சுந்தர - அழகிய. மாண்ட - முதிர்ந்த. துவாரபாலகர் - வாயில்காப்போர்.

யாரென நினைத்தி ரிந்த விருந்தவத் தலைவன் றன்னைச்
சேருறு பொய்மை யில்லன் செறிந்தநோன் புழந்த நல்லன்
வாருறு மறைகள் வல்லன் மற்றெங்குஞ் செல்வா னல்லன்
ஏருறு மினிய சொல்ல னென்னவே யாமுட் கோடும். (ககங)

உலகினின்மா னுடப்பிறப்பேயரியதிழிகுலமொருவி யுயர்ந்தபின்னோர்
குலமுறுத லரியதத னினும்வசியர் குலமரிது கொற்ற வேந்தர்
நிலவுபெருங் குலமரிய ததனினுமற் றஃதினுமிக் கரிய நீரால்
பலர்புகழந்தணர்குலத்துத்தோன் றிடலென் றருமறைகள்பகருமன்றே.

அந்தணரே யரசர்முதன் மூவருக்கு மாசிரிய ரருளார் தெய்வம், அந்தணரே மறைக்கிழவன் முதலாய தேவரினு மாற்றல் சான்றோர், அந்தணரே யாவதற்கு மழிவதற்குங் காரணமா யமைந்த நீரார், அந்தணரே தெய்வமெனக் கென்றுகண்ண னுரைக்கவுமியா மயிர்த்த லென்னே. (ககரு)

மறையவருக் குயர்தெய்வத் தலங்களிடத் தமர்மாடம் வகுத்து ளோரும், நிறையுமுப நயனமண மகமாதி புரிதரப்பொன் னேர்ந்து ளோருங், குறைவறுபாற் செருத்தலா னிலன்முதற்பல் வகைத்தா னங் கொடுத்து ளோரும், அறையுமறு சுவையுணவு விலாப்புடைவீங் கிடவுணுமா றளித்து ளோரும். (ககசு)

---

ககங. நோன்பு உழந்த - விரதங்களால் மெலிந்த. வார் - பலசாகைகள் (நீண்ட). மறைகள் - வேதங்கள். ஏர் - அழகு. கொடும் - கொள்வோம்.

ககச. அரியது இழிகுலம். ஒருவி - நீத்து. பின்னோர் - சூத்திரர். அரியது அதனினும். கொற்றம் - வெற்றியுடைய. நீரால் - நற்குணங்களால். தோன்றிடல் என்று அருமறைகள்.

ககரு. மறைக்கிழவன் - பிரமதேவன். (மறை - வேதம்; கிழமை உரிமை) ஆற்றல் - வலிமை. சான்றோர் - மிகுந்தோர். நீரார் - குணமுடையவர்கள் உரைக்கவும் யாம். அயிர்த்தல் - சந்தேகித்தல்.

ககசு. அமர்மாடம் - வாழும்வீடுகள். வகுத்துளோர் - கட்டினவர்கள். உபநயன மணம் - பூணூல் கலியாணம். மகம் - யாகம்; வேள்வி. ஆதி - முதலானவைகளை - புரிதர - செய்ய. பொன்நேர்ந்துளோரும் - பொன் உபகரித்தவர்களும். பால்செருத்தல் - பால்மடியையுடைய. ஆன் - பசு. நிலன் - நிலம். அறையும் - சொல்லப்படும்- அறுசுவை:—கைப்பு, புளிப்பு, தித்திப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு. வீங்கிட - பெருக்க; பிதுங்க. (வயிறு நிரம்ப என்றபடி). உண்ணும் ஆறு அளித்துளோரும்.

தீயபுலி முதல்விருகத் தாற்கொடுங்கோன் மன்னவராற் றீயா னீரான்
மேயகொடுங் கள்வரான் மற்றெவைக ளாலுமிடர் விளைந்த போதில்
ஆயவிடர்க் கந்தோவென் றுளமிரங்கி விரைந்துபொரு ளாதி நல்கி
நேயமுறப் பேருதவி புரிந்தினுங் காப்பமென நிகழ்த்து வோரும்.

இம்மையிற்பல் பெருஞ்செல்வ மிடையறா துறப்பெருக வின்ற மைந்தர், செம்மையிற்செய் வினைநல்லோர் தமைச்சூழச் செழும் போகஞ் சிறப்பத் துய்த்திட், டம்மையிற்கற் பகநாடு சனிதூங்கத் தேவரா யரம்பை மாதர், கொம்மைவரி முலைப்போகஞ் சேணாட் டுய்த் ததற்பின்முத்தி கூடு வாரால். (௧௧௮)

இத்தகைய மறையவரை யெளியரென நினைப்பதெவ னிவணிற் கின்ற, வித்தகமா மறைத்தலைவன் றன்னைமுழு ஞானியென விளம் பல் வேண்டும், எத்தகைமை யாலெனின்மெய்ஞ் ஞானியர்தங் குணங் குறியு மிகத்தி லாசைச், சித்தமொரு வாதுழல்பொய்ஞ் ஞானியர்தங் குணங்குறியுஞ் செப்பக் கேண்மின். (௧௧௯)

கம்மாலுஞ் செயற்கரிய செயற்றலைநின் றொருவழிநாற் கரணஞ்செல்ல
அம்மாலு மறைப்பொருளி னிலக்குறுத்தி யயிற்கணா ராசை முன்னா
எம்மாலுங் கடந்தார்க்கு மணியாலும் பொன்னாலு மெந்த வேந்தர்
தம்மாலு மும்மாலு மெம்மாலு மாம்பயனென் சாற்று வீரே. (௧௨௦)

---

௧௧௭. விருகத்தால் - மிருகத்தால். தீயால் - நீரால். ஆய - அவ்வாறு விளைந்த. இடர்க்கு - துன்பத்துக்கு. அந்தோ - ஐயோ. நல்கி - கொடுத்து.

௧௧௮. இம்மை - இப்பிறவி. இடைஅறாது - இடைவிடாது. உற - மிக. துய்த்திட்டு - அநுபவித்து. அம்மை - மறுபிறவி. கற்பகநாடு - தெய்வலோகம்; சுவர்க்கம்; புண்ணியஞ்செய்வோர் அடையும்பதவி. அரம்பை மாதர் - தெய்வப்பெண்கள். கொம்மை - திரண்ட. வரி - தேமல்படர்ந்த. சேண்நாள் - நெடுநாள். துய்த்து - அனுபவித்து. சுவர்க்கம் முத்தியன்று.

௧௧௯. இத்தகைய - இப்படிப்பட்ட. எவன் - என். இவண் - இவ்விடத்தில். வித்தக மாமறைத் தலைவன் - ஞானமுடைய இப்பெரும் வேதியன். இகத்தில் - உலகத்தில். ஆசை - ஆசையிலே. சித்தம் ஒருவாது - மனம் விலகாது. கேண்மின் - கேளுங்கள்.

௧௨௦. கம் - பிரமன். நால்கரணம் - மனம் புத்தி சித்தம் அகங்காரம். அம் ஆலும் - அழகுபொருந்திய. இலக்கு உறுத்தி - எண்ணம் வைத்து; பதித்து. அயில் - வேல்போலும். கண்ணார் - கண்களையுடைய மாதர்கள். முன்னா - முதலாக. எம் மாலும் - எந்த ஆசைகளையும். (மால் - ஆசை).

வலங்கொள்செழு முகிலுரறி யுருமேறு பலவுதிர வழங்கி னாலும்
விலங்கலைவே ரோடுபறித் தொன்றினையொன் றடரவளி வீசி னாலுங்
கலங்கலையா ரெழுகடலு நிலைபெயர வுலகநிலை கலங்கி னாலும்
கலங்கிளர்தந் நிலைபெயரா ருண்ணடுங்கா ரவைகண்டு நகையா நிற்பார்.

புகழ்ந்துநறு விரைக்கலவை பூசிடினும் புல்லியரைப் போல நோக்கி
இகழ்ந்துபல பேசிடினும் விருப்புவெறுப் பென்பவவர்க் கென்று மில்லை
அகழ்ந்தமலக் கிழங்கினராய்ப் பசிவேளை கிடைத்தவற்றை யமுதாத் துய்த்துத்
திகழ்ந்திடுவர் சிறிதேனு நாளைக்கு வேண்டுமெனச் சிந்தை செய்யார்.

விண்ணிடையே குதன்மீளப் பாதலத்திற் புகன்மீட்டுப் புவியின்
மேவல், அண்ணியபல் பரகாயப் பிரவேசஞ் செயலுறையு மவ்
விடத்தே, எண்ணியவெ லாம்வரச்செய் திடன்முதற்செய் சித்தி
களை யென்றும் வேண்டார், புண்ணியபா தகமிலார் பெருமையிலார்
சிறுமையிலார் பொய்மெய் யில்லார். (௧௨௩)

ஆடுவா ருன்மத்தர் போற்றிரிவார் நகைத்திடுவா ரங்கை கொட்டிப்
பாடுவா ரின்றிருந்த விடநாளை யிருக்கமனம் பற்றார் சுற்றிக்
கூடுவார் தமிற்கூடார் கந்தையன்றி வேறுடுக்கை கொள்ளா ரன்னோர்
நீடுவார் புகழ்ப்பெருமை யிற்றென்று மதிப்பவரார் நிகழ்த்து வாரார்.

உற்றதலை மயிர்பறித்துப் பீலிகரத் திடைக்கொடுபா யுடைபு னைந்து
கற்றதவம் போலவமே பெருக்குவது ஞானமன்று கந்த மைந்தும்

---

௧௨௧. வலம் - வலிமை. முகில் - மேகம். உரறி - கோபித்து; சீறி. உருமேறு - இடி; ஆணிடி என்பர் (உரும்-இடி). வழங்கினாலும் - மழை பெய்தாலும். விலங்கலை - மலைகளை. அடர - தாக்க. வளி - காற்று. கலங்கு அலை ஆர். "வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும் - தானந் துளங்கித் தலைதடு மாறிலென் தண்கடலும்-மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்-டேனமொன் றில்லா ஒருவனுக் காட்பட்ட வுத்தமர்க்கே"—அப்பர்சுவாமிகள்.

௧௨௨. நறுவிரை கலவை-நல்ல வாசனையுடைய கலவைச்சாந்தம். அகழ்ந்த மல கிழங்கினராய் - ஆணவமல வேரை அறுத்தவராய். துய்த்து - உண்டு.

௧௨௩. பரகாயப் பிரவேசம் செயல் - கூடுவிட்டுக் கூடுபாய்தல்.

௧௨௪. உன்மத்தர் - பைத்தியக்காரர்; சித்தபிரமை கொண்டவர். அகம்+கை=அங்கை; உள்ளங்கை.

௧௨௫. தலைமயிர் பறித்தல் முதலியவை செய்வோர் சமணர்கள். சீவரம் - துவர்ஆடை; புத்தர்கள் தரிப்பது.| கந்தமைந்துங் கெடுதல் முதலியவை யுடை

வற்றநெடுஞ் சிவரம்போர்த் தொளிர்வதுவுஞான மன்று மற்றோர்போல
நற்றவம்வேண் டிலநாமே பிரமமென நவில்வதுவு ஞான மன்று.

ஓங்குபெரு ஞானியர்போற் பேசுவா ரவருண்மை வேடம் போலப், பாங்குபெற வுடற்புனைவார் சற்கருமஞ் செய்வோர்தம் பக்க மேகி, நீங்குகவென் றொழிப்பாரிந் நிலமேலாம் பிரமத்தி னிலையே யென்பார், ஈங்கிவர்க டாங்கெடுவ தன்றிமற்றோ ரையுங்கெடுக்கு மெண்ணம் பூண்டோர். (கஉகூ)

பொன்முதற்பல் பொருளிடத்து மிச்சையற்றார் போற்றுறவு பூண்டு பின்னர், வன்மைசெறி மனத்தபக்கு வர்க்குபதே சமுநவிற்றி வருவ தெல்லாம், நன்மைதரு முன்றொரெண் காறொழுகப் பள்ளை யென நயந்தோ ராயன்,புன்மையுறப் பற்றியஃ துடனழிந்தா னென்ற கதை போலு மாலோ. (கஉஎ)

மிக்கவறி வுடையாரைப் போன்றுமுடற் பற்றனைத்தும் விடுத் தார் போன்றுந், தக்கவழக் கிடத்தினுயர் திணைவினையஃ றிணைவினை யாய்ச் சமையச் சொற்றுந், தொக்கபடர்க் கைப்பெயர்முன் னிலைப் பெயரா கிடவுரைத்துஞ் சுழல்வ தெல்லாம், பக்குவமின் மடவோரை மயக்கியவர் கைப்பொருளைப் பறித்தற் கன்றே. (கஉஅ)

சிறப்புறுமில் லறத்தினிதுண் டுடுத்துமனை மக்களொடுஞ் செறிந்தா ரேனும்
பெறப்படுமப் பற்றுடையார் மெய்ஞ்ஞான நெறியுணர்ந்த பெரிய நீரார்

---

யோர் பௌத்தர். நாமே பிரமமென்போர் ஏகான்ம வாதிகள் ; இவர்தஞ் சமய உண்மைகளைச் சிவஞான சித்தியார் பரபக்கத்திற் பரக்கக் காண்க.

கஉகூ. பாங்குபெற உடல் புனைவார் - அழகுண்டாக உடம்பை அலங்கரித் துக் கொள்வார்கள். சத்கருமம் - நல்ல காரியம் (நிவர்த்தி மார்க்கத்துக்குரிய செயல்கள்).

கஉஎ. மனத்து அபக்குவர்க்கு. அபக்குவர் - பக்குவமில்லாதவர்கள். எண்கு - கரடி. ஆறு ஒழுக - ஆற்றிலடித்துக்கொண்டு செல்ல. பள்ளை என நயந்து - ஆடு என்று எண்ணி. ஆயன் - இடையன். புன்மை உற - தனக்குக் கெடுதி விளைய. அஃது உடன் - அக்கரடியோடு. "குட்டித் திரட்கரடி யாறொழுகக் கோன்குதித்துக், கட்டிப் புதைந்த கதையாகும் - அட்டமலப், பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப், புத்திபோற் காட்டும் பொருள் "—ஒழுவிலொடுக்கம்.

கஉஅ. சமைய - ஆக. உயர்திணை வினையை அஃறிணை வினையாகச் சொல் வது:—சுவாமிகள் எழுந்தருளியது என்று கூறுவது. நீர் என்பதைத் தாம்என வும் நீங்கள் என்பதைத் தாங்கள் எனவுங் கூறுவது.

கஉகூ. நீரார் - தன்மையுடையவர். அற - மிக. விறப்பு - பெருக்கம்.

அறப்பெரிய துறவறஞ்சார்ந் தவர்க்குமிவ ரதிகமெனு அறையுநூல்கள்
சிறப்புறுமஞ் ஞானியரெவ் வறத்திலுமெவ் வகைச்சிறப்பு மேவி டாராய்.

இம்மறையோன் முழுஞானி யாயிருந்துஞ் சற்கரும மிழந்தா னல்லன்
செம்மைபெறு மக்கருமத் தாலிளைத்த திவனுடம்பு திண்ண மீதே
மும்மையுல கிடத்துமொரு ஞானியரி யவனென்றே முழங்கு நூல்கள்
எம்மையினி தாண்டருள எழுந்தருளி னனென்றே எண்ணங் கோடும்.

ஆதியினற் கலையுணரு நாட்பழக்க மென்றுரைத்த தமைய மெய்யே
நீதியநம் மரசனைக்கண் டிடும்விருப்ப மீக்கூர நேடி வந்தான்
ஓதியவிவ் வன்றியிவ னரசரிடைப் பெருங்கரும மொன்று மின்றாற்
காதியதீ வினையுடையே மாதலினால் யாமின்று காணப் பெற்றேம்.

ஆவாவிம் மறையோனைக் காண்டொறுமுள் ளகத்துவகை யரும்பாநின்ற, தோவாது மெய்யினிடைப் புளகமெழு கின்றனகண் ணுறுகாநின்ற, நாவாரத் துதிப்பதற்குத் துடிதுடிக்கின் றதுவிரைந்து நாம்போ யின்னே, தேவாதி தேவனுக்கித் தவன்வரவை விண்ணப் பஞ் செய்ய வேண்டும். (கநஉ)

வேறு

என்றறி யாமையி னிகழ்ந்து கூறிய
வன்றிணி மனத்தினர் வாய டங்கிடக்
கன்றலி லுரைபல கரைந்து மாதவக்
குன்றனன் திருமுக நோக்கிக் கூறுவார். (கநந)

மறையெலா முணர்ந்துமெய் வாய்ந்து வெம்பவச்
சிறையெலாங் கடந்தமாச் செல்வ வேதிய

கந௦. இம்மறையோன் - இந்தப் பிராமணன் (குசேலன்). திண்ணம் - உண்மை. மும்மை - மூன்று. கோடும் - கொள்ளா நிற்கின்றேம் (கோடல் - கொள்ளல்; கொள் பகுதி).

கநக. கலையுணருநாள் - நூல்களைப் படிக்கின்ற காலத்து. அமைய - முற்றிலும். மீக்கூர - அதிகப்பட; (கூர்தல் - உள்ளது சிறத்தல்). நேடி - தேடி. இவ் - இவை. காதிய தீவினையுடையேம் - புண்ணியமுடையேம்; (காதிய - வென்ற).

கநஉ. ஆ ஆ - மிக வியப்பு. உள் அகம் - மனம். உவகை - சந்தோஷம். அரும்பா நின்றது - உண்டாகிறது. ஓவாது - நீங்காமல். மெய் - தேகம். புளகம் - மயிர் சிலிர்த்தல். தேவாதிதேவன் - கண்ணபிரான்.

கநந. கன்றல் - வெறுப்பு. கன்றலில் உரை - இன்னுரை. கரைந்து - சொல்லி.

கநச. பவம் - பிறவி. களிகூர்ந்தனம் - சந்தோஷமடைந்தோம்.

தறையெலாம் புகழுநின் வருகைத் தன்மையாற்
குறையெலாந் தவிர்ந்தனங் கூர்ந்த னங்களி. (கசச)

ஆய்ந்தநின் பெருங்கலை யருமைப் பாடுஞ்சீர்
வாய்ந்தமா தவம்வளர் மறுத செல்வமுந்
தோய்ந்தவுட் டுய்மையுந் துகளி றன்மையும்
பாய்ந்தமா லுலகமோ பகுத்த றிந்திடும். (கசரு)

சிறியவர் மடமையிற் செறித்த வார்த்தையைக்
குறிபெற நின்றிரு வுளத்துக் கொண்டிடேல்
அறிதரு முளத்திடைக் கொள்ளி லம்மவோ
மறிவரும் பீழைநோய்க் கடற்கண் மாய்வரே. (கசசு)

கங்கையே முதனதி களிப்பி னுடிடும்
பொங்குமா தானங்கள் புரிந்து மிட்டிகள்
இங்குபற் பலசெய்து மெய்தும் பேறெலாந்
துங்கநின் றரிசன மொன்றிற் றேன்றுமே. (கசஎ)

காலமூன் றையுமறி கருத்த போற்றிநற்
சீலமார் தருமறைச் செல்வ போற்றிமெய்
வாலறி வுடையவ வரத போற்றியெம்
பாலருள் சுரந்தருள் பனவ போற்றியே. (கசஅ)

சற்றுநீ யிவ்விட மிருக்கிற் சார்ந்தியாங்
கொற்றமார் கண்ணற்குன் வரவு கூறுபு
முற்றுவ மென்றவன் முன்வ ணங்குபு
பொற்றவவ் விடனின்றும் போயி னாரரோ. (கசகூ)

---

கசரு. மறுத - நீங்காத. உள்தூய்மை - மனசுத்தம். துகள் இல் - குற்றமில்லாத. மால் - மயக்கம்; இருள்; அஞ்ஞானம்.

கசசு. மறிவரும் பீழைநோய் கடல்கண் - மீளக்கூடாத துன்பத்திற்கேதுவான பிறவிக்கடலிலே. (மறிவரு - தடுக்க முடியாத.)

கசஎ. இட்டிகள் - யாகங்கள். எய்தும் பேறு எல்லாம் - அடையும் பெரும் பயன்கள் யாவும். துங்கம் - உயர்வு; பெருமை; பரிசுத்தம்.

கசஅ. காலம் மூன்று:—இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம். கருத்த - கர்த்தனே; தலைவனே. வால் அறிவு. மெய்யறிவு. வரத - வரத்தைக் கொடுப்பவனே. பனவ - பிராமணனே.

கசகூ. கொற்றம்ஆர் - வெற்றி பொருந்திய. கூறுபு - சொல்லி; செய்பு என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். முற்றுவம் - திரும்பி வருவோம்; உமது கருத்தை நிறைவேற்றி முடிப்போம் எனினுமாம். பொற்ற - பொலிவுள்ள; (குறிப்புப் பெயரெச்சம். பொன் - பகுதி). அரோ - அசை.

## வேறு

திரண்ட மாமணி குயிற்றுபு செம்பொன்செ யெழுபத்
திரண்டு வாயிலும் விரைவினிற் கடந்தன ரிலங்கி
முரண்ட வாமுடி மன்னவர் மொய்த்திடுஞ் செல்வ
அரண்ட வாத்திரு வோலக்க மடைந்தனர் காணார். (கசO

அந்தி டத்தமர் வாரைநம் மரசமர் கின்ற
தெந்தி டத்தென வினவின ரிலங்கெழி றருபொற்
பந்த டுத்தகை யாரொடும் பயின்மணிச் சிகரத்
திந்த டுத்தபே ருவளகத் தெனவவ ரிறுத்தார். (கசக)

கேட்ட காலையின் ஞெரேலெனக் கிளருவ ளகப்பால்
ஓட்ட மீதெனப் படர்ந்தன ரொளிர்நுதி வடிவேற்
கூட்டம் யாவையுங் குமைத்துமை தோய்ந்துபொற் குழைபாய்
நாட்ட மாதரார் காவல்செய் வாயில்நண் ணினரால் (கசஉ)

நெடிய நீர்மையித் துவாரபா லகர்செயல் நிற்க
படியி லாவளம் பரந்தவவ் வுவளகப் பண்பை
முடிய யாவரே யெடுத்துரைப் பவர்நசை முளைத்துத்
துடிது டித்துநா வெழுதலிற் சிறிதுசொற் றிடுவாம். (கசங)

---

கசO. மணி-இரத்தினங்கள். குயிற்றுபு-பதித்து; இழைத்து. முரண்தவா - வலிமைகெடாத. அரண்தவா - காவலொழியாத. ஓலக்கம் - கொலுமண்டபம்.

கசக. அந்த இடத்து—நிலைமொழியீற்று அகரந்தொக்கது. அரசு - கண்ணபிரான். அமர்கின்றது எந்த இடத்து என வினவினார் - எழுந்தருளியிருப்பது எந்த இடத்தில் என்றுகேட்டார்கள். இலங்கு - விளங்கும். எழில் தரு - எழுச்சியுடைய. எழு - பகுதி. இல் - விகுதி. பொன் - அழகிய. பந்து அடுத்த கையார் - பந்துபொருந்திய கையினையுடைய மாதர்கள். இந்து - சந்திரன். பேர் உவளகத்து - பெரிய அந்தப்புரத்திலே (இருக்கிறார்). இறுத்தார்- விடைதந்தார்கள்.

கசஉ. ஞெரேல் - விரைவுக்குறிப்பு. கிளர் - விளங்கும். படர்ந்தனர் - (வேகமாக) நடந்தவர்களாய். நுதி - நுனி. குமைத்து - கொன்று- குழை - காதணி. நாட்டம் - கண்கள்.

கசங. நெடிய நீர்மை-உயர்ந்தகுணத்தையுடைய. படி - ஒப்பு. பண்பை - தன்மையை. நசை - ஆசை.

கசச. கால் - உபசர்க்கம். யாத்த - பதித்த கால்யாத்த - அடிப்படையிற் கொட்டப்பட்ட எனினுமாம். புரிசை - மதில். முகில் - மேகங்கள். விராய்

பொன்னி னாற்செய்து மணிகள்கால் யாத்தவண் புரிசை
மின்னி னாற்பொலி யப்படு முகில்விராய்த் துயில்வ
உன்னி னாற்கட லுலகுசொல் கண்ணனென் னிறத்தை
மன்னி னாற்பெற லாமென மதித்தன போலும். (கசச)

மண்ண கந்தவப் பதிதர நீலமால் வரைசாய்த்
தெண்ண கந்தபக் கொணர்ந்தகல் லடுக்கிமே லெழுப்பிக்
கண்ண கங்கவர் வேதிசெய் திருபுறங் கதிர்ப்பப்
பண்ண கம்பொலி வயிரயா ளிப்படி யமைத்து. (கசரு)

இலங்கு வெண்பொனிட் டிகைகளாற் சுவர்த்தல மெழுப்பி
நலங்கொள் பன்மணி பதித்தபொன் னிலைகளு நாட்டித்
துலங்கு மாமர கதப்பல சாளரந் தொகுத்து
வலங்கொள் வச்சிர விருநிலைக் கதவமும் வயக்கி. (கசசு)

நிறையு மேதகத் தாற்பல தூணடி நிலைவைத்
துறையு மேற்பல மணிகடை தூணங்க ளுறுத்தி
அறையு மப்பல தூணெருத் தத்துற வணிந்த
தறையு கழ்ந்திடு செந்துகிர்ப் போதியுஞ் சார்த்தி. (கசஎ)

அன்ன போதிமேல் வெண்பொனுத் தரமியைத் தடுப்ப
நன்ன ராக்கிய விடங்கமு முறுத்திமே னயப்பப்
பன்னு பொற்றக டடுக்கிவேய்ந் ததற்குமேற் பரிதி
மன்னு மாமணிக் குடநிரீஇ யமைத்தன மாடம். (கசஅ)

---

துயில்வ - வந்துசேர்ந்து உறங்குவனவற்றை. உன்னினால் - நினைத்தால். மன்னினால் - (மதிலின்மேல்) பொருந்தினால்.

கசரு. மண் அகம் - மண்ணிடம்; நிலம். தவ - அதிகமாக. பதிதர - பதியும்படி. மால் - பெரிய. வரை - மலை. சாய்த்து - வெட்டி. அகம்தப - மனந்தளர. கண் அகம் - கண்ணிடத்தை. வேதி - வேதிகை; மேடை. கதிர்ப்ப- ஒளிவீச. பண் - அலங்கரித்த. அகம் - இடம். யாளி - சிங்கம்; யானை; துதிக்கையுடைய ஒருவகைச்சிங்கம்.

கசசு. வெண்பொன் - வெள்ளி; (பொன் - உலோகம்). இட்டிகை - கல். பொன் நிலைகள் - பொற்கதவு நிலைகள். மரகதம் - பச்சைக்கல். சாளரம் - சன்னல். வலம்கொள் - வலிமையுடைய. இருநிலைக் கதவம் - இரட்டைக்கதவுகள். வயக்கி - விளங்க அமைத்து.

கசஎ. மேதகம் - கோமேதகம். உறையும் - தங்குதற்குரிய. கடை - கடையப்பட்ட. அறையும் - சொல்லப்படும். எருத்தத்து - உச்சியிலே. உற - நன்றாகப்பொருந்த. தறை-உலகத்தார். துகிர் - பவளம். போதி-போதிகைக்கட்டை.

கசஅ. இயைத்து - பொருத்தி. அடுப்ப - (அவைகளைச்) சேர. நன்னர் - செப்பமாக. விடங்கம் - கொடுங்கை. நயப்ப - (எவரும்) விரும்ப. பன்னும் - வியந்துசொல்லப்படும். வேய்ந்து - மூடி. பரிதி மன்னுமா மணிகுடம் நிரீஇ - சூரியகாந்தியையொத்த பெரிய ரத்தினக்கலசங்களை நிறுத்தி.

ஓங்கு சந்திர காந்தமா ளிகைகளை யுரைக்கோ
வீங்கு நாசிசோ பானவண் மையைவிரித் திடுகோ
தேங்கு சூளிகைச் சிறப்பினை யிற்றெனத் தெரிக்கோ
பாங்கி யற்றிய சித்திரத் தொகுதியைப் பணிக்கோ. (கசசு)

மற்று நாற்றிய பன்மணி மாலையை வகுக்கோ
சுற்று நாற்றிய பொன்மலர்ப் பிணையலைச் சொல்கோ
கற்றை யங்கதிர்ச் சாமரைத் தூக்கினைக் கரைகோ
இற்ற தென்றுரைத் திடவெளி யனவல யார்க்கும். (கருO)

தங்கு மேனிலை மாடமேல் வெள்ளிடை தணப்ப
எங்கும் வார்கமஞ் சூன்முகிற் குழாம்பொலி யியக்கஞ்
சிங்க லற்றவிண் ணவர்கள்கண் ணூறுசே ராமைப்
பொங்கு நீணிறக் கஞ்சுகஞ் செறித்தது போலும். (கருக)

அன்றி யுங்குடஞ் சுட்டினம் புரந்தவந் நாளின்
மன்ற வேய்ங்குழற் கோவலர் மகிழ்தரக் கொண்ட
வென்றி வார்குடை யாகிய விலங்கலங் குவட்டில்
துன்றி டுந்தடித் தொடுசெறிந் தமையயுந் துணையும். (கருஉ)

தீத்தி ரட்பொறி காரண மின்றியுஞ் சிதறக்
காத்து மேனிலை விழித்துநிற் பவர்கைவா ளொளியுங்

கசசு. சந்திரகாந்தம் - ஓர் சாதிக்கல்; சந்திரனைக்கண்டால் தண்ணீர் கக்குவது. சூரியகாந்தம் - சூரியனைகண்டால் நெருப்பைக் கக்குவது. வண்மையை - வளப்பத்தை. விரித்திடுகோ - விரித்துச் சொல்வேனோ. சூளிகை - நிலாமுற்றம். இற்று என - இத்தன்மை என்று. தெரிக்கோ - தெரிவிப்பேனோ. பாங்கு - அழகு. பணிக்கோ - விளக்குவேனோ. உரைக்கோ உரைப்பேனோ. வீங்கு - பெரிய; பருத்த. நாசி - ஒருசித்திர உறுப்பு மேனிலைக்குச்செல்ல அமைக்கப்பட்ட வாயிற்படி. சோபானம் - படி.

கருO நாற்றிய - தொங்கவைத்த. பிணையல் - மாலை. கற்றை - தொகுதி. சாமரம் - கவரி. தூக்கு - தொங்கல்; மாலை. கரைதல் - சொல்லுதல்.

கருக. வெள்ளிடம் - வெற்றிடம். தணப்ப - ஒழிய. வார் - நீண்ட; பெரிய; மிகவும். கமம் - நிறைவு. சூல் - கர்ப்பம். முகில் குழாம் - மேகக்கூட்டம். சிங்கல் - சாதல். கண்ணூறு - கண்திருஷ்டி. கஞ்சுகம் - உடை. செறித்தது - போர்த்தது.

கருஉ. குடஞ்சூட்டு இனம் புரந்த - பசுக்கூட்டங்களைக் காத்தருளிய. மன்ற - மிகுதியாக. வேய்ங்குழல் - புள்ளாங்குழலை யுடைய. கோவலர் - இடையர்கள். விலங்கல் - மலை (கோவர்த்தனகிரி). அம் - அழகிய. குவட்டில் - உச்சியில். துன்றிடும் - படர்ந்துநிற்கும். தடித்து - மின்னல். துணையும் - ஒக்கும்.

தூத்து ளிப்படு குயின்குழா மின்றெருகு மொளியும்
பாத்த றிந்திடத் தேவர்க்கும் யாவர்க்கும் படாவால். (கருந)

சிறந்த தன்குலத் துதித்தவன் செல்வத்தி னுறையும்
உறந்த பன்மணி மாளிகை தனக்குமிக் குறித்தென்
றறந்த வாதெழு மதிவிசும் பாறுசெல் வருத்தந்
துறந்தி டும்படி சற்றுறைந் தகலுநா டோறும். (கருச)

திருவிற் கான்றிடு சோமகாந் தச்செழுஞ் சிகரம்
உருவச் சந்திர னெழுதலு முகுத்தநீர் பெருகி
மருவிக் காலென வழியரு விபுமவண் வயங்கும்
பருவக் கோவைமுத் தாரமும் பகுத்திட லரிதே. (கருரு)

மேய மேனிலை மாடங்கள் வெள்ளொளி விரித்துப்
பாய தாரகைக் கணத்தொடு பயிலுறு காட்சி
தூய பாற்கடல் சங்கநா டொறுந்தன்பாற் றுறந்த
நேய முத்தொடு பொங்கிமே லெழுந்தென நிலவும். (கருசு)

ஐய நுண்ணிடை யயிலலைத் தமர்த்திடு மரிக்கண்
மையன் மாதரார் பற்பலர் தனித்தனி மருவச்
செய்ய காற்பரி யங்கமேல் லணையொடு செறித்த
வெய்ய வற்றெறுடு சிகையள வில்லறை விளங்கும். (கருஎ)

---

கருந. தூதுளி - சுத்தமான மழைத்துளிகள். குயில்குழாம் - மேகக் கூட்டங்கள். பாத்து - பகுத்து.

கருச. உறையும் - வாழும். உறந்த - மிகுந்த. அறம் தவாது - தருமங் கெடாது. மதி - சந்திரன். விசும்பு ஆறு - ஆகாயமார்க்கத்தில். துறந்திடும் படி - ஒழியம்படி. உறைந்து - தங்கி. (கண்ணபிரான் அவதரித்தகுலம் சந்திர குலம்.)

கருரு. திருவின் கான்றிடு - அழகுடன் உமிழ்கின்ற. சோமகாந்தம் - சந்திரகாந்தக்கல். உருவச்சந்திரன் - முழுநிலா. உகுத்த - உமிழ்ந்த. அருவி - சிற்றாறு. அவண் வயங்கும் - அந்த இடத்தில் விளங்காநிற்கும்.

கருசு. மேய - பொருந்திய. பாய - பரந்த. தாரகை கணம் - நக்ஷத்திரக் கூட்டம். துறந்த - வெளிவந்த. நிலவும் - விளங்கும்.

கருஎ. ஐய நுண்ணிடை - அழகினையுடைய நுண்ணிடையையும். அயில் அலைத்து - வேலாயுதத்தை வருத்தி. அரி - செவ்வரி; இரேகை. மருவ - இருக்க. செய்ய - சிவந்த. பரியங்கம் - கட்டில். வெய்யவன் - சூரியன்.

வருக்கை வாழைதே மாக்கமு கமுப்பலத் தென்னை
முருக்கு நாரமுண் மாதுளை மொய்த்தமுந் திரிகை
பருக்கு மின்சுவைக் கனியுடை மற்றைப்பா தவங்கள்
பெருக்கி யென்றுநல் வளந்தரு சோலைகள் பிறங்கும். (௧௫௮)

கண்ண ருவயின் வருந்தொறுங் களிமயிற் கூட்டம்
விண்ணின் மேற்பயின் மேகமிம் மண்விர வியதென்
றெண்ணி டக்கடை யிலாத்தழை கோலியின் பகவும்
பெண்ண ணங்கனை யாரைத்தம் மினமென்று பெட்கும். (௧௫௯)

குழைகி ழித்தயி றடற்றுறத் துரந்துநேர் குறுகும்
உழைகி ழித்தொளிர் நோக்கினு ரூசலாட் டுவப்பும்
பிழைகி ழித்தபொற் கந்துக வாடலின் பெருக்கும்
மழைகி ழித்தவச் சோலையின் மறாதென்றும் வயங்கும். (௧௬௦)

கோங்கு மாதவி பாடலங் குராவழை புன்னை
தேங்கு சண்பகங் குங்குமஞ் சந்தனஞ் செருந்தி
ஓங்கு கைதைமந் தாரமா லதியொளிர் கற்பு
வீங்கு சாதிமுற் பலவுள விரைத்தவுய் யானம். (௧௬௧)

சால மெய்யிற்பெண் குறியின ருய்ப்பழி தழைந்தோன்
பால மர்ந்திட றகாதென நீங்கிய பண்பே
போல மன்றலங் கற்பக மாயிடைப் பொலிந்து
கோல மார்ந்தள விடற்கரு வளங்கொழித் துறையும். (௧௬௨)

---

௧௫௮. வருக்கை - பலா. தேமா - தித்திப்புமாமரம். (புளிமா - புளிப்பு மாமரம்), நாரம் - நாரத்தை. பாதவங்கள் - மரங்கள். பிறங்கும் - விளங்கும்.

௧௫௯. ஆவயின் - அந்த இடத்திற்கு. விரவியது - வந்தது. கடையிலா- இடமில்லாத. தழைகோலி - தோகையை விரித்து. இன்பு அகவும் - ஆனந்தமாக ஆடும். அணங்கு அனையாரை - தெய்வப்பெண்கள் போன்றவர்களை. பெட்கும் - நேசிக்கும்.

௧௬௦. குழை கிழித்து - காதணியைத் துளைத்து. அயில் தடறு உற- வேலாயுதம் உறையில் நுழைய. துரந்து - துரத்தி. உழை-மானின்பார் வையை (முதலாகுபெயர்.) நோக்கினர் - கண்களையுடைய பெண்களினது. பிழை கிழித்த - குற்றமற்ற. கந்துக ஆடல் - பந்தாடல். மழை - மேகம். மறாது - நீங்காமல். வயங்கும் - விளங்கும்.

௧௬௧. விரைத்த - வாசனை வீசுகிற. உய்யானம் - பூங்காவனத்தில். மாதவி- குருக்கத்தி; வசந்தகால மல்லிகை. பாடலம் - பாதிரி. வழை - சுரபுன்னை. செருந்தி - மணித்தக்காளி. கைதை - தாழை. மாலதி - சிறுசண்பகம்; ஒருவகை மல்லிகை. கற்பு - முல்லை.

௧௬௨. மெய்யில்****பால் - தேவேந்திரனிடத்தில். பண்பு - தன்மை. மன்றல் - வாசனை. அம் - அழகு. ஆயிடை - அவ்விடத்தில். கோலம் ஆர்ந்து- அழகுநிறைந்து.

அன்றி யும்பல நாள்கண்முன் னோனிடத் தமர்ந்தாம்
ஒன்று பின்னவ னிடத்துமவ் வாறுற வுறைவாம்
என்று வந்துறை கின்றமை யும்பொரூஉ மிலங்கித்
துன்று பைந்தரு வைந்துமா வயிற்பொலி தோற்றம். (கஃ௩)

ஈர்ந்தெ டுத்தவெண் பளிங்கினை நிலனுற விருத்திச்
சார்ந்த நாற்புறம் வெண்பொனாற் படித்தலஞ் சமைத்துக்
கூர்ந்த முத்தவெண் மணலடிப் பரப்பிமேற் குலவ
வார்ந்த தண்புன னிரப்பிய தடங்களும் வயங்கும். (கஃ௪)

நீண்ட வாட்கருங் கண்ணினை யாரொடு நீதி
பூண்ட மாமணி நிறத்தவ னுடல்செய் பொய்கை
வேண்டு மேற்புனல் பெருகவுஞ் சுருங்கவும் விளைக்குஞ்
சேண்டு லங்கிய தூம்புகள் பற்பல செறியும். (கஃ௫)

செய்ய தாமரை பற்பல வாவயிற் செறிந்த
ஐய செம்மணிப் படியொளி கதிர்த்தலா லல்லும்
மையில் செஞ்சுடர்க் கண்டென மலருமற் றுங்கு
நைய லின்றியஞ் சம்பல பயிற்றரு நாளும். (கஃ௬)

---

கஃ௩. முன்னோன் - அண்ணனாகிய இந்திரன். பின்னவன் - தம்பியாகிய ஸ்ரீ கண்ணபிரான். காசிபருக்கும் அதிதிக்கும் இந்திரன் பிறந்தபின்னர் வாமனனாக நாராயணமூர்த்தி பிறந்தமை குறித்து இந்திரனை 'முன்னோன்' என்றும், கண்ணனைப் 'பின்னோன்' என்றுங் கூறினார். உறைதல் - வசித்தல். பொரூஉம் - ஒக்கும். துன்று - நெருங்கிய. பைந்தரு ஐந்தும் - பசுமையான பஞ்சதருக்களும். (சந்தனம், அரிச்சந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம்). ஆவயின் - அந்த இடத்தில்.

கஃ௪. ஈர்ந்து - பிளந்து. கூர்ந்த - அதிகமான. முத்தம் - முத்துக்களாகிய குலவ - விளங்க. வார்ந்த - ஒழுகும்படியான. தண்புனல் - குளிர்ந்தநீர்.

கஃ௫. மணி நிறத்தவன் - நீலமணி நிறத்தையுடைய ஸ்ரீ கண்ணபிரான் இலக்குமியை மார்பிலுடையவனெனுமாம். பொய்கை - தடாகம். புனல்-ஜலம். விளைக்கும் - செய்யும். சேண்துலங்கிய - அகன்ற; நீண்ட. தூம்புகள் - உட்டுளைகள்; மதகுகள்.

கஃ௬. செய்ய - சிவந்த. ஆவயின் செறிந்த - அந்த இடத்தில் நெருங்கியுள்ள. ஐய - அழகினையுடைய. கதிர்த்தலால் - வீசுதலால். அல்லும் - இரவிலும். மையில் - குற்றமில்லாத. செஞ்சுடர் - சூரியனை. கண்டென - கண்டாற்போல. நையல் - துன்பம். அஞ்சம் - அன்னம். பயில்தரும் - வசிக்கும்.

குலவு பூந்தட நடுவமர் குடுமிமா மாட
நிலவு வெள்ளொளி விரித்தலாற் றன்னரை நிரம்பச்
சுலவு பாசடை சுற்றநின் றிடுதலாற் சுடர்விட்
டுலவு வெண்பளிக் குருவநீ லுடைப்பிரா னுறழும். (கசூஎ)

மருவி டம்புரி வலம்புரி சலஞ்சலம் வயிற்றுக்
கருவு ளைந்துசோ பானத்திற் கான்றபன் முத்தந்
திருவ னாரடிப் படுந்தொறு முறுத்துமச் செல்லல்
ஒருவு மாசிறி தத்தலைப் படிந்தபூ வுஞற்றும். (கசூஅ)

பெருமை சேர்புகழ்க் கண்ணனென் கயலெனப் பிறழுங்
கருமை தீட்டிய கண்ணினார் பலரொடுங் கவின
ஒருமை யன்பின்வீற் றிருக்குமத் தன்மையை யுணரின்
அருமை யுற்றவை குந்தமு மதற்கிணை யாமோ. (கசூகூ)

நன்ன யத்தபல் வளம்பெறு முவளக நடையில்
என்ன சொற்றனன் சிறிதும்விண் டேனல னினிமேற்
பன்ன கத்துயிற் பகவன்வீற் றிருக்குமப் பண்பிற்
றன்னம் விண்டுவிள் ளாதசீர்க் கதைசொலச் சமைந்தேன். (கஎ0)

துன்று சந்திர காந்தத்தி னமைத்தவொண் சுவர்க்கண்
ஒன்று மாறுசெஞ் சந்தனங் கருப்புர மொருவா

---

கசூஎ. குடுமி - உச்சி. அரை - நடு இடம்; மத்தி. சுலவும் - சுழலும். பாசடை - பசிய இலைகள். நீல் உடை பிரான் - பலராமன். உறழும் - ஒக்கும். வெண்பளிங்கு நிறம்போன்ற மேனியுடைய பலராமன் தன் அரையில் அணிந்திருப்பது நீல உடையாகலான் ஈண்டு அவனைப் பசிய இலைகளாற் சூழப்பெற்ற வெண்பளிங்கு மாடத்திற்கு உவமை கூறினார்.

கசூஅ. இடம்புரி - இடப்பக்கஞ் சுருண்டுள்ள சங்கு. சலஞ்சலம் - வலம்புரியாயிரஞ்சூழ அவைகளின் நடுவண் விளங்குஞ் சங்கு. உளைந்து - வருந்தி. சோபானத்தில் - படிகளில். கான்ற - ஈன்ற. திரு அன்னார் அடி - இலக்குமி போன்றவர்களாகிய பெண்களின் பாதங்கள். செல்லல் - துன்பம். சிறிது ஒருவுமாறு - சிறிது நீங்கும்படி; தணியும்படி. அ தலை படிந்த பூ உஞற்றும் - அவ்விடத்தில் உதிர்ந்துள்ள மலர்கள் செய்யும்.

கசூகூ. கவின - அழகாக.

கஎ0. உவளகம் - அந்தப்புரம். விண்டேன் அல்லன் - சொன்னேனில்லை. பன்னகம் துயில் பகவன் - பாம்பின்மீது உறங்கும் ஸ்ரீ கண்ணபிரான். பண்பு - சிறப்பு. தன்னம் - சிறிது.

தென்று நாறிய மான்மதங் குங்கும மின்னும்
நின்ற பல்விரை வருக்கமு நிறைதரக் கூட்டி. (களக)

விரைது வன்றிய மென்பனி நீரிடைக் குழைத்துப்
புரைய கன்றிடப் பூசியொண் காரகில் புகைத்துத்
தரைசெ றிந்திட நறுமயிர்ப் படாந்தவ விரித்து
வரையில் பன்மணிக் கம்பல மேலுற வயக்கி. (களஉ)

அமைத்த சீர்மணி மாளிகை நாப்பண்வா ளவிரச்
சமைத்த பன்மணி யருத்திய தடப்பரி யங்கத்
திமைத்த மூவகைப் பஞ்சியன் மயிரனத் தூவி
குமைத்தி யற்றிய வைந்தணை யடுக்கிமீக் குலவ. (களங)

உரக மெல்லுரி பரலெனக் குழையும்வெள் ளொளிப்பட்
டிரவெ ழுஞ்சுடர்க் கதிர்தவழ்ந் தெனவிரித் தியக்கி
அரவ மேகலை யாரமைத் திட்டவப் படுக்கை
விரவு பாற்கடற் படுக்கையிற் சிறப்புற மேவி. (களச)

---

களக. ஒன்றுமாறு - பொருந்தும்படி. ஒருவாது என்றும் நாறிய - நீங்காமல் எப்பொழுதும் வாசனை வீசும் தன்மையுள்ள. மான்மதம் - கஸ்தூரி. விரைவருக்கம் - வாசனை வஸ்துக்கள்.

களஉ. துவன்றிய - நிறைந்த. புரை - துவாரம்; இடம். நறுமயிர்ப் படாம் - நல்ல மயிர்க்கம்பலம். தவ - மிகுதியாக; ஏராளமாக. மணிக்கம்பலம் - இரத்தினக்கம்பலம்.

களங. நாப்பண் - நடுவிலே. வாள் அவிர - ஒளி விளங்க. தடம்பரியங்கத்து - விசாலமான கட்டிலிலே. இமைத்த-விளங்கிய. மூவகைப்பஞ்சு:—செம்பஞ்சு, வெண்பஞ்சு, இலவம்பஞ்சு. இயல்மயிர் - மெல்லியமயிர். அன்னத்தூவி- அன்னப்பறவையின் இறகு. குமைத்து - உள்ளே புகுத்து. ஐந்தணை - மேற்சொன்ன முப்பஞ்சினோடு மெல்லிய மயிரையும் அன்னப்பறவையின் இறகையும் சேர்த்துத் தனித்தனி செய்யப்பெற்ற மெத்தைகள். (அழகு, குளிர்ச்சி, மென்மை, நறுமை, வெண்மை என்னும் ஐந்து குணமுடைய மெத்தைகள் எனினுமாம்).

களச. உரகம் மெல் உரி - பாம்பினுடைய மிருதுவான தோலும். பரலெனை - பருக்கைக்கற்களென்னும்படி. குழையும் - இளகும்; நெகிழும்; மிக மெல்லிய. இரவு எழுஞ்சுடர் - சந்திரன். கதிர் - கிரணம். தவழ்ந்தென - தவழ்ந்தாற்போல. அரவம் - ஒலி. மேகலையார் - மேகலாபரணத்தை யணிந்துள்ள பெண்கள். படுக்கையில் - படுக்கையைப் பார்க்கிலும்.

அரும்பு சீதளப் பாற்கடற் றுயிலுநா ளவிரும்
விரும்பு செந்துகி ரோடலைக் கொழுந்தெழீஇ விழல்போற்
கரும்பு போன்மெனக் கரையுமஞ் சொல்லினர் கவரி
இரும்பொற் கால்பிடித் தெக்கழுத் தம்பெற விரட்ட. (௧௭௫)

அல்லி ரிக்குழுத் தோரம்வைத் தலங்குசாந் தாற்றி
மெல்லி யற்கவி னொருத்திகைப் பற்றுபு வீச
வல்லி யிற்பொலி யொருமகண் மாடகந் திரித்து
நல்லி யற்படு வீணையி னரப்பொலி யெழுப்ப. (௧௭௬)

குலவு கப்புர மிலவங்க மேலமுற் கூட்டி
நிலவு வெண்ணகை யொருத்திமென் பாகடை நீட்டக்
கலவ மாமயில் வெருவுறு சாயலங் கருங்கண்
இலவி தழ்க்கொடி யொருத்திபொற் படியக மேந்த. (௧௭௭)

வண்டு வார்குழ லாருள மயக்குநின் னுருவங்
கண்டு பாரென வொருத்திநேர் கண்ணடி காட்ட
விண்டு மென்பனி நீருறைத் திடுமிதின் விரைமிக்
குண்டு கொண்டிடென் றொருத்திபூஞ் செண்டுகை யுதவ. (௧௭௮)

இழையி டைக்கொடி யொருத்திபொற் சிரகநீ ரேந்தத்
தழையொ ளிச்செழும் பாதுகை யொருத்திகைத் தாங்க
வழைம லர்த்தொடை வண்டறற் றிடநற வாக்கும்
மழைமு கிற்குழ லொருத்திமெல் விரைப்புகை வயக்க. (௧௭௯)

---

௧௭௫. துகிர் - பவளம். கரையும் - பேசும். இரும்பொன்கால் - பெரிய பொற்காம்புகளை. எக்கழுத்தம் - உயர்ச்சி; தலையெடுப்பு. கவரி - சாமரம். இரட்ட - வீச.

௧௭௬. அல் - இருட்டை. இரிக்கும் - ஓட்டும். அலங்கு சாந்தாற்றி - அசையும் சிற்றாலவட்டம்; விசிறி. கவின் - அழகிய. பற்றுபு - பற்றி. வல்லியின் - கொடிபோல. மாடகம் - முறுக்காணி.

௧௭௭. குலவும் - விளங்கும். கர்ப்பூரம் - பச்சைக்கர்ப்பூரம். முன் - முதலான. பாகுமெல் அடை - பாக்கோடு மிருதுவான வெற்றிலை.

௧௭௮. வண்டுவார் குழலார் - வண்டுகள் மொய்த்துள்ள நீண்ட கூந்தலுடைய பெண்கள். கண்டுபார் - கண்ணால் தாங்களே நேராகப் பார்த்துக் கொள்ளுங்கள். கண்ணடி - கண்ணாடி. விண்டு - மலர்ந்து. உறைத்திடும் - தாங்கியிருக்கும். விரை - வாசனை.

௧௭௯. இழை - நூலிழைபோன்ற. கொடி - பூங்கொடிபோன்ற. பாதுகை மிதியடி. வழை - சுரபுன்னை. தொடை - மாலை. நறவாக்கும் - தேனொழுகும்.

பிணிய விழ்ந்துமட் டூற்றிவண் டடர்தரப் பிறங்கும்
கணிவ ளைந்தவொண் கருங்குழல் வெண்ணகைக் கனிவாய்
அணிசி றந்தரி படர்ந்தகண் ணணங்கெனு முருக்கு
மணிவ ளங்கெழு கவான்மிசை முடித்தலை வைத்து. (கஅ0)

ஆத ரத்தினன் புஞற்றுவார்க் கருண்மல ரடிகள்
காத ரங்கொளக் கூற்றெடும் பொருங்கொலைக் கருங்கண்
மாதர் சத்திய பாமைதன் கவான்மிசை வைத்துச்
சீத ரப்பிரான் படுத்திருந் தனன்களி சிறந்தே. (கஅக)

ஆய வேலையிற் றுவாரபா லகரழ கமைந்த
வாயில் காவல்செய் மாதரார் வாண்முக நோக்கிப்
போயு ரைத்திடு மெம்வர விறைக்கெனப் புகன்றார்
நேய மாதரும் விரைந்துசென் றதுநிகழ்த் தினரால். (கஅஉ)

மன்ன ரேறுகேட் டெழுந்திருந் தவர்வரு கென்றான்
அன்ன மாதருஞ் செலவிட நடந்தன ரடைந்தார்
மின்னு தாரகைக் குழாத்திடை விளங்கொளி மதிபோல்
துன்னு மாதருட் டோன்றிடுந் தோன்றலைக் கண்டார். (கஅஙு)

வேறு

சிந்தையுண் மகிழ்ச்சி பொங்கச் சிரமிசைக் கரங்கள் கூப்பிச்
சந்தமார் நிலத்தின் வீழ்ந்து தாழ்ந்தெழீஇக் குடந்தம் பட்டு

கஅ0. பிணி - கட்டு. பிணி அவிழ்ந்து - (அரும்புகள்) மலர்ந்து. மட்டு - தேன். அடர்தர - மொய்க்க. பிறங்கும் - விளங்கும். கணி - கண்ணி; பூமாலை. நகை - பற்கள். கனி - கொவ்வைக் கனிபோன்ற. அணி-அழகு. அரி-செவ்வரி; இரேகை. அணங்கு எனும் - இலக்குமி யென்று சொல்லப்படுகிற. கெழு - பொருந்திய. கவான் - தொடை.

கஅக. ஆதரத்தின் - விருப்பமுடன். உஞற்றுவார்க்கு - செய்பவர்க்கு. அருள் மலரடிகள் - திருவருள் செய்கின்ற ஸ்ரீபாதகமலங்களை. காதரம் - அச்சம். கூற்றெடும் - யமனோடும். பொரும் - போர்புரியும். மாதர் - அழகிய. சீதரப்பிரான் - ஸ்ரீ கண்ணபிரான். (சீதரன் - இலக்குமியை மார்பிலுடையவன்.)

கஅஉ. ஆயவேலையில் - அந்தச்சமயத்தில். வாள் - ஒளி. இறைக்கு - ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்கு.

கஅஙு. ஏறு - ஆண்சிங்கம். தாரகைகுழாம் - நட்சத்திரக்கூட்டம். மதி-சந்திரன். துன்னும்-நெருங்கியுள்ள. தோன்றலை - கண்ணபிரானை.

கஅச. சந்தம்ஆர் - அழகுபொருந்திய. எழீஇ - எழுந்து. குடந்தம் பட்டு - வழிபட்டு ; வணங்கி ; (திருமுருகாற்றுப்படையில் ' குடந்தம்பட்டுக்

முந்துதா னையுமொடுக்கி முன்னர்நிற் பாரை நோக்கி
வந்தகா ரியமென் னென்றான் வருத்துரை யாட லுற்றார். (கஅச)

மாமறைத் தலைவ போற்றி மதிக்குல விளக்கே போற்றி
காமரிந் திரன்முன் னோர் காண்பதற் கரியாய் போற்றி
தாமரைக் கண்ணாய் போற்றி தரியல ரேறே போற்றி
தோமறு செல்வம் வாய்ந்த துவாரகைக் கிறைவா போற்றி. (சஅரு)

ஆதிநா ளைய நின்னோ டருங்கலை கற்று ளாரும்
போதவுஞ் சிறந்த நட்புப் பூண்டுகொண் டவனுங் கந்தை
மேதகக் கொண்ட சீரான் மெய்ம்மறை யவர்கு லத்தான்
கோதறு குணத்தின் மிக்கான் குசேலனென் றியம்பு னும்பேர்.

வற்றியென் பெழுந்த யாக்கை மாதவ னின்மேல் வைத்த
பற்றினை யெம்ம னோரோ பகுத்தறிந் தளக்க வல்லார்
இற்றைநாள் வந்து வாயி லிருக்கின்றா னெதிர்ந்த போரில்
வெற்றிகொள் கழற்கால் வேந்தே விண்ணப்ப மிதுவே யென்றார்.

என்றலு முவகை விம்ம வெழின்முக மலர்ச்சி காட்டப்
பொன்றலில் கருணை பொங்கிப் பொழிதர விரைவி னிற்சென்
றின்றுநம் வாயில் வந்த விருந்தவத் தலைவன் றன்னை
மன்றவிங் கழைப்பி ரென்று வாய்மலர்ந் தருளி னானே. (கஅஅ)

கேட்டனர் துவார பாலர் கிளர்ந்தெழு களிப்புத் துள்ள
வாட்டமின் மனத்த ராகி வாயில்கள் பலவு நீத்து
நாட்டுதங் காவல் வாயில் நண்ணின ராங்கி ருக்குங்
கோட்டமின் மனத்துச் செய்ய குசேலமா முனியைச் சார்ந்தார்.

---

கொழுமலர் சிதறி" என்பதற்கு நச்சினார்க்கினியர் குட என்பது தட என்பது போல வளைவை யுணர்த்துவதோர் உரிச்சொல்லாகலின் அதனடியாகப்பிறந்த பெயருமாம் என்று உரைத்துள்ளார்). தானை - ஆடை.

கஅரு. மதி - சந்திரன். காமர் - அழகிய. தரியலர் ஏறே - பகைவர் கட்கு ஆண்சிங்கம் போன்றவனே. தோம் - குற்றம். இறைவ - அரசனே. போற்றி - நமஸ்காரம் ; வந்தனம்.

கஅகூ. மேதக - சிறப்பாக. சீரான் - குணமுடையவன். கோது - குற்றம்.

கஅஎ. யாக்கை - உடல்.

கஅஅ. உவகை விம்ம - சந்தோஷம் பூரிக்க. எழில் - அழகிய. பொன்றல் - அழிதல். மன்ற - நிச்சயமாக.

கஅகூ. கோட்டம் - கோணல். செய்ய - நற்குணமுடைய ; நேர்மையான.

ஆதரம் பெருக நெற்றி யணிநிலந் தோயத் தாழ்ந்து
மாதவ ரேறே போற்றி மறைக்குலச் சுடரே போற்றி
காதரம் பெருக்குஞ் சன்மக் கடல்கடந் தவனே போற்றி
நாதனுக் கினிமை மிக்க நண்புடை யவனே போற்றி. (ககூ0)

என்றுபஃ றுதிமு ழக்கி யாங்கள்பல் வாயில் நீந்தித்
துன்றிய கதுப்பின் மாதர் சொற்படி யுவள கம்போய்
ஒன்றுபல் பிடிகள் சூழ வுறுங்கடக் களிறு போன்று
மின்றிகழ் மடவார் சூழ வீற்றிருந் தானைக் கண்டு. (ககூக)

நின்னுடை வரவு ரைத்தே நிருபனுக் கப்போழ் தூற்ற
பன்னருங் களிப்பை யாமோ பகர்ந்திட வல்ல மைய
முன்னமங் கிருந்த வின்ப முழுவது மறந்து நின்றான்
நன்னர்நெஞ் சுடைய சீரார் நட்பினிற் சிறந்த துண்டோ. (ககூஉ)

தாயது வருகை கேட்ட தனியிளங் குழவி போன்று
நேயமிக் குடைய னாகி நெஞ்சினு ளுவகை பூப்பப்
போயழைத் திடுமி னின்னே போயழைத் திடுமி னின்னே
போயழைத் திடுமி னின்னே யெனவிரை பொருளிற் சொற்றான்.

இலக்கண மின்மை நோக்கி யிதற்குமேற் சொற்று னல்லன்
மலக்குறும் பறுத்து யர்ந்த மாதவத் தலைவ ரேறே
பலப்பல சொல்லி யென்னை பாணித்தல் கருமமன்று
நலக்கநீ விரைவி னெய்தா விடினவ னண்ணு மிங்ஙன். (ககூச)

---

ககூ0. ஆதரம் - அன்பு. அணி - அழகிய. காதரம் - துன்பம்; தீவினைத் தொடர்பு. சன்மம் - பிறவி. நாதனுக்கு - கண்ணபிரானுக்கு.

ககூக. பல்+துதி=பஃறுதி. கதுப்பின் - கூந்தலையுடைய. உவளகம் - அந்தப்புரம். ஒன்று - பொருந்திய. பிடிகள் - பெண்யானைகள். களிறு - ஆண் யானை. மடவார் - மாதர்கள்.

ககூஉ. நிருபனுக்கு - அரசனாகிய கண்ணனுக்கு. நன்னர் - நல்ல. சீரார் - குணமுடையோர். "செயற்கரிய யாவுள நட்பின்" என்றார் பெருநாவலர்.

ககூ௩. இன்னே - இப்பொழுதே "விரைசொல் லடுக்கே மூன்றுவரம் பாகும்"—தொல்காப்பியம்.

ககூச. மலக்குறும்பு - பாசப்பகை. பாணித்தல் - தாமதித்தல். கருமம் - காரியம். நலக்க - நன்மை விளைய. எய்தாவிடின் - போகாமற் போனால். அவன் இங்ஙன் நண்ணும் - கண்ணன் இவ்விடம் வந்துவிடுவான்.

ஆதலி னெம்பி ரானுக் ககத்துமிக் குவகை யுய்ப்ப
ஏதமின் முனிவ ரேறே யெழுந்தரு ளுகவென் றங்கைப்
போதகங் கூப்பி னார்கள் பொருக்கென வெழுந்து செம்மை
வேதமுற் றுணர்ந்த வையன் விடைதர நடக்க லுற்றான். (௧௯௫)

அன்னது கண்டு முன்ன மறிவிலா துரைத்த நீரார்
என்னகா ரியஞ்செய் தேமிப் பெரியனை யெளிய னென்று
சொன்னதீங் குரைக ளெல்லாஞ் சுடுகின்ற நம்மு ளத்தை
மன்னவ னறிவா னாகில் வாராத தீங்கு முண்டோ. (௧௯௬)

அருண்மிகப் படைத்த சிந்தை யந்தண னாத லாலே
தெருண்மிகப் படைத்த மன்னன் செவியறி வுறுப்பா னல்லன்
பொருண்மிகப் படைத்த வேந்தர் போற்றிடுஞ் சிறப்புற் றானென்
றிருண்மிகப் படைத்த நெஞ்ச ரின்னவா றியம்பி நிற்க. (௧௯௭)

மன்னனைக் காணு மன்பும் வாயில்கா வலரு முன்னே
நன்னயத் துடன டப்ப நடப்பவ னாங்காங் குள்ள
பன்னரும் வளங்க ளெல்லாம் பார்த்தன னிறும்பூ துற்றான்
பொன்னகர் சிறந்த தென்பார் புல்லிய ரெனவுட் கொண்டான். (௧௯௮)

பன்மணி வாயி லெல்லாம் பின்னிடும் படிக டந்து
நன்மணி மோலி வேந்தர் நயந்தபே ரவையு நீந்தி
யன்மணி விளர்க்கும் வண்ண னணங்கனா ரொடுமி ருக்கும்
பொன்மணி வாயி லந்தப் புரத்தினுக் கணிய னானான். (௧௯௯)

---

௧௯௫. அகத்து - மனதிலே. உவகைஉய்ப்ப - சந்தோஷமுண்டாக. ஏதம் இல் - குற்றமில்லாத. போது - தாமரைப்பூ. ஐயன் - குசேலன்.

௧௯௭. அருள் - தயை. அந்தணன் - பிராமணன். "அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகலான்"—திருவள்ளுவர். தெருள் - தெளிவு. மன்னன் - கண்ணன். செவி யறிவுறுப்பானல்லன் - காதில் நுழைவிப்பானல்லன்; சொல்பவனல்லன்.

௧௯௮. பன்னரும் - சொல்லமுடியாத. இறும்பூது உற்றான் - ஆச்சரியமடைந்தான். பொன்னகர் - தெய்வலோகம். புல்லியர் - கீழ்மக்கள்.

௧௯௯. மோலி - கிரீடம். நயந்த - விரும்பிவந்துள்ள. அவை - சபை. அல் - இருளும். மணி-நீலமணியும். விளர்க்கும் - வெளுத்துப் போகும்படியான. வண்ணன் - கரியநிறமுடைய கண்ணன். அணியன் ஆனான் - சமீபித்தவனாயினான்.

ஓவியத் தொழில்வல் லாருக் கொண்பொருள் வெறுப்ப வீசி
நாவியற் கருமென் கூந்தல் நங்கைமா ரெழுதி வைத்த
பூவியற் படமாங் காங்குப் பொலிவது காணுந் தோறுங்
கோவியற் கண்ண னென்றுட் கொண்டுபின் றெளிவ னம்மா. (உOO)

ஈங்கிவ னிவ்வா றெய்த இன்னம்வந் திலனென் றையன்
பூங்கதிர் வரவு பார்க்கும் பொற்றபுண் டரீகம் போலுந்
தீங்கதிர் வரவு பார்க்குஞ் செவ்வரக் காம்பல் போலும்
ஓங்குமை வரவு பார்க்கு மொண்டழை மஞ்ஞை போலும். (உOக)

பொருந்துதாய் வரவு பார்க்கும் புனிற்றிளங் கன்று போலுந்
திருந்துதன் வரவு பார்க்குஞ் செம்மனத் தொருவன் போலும்
அருந்துநீர் வரவு பார்க்கும் மறனசை யுடையான் போலுங்
கருந்துழாய்க் கண்ணி யண்ணல் கமழ்நறுஞ் சேக்கை மீதே. (உOஉ)

வளர்மறை யுணர்ச்சி மிக்கான் வரவுபார்த் திருப்ப வந்த
அளவிடற் கரிய மேலோ னுடைமைத் தோளி னல்லார்
கிளர்தர நின்று காக்குங் கேடில்வா யிலுங்க டந்து
தளர்வில்பன் மாதர் சூழுந் தனியிடத் தணுகுங் காலை. (உOங)

வருந்துமோர் மிடியன் சேம வைப்பெதிர் கண்டாற் போலும்
அருந்துண விழந்தோன் விண்ணோ ரமுதெதிர் கண்டாற் போலும்
பரிந்துவெப் புழலு வோன்கற் பகமெதிர் கண்டாற் போலுஞ்
சரிந்தபற் றினன்மெய் யாசான் றனையெதிர் கண்டாற் போலும். (உOச)

---

உOO. ஓவியம் - சித்திரம். நாவி - மயிர்ச்சாந்து. அல் - இருள். பூ - அழகு. வியல் - பெருமை. கோ இயல் - அரச இயல்.

உOக. இவன் - குசேலன். ஐயன் - கண்ணன். கதிர் - சூரியன். பொற்ற - அழகிய. புண்டரீகம் - தாமரை. தீங்கதிர் - சந்திரன். (தீ - இனிமை). ஆம்பல் - அல்லி. மை - மேகம். தழை - கலாபம். மஞ்ஞை - மயில்.

உOஉ. புனிற்றிளம் - மிகஇளமை. (புனிறு - இளமை ; ஈன்றணிமை). அருந்து - பருகும். அறல்நசை - நீர்வேட்கை ; தாகம். துழாய்கண்ணி - துளவ மாலையணிந்துள்ள. கமழ் - வாசனைவீசும். நறுஞ்சேக்கை - நல்லபடுக்கை.

உOங. ஆடு அமை - அசையும் மூங்கில். நல்லார் - பெண்கள்.

உOச. மிடியன் - தரித்திரன். சேமவைப்பு - சேமிக்கப்பட்ட நிதியை. பரிந்து - வருந்தி. வெப்பு - வெயிலில், கற்பகம் - (நிழலைத்தரும்) கற்பகமரம். சரிந்த - கழிந்த ; அழிந்த. பற்று - அகப்பற்று, புறப்பற்று. ஆசான் - குருவை,

எண்ணனைக் கிலங்கு மார்ப மீத்தருள் பிரானை நீல
வண்ணனைத் திகிரி சங்கம் வலமிட முறக்கொண் டானை
மண்ணனைத் தும்பு ரக்கும் வாசுதே வனைம ணக்குங்
கண்ணனைத் துளவத் தாமக் கண்ணனைக் கண்ணிற் கண்டான். (உ0ரு)

காண்டலு முவகை பூத்துக் கால்விசை கொடுந டந்தான்
ஆண்டகை யவனுங் கண்ணுற் றணையுடைத் தெழூநீத் தம்போல்
நீண்டபூம் பள்ளி நீத்து நிலவுபே ரன்பு பொங்கப்
பூண்டமா தவன்முன் சென்று பொன்னடி வணங்கி னானல். (உ0சு)

திலகமண் டோய வையன் திருவடி வணங்கிப் பின்னர்
நிலவுமெய்ப் புளகம் போர்த்து நிரம்புறத் தழுவிக் கொண்டான்
குலமறைத் தலைவ னென்றுங் கூர்ந்தமெய் நட்ப னென்றும்
மலர்தலை யுலகங் கூறும் வாய்மைகாத் தருளி னானே. (உ0எ)

பாக்கிய முற்ற திந்நாள் பாக்கிய முற்ற திந்நாள்
ஆக்கிய வறம்ப லித்த வாக்கிய வறம்ப லித்த
யோக்கிய மடைந்த திந்த மனையுமென் றுரைத்து ரைத்துத்
தேக்கிய புகழி னன்கொண் டாடினன் சிலைவ லோயே. (உ0அ)

அங்கொரு மாடத் துள்ளா லரதந பீடத் தும்பர்
மங்கல மறைவ லாளன் மகிழ்ந்தெழுந் தருளப் பண்ணிப்

---

உ0ரு. எண் - (யாவரும்) நினைக்கும். அனைக்கு - அன்னையாகிய இலக்குமி தேவிக்கு. இலங்கும் - விளங்கும். ஈத்து அருள்பிரானை - கொடுத்தருளிய பெருமானை. திகிரி - சக்கரம். புரக்கும் - காக்கும். கள்நனை - தேனினால் நனைந்துள்ள. துளவம் தாமம் - திருத்துழாய் மாலை.

உ0சு. ஆண்தகை - கண்ணன். கால் - காற்று. அணை - கரையை. நீத்தம் - வெள்ளம். பள்ளி - படுக்கை. நிலவு - (இடையறாது) விளங்கும். மாதவன் - குசேலன்.

உ0எ. திலகம் - நெற்றிப்பொட்டு. மண்தோய - பூமியில் பொருந்த. ஐயன் - குசேலனுடைய. புளகம் - மயிர்சிலிர்த்தல். நிரம்புற - முற்றிலும். மலர்தலை - பரந்த இடத்தையுடைய. வாய்மை - சத்தியம்.

உ0அ. ஆக்கிய அறம் - செய்த தருமங்கள். தேக்கிய புகழினன் - செறிந்த புகழையுடைய ஸ்ரீ கண்ணபிரான். சிலைவல்லோயே - வில்வித்தையில் தேர்ந்த பரீக்ஷித்து மகாராஜனே.

உ0கூ. உள்ளால் - உள்ளிடத்தில்; (ஆல் - உருபு மயக்கம், அசையுமாம்). அரதந பீடத்து உம்பர் - இரத்நாசனத்தின்மேல். எழுந்தருள - இருக்க,

பொங்குபொற் குடம்பூ ரித்த புதியமஞ் சனநீ ராட்டித்
திங்களங் கதிரே யென்னத் திகழ்ந்தவொற் றுடை சாத்தி. (உ0கூ)

கதிரெனக் கதிர்க்குஞ் செம்பொற் கவின்செய்பட் டாடை சாத்திப்
பிதிர்கருப் பூர நானம் பெய்விரைச் சாந்தஞ் சாத்தி
முதிரொளி விரிக்குந் தண்ணென் முத்தவக் கதையுஞ் சாத்தி
அதிர்தர வண்டுந் தேனு மலங்குபூந் தொடையல் சாத்தி. (உக0)

விரைதரு தூமங் காட்டி மேவுநெய் விளக்கங் கோட்டி
உரைபெறு பளித நீரா சனக்கல மொளிரச் சுற்றித்
திரைசெய்நல் லமுத மன்ன தீஞ்சுவை யுணவு நல்கிக்
கரையறு தவத்தோன் வாயுங் கையுமொள் ளறலிற் பூசி. (உகக)

பாகடை சிறப்ப நல்கிப் பயன்பெறு முகமன் கூறிப்
போகுயர் மாடத் திட்ட பொற்றதன் படுக்கை யேற்றி
மோகமிக் கருகி ருந்து முதுகுதை வந்து பின்னுங்
கோகன கப்பூங் கையாற் குளிர்செய்பொற் கவரி வீசி. (உகஉ)

வழிநடந் திளைத்த வேயிம் மலரடி யிரண்டு மென்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல வருடினன் கமலக் கண்ணன்
பழியில்பல் லுபசா ரங்கள் பண்ணவுந் தெரியா னாகி
ஒழிவறு தவக்கு சேல னென்றும்பே சாதி ருந்தான். (உகங)

---

குடம்பூரித்த - குடத்தில் நிரப்பிய. மஞ்சனநீர் - ஸ்நானத்திற்குரிய ஜலத்தினால். ஆட்டி - ஸ்நானஞ் செய்வித்து. திங்கள் - சந்திரன். அம் - அழகிய. கதிர் - கிரணம். ஒற்று ஆடை - நீர்துடைக்கும் வஸ்திரம்.

உக0. கதிர் - சூரியன். கவின் - அழகு. பிதிர் - பொடி. நானம் - கஸ்தூரி. பெய் - கலந்த. விரை - வாசனையுள்ள. சாந்தம் - சந்தனம். தண்ணென் முத்தம் - குளிர்ந்த முத்து. அக்கதை - அக்ஷதை. வண்டும் - கருவண்டுகளும். தேனும் - தேன்வண்டுகளும். அலங்கும் - அசையும். தொடையல் - மாலை.

உகக. தூமம் - புகை. கோட்டி - சுற்றி. உரை - சிறப்புச்சொல். பளிதம் - கர்ப்பூரத்தையுடைய. நீராசனம் - நீராஞ்சனம்; கண்ணேறு (திருஷ்டி தோஷம்) கழிக்கும் ஆலத்தி. கலம் - பாத்திரம். திரை - பாற்கடல்; (திரை - சினையாகுபெயர்). அறல் - நீர். பூசி - கழுவி.

உகஉ. பாகு - பாக்கு. அடை - வெற்றிலை; தாம்பூலம். முகமன் - உபசார வார்த்தை. பொற்ற - பொலிவான. மோகம் - காதல்; அன்பு. தைவந்து - தடவி. கோகநகப்பூ - தாமரைப்பூ. கவரி - சாமரம்.

உகங. கழி - மிக. வருடினன் - தடவினன்; பிடித்தான். கமலம் - தாமரை.

பித்தருன் மத்தர் பாலர் பிசாசர்தங் குணத்த ராவர்
நத்தவ ஞான யோக மௌனமறை நவிலு மாற்றாற்
சித்தம்விட் டகலா தையன் றிருவுருத் தியானஞ் செய்து
புத்தமு தாறு மின்பிற் புணர்ந்தசை வற்றி ருந்தான். (உகச)

வழுவில்பைங் குளவி யோசை யன்றிமற் றொன்றுந் தோராப்
புழுவென விருக்குந் தன்மை பூண்டமற் றிவனோ பொங்கும்
பழுதில்கற் புடையா டன்சொற் படிவறுஞ் செல்வம் வேண்டுங்
கொழுநிணங் குதட்டி மாற்றார்க் குமைத்தெழும் வடிவேல் வேந்தே.

உருவினைக் கண்டுங் கண்டத் தொளிர்வன மணங்க வர்ந்தும்
அருமைசான் முகமன் கேட்டு மமைந்தமெய்ப் பரிச முற்றும்
வெருவினற் றிருநா மங்கள் விருப்பினுட் டுதித்து மைந்தும்
பொருவிலா னந்த மெய்தப் பொலிகடத் தீபம் போன்றான். (உகரு)

நீருறு முப்புப் போலு நெருப்புறு பளிதம் போலும்
ஏருறு வடிவத் தண்ண லிடத்துத்தன் மனங்க லப்பப்
பேருறு பவஞ்ச வாழ்க்கைப் பிணிப்பொழிந் தகலக் கஞ்சத்
தாருறு மார்பத் தையன் றன்னையு மறந்தி ருந்தான். (உகஎ)

இன்னண மிவனிருப்ப விவன்வர வனைத்துஞ் சொல்லா
முன்னரே யுணர்ந்து கொண்ட முழுமுதற் கண்ண னென்பான்
மன்னிய வுவகை பூத்து வழிதரு மனத்த னாகி
அன்னவன் வதன நோக்கி யமையவின் னனசொல் வானால். (உகஅ)

---

உகச. உன்மத்தர் - சித்தப்பிரமையுடையோர். நத்தவம் - நல்லதவம். (நக்கீரர் என்பதுபோல). மறை நவிலும் ஆற்றால் - வேதம் முழங்குகின்றமையால். ஐயன் - கண்ணனுடைய. புத்தமுது - புதிய அமுது.

உகரு. வறுஞ்செல்வம் - பயனற்ற செல்வம். வேண்டும் - வேண்டுவான். குதட்டி - மென்று. மாற்றார் - பகைவர்களை. குமைத்து - கொன்று. வேந்தே - பரீக்ஷித்து மகாராஜனே.

உகசு. வனம் - துளவமாலை. கவர்ந்தும் - முகர்ந்தும். சால் - மிகுந்த. முகமன் - உபசாரமொழி. மெய் - தேகம். வெருவு - பயம். ஐந்தும் - ஐம்புலன்களும்; (மெய் வாய் கண் மூக்கு செவி). பொருவில் - ஒப்பில்லாத. கடத்தீபம் - குடத்திலிட்ட விளக்கு.

உகஎ. பளிதம் - கர்ப்பூரம். ஏர் உறு வடிவத்து அண்ணல் - அழகு நிறைந்த திருமேனியுடைய ஸ்ரீ கண்ணபிரான். பவஞ்சம் - பிரபஞ்சம்; உலகம். கஞ்சம்தார் - தாமரைப்பூமாலை. ஐயன் - குசேலன்.

உகஅ. இன்னணம் - இவ்வண்ணம். வதனம் - முகம்.

### வேறு

மன்னுடைய மறையனைத்தும் வகுத்துணர்ந்த மாதவனே
உன்னுடைய தரிசனத்தா லுடம்புபூ ரித்தனன்யான்
மின்னுடைய விளங்கொளிவேல் வேந்தருளுந் தேவருளும்
என்னுடைய பெறலரும்பே றியார்பெற்றார் யார்பெறுவார். (௨௧௯)

பூன்றதயை யென்னிடத்தெப் போதுநீ வைத்தருள்க
ஆன்றவென துளத்தினைவிட் டகன்றிலையிந் நாள்காறுஞ்
சான்றகுணத் தாயினுஞ் சந்ததமு நினைந்திருப்பேன்
றோன்றவனே கம்பெறினுந் தொன்னட்பிற் சிறந்தனவோ. (௨௨0)

ஆயின்மறை முதற்கலைக ளனைத்துமுணர்ந் தறமறம்பாத்
தேயினிது நன்றிதுதீ தென்றுணர்த்து மவர்நட்பை
வீயினுந்தா மறப்பர்களோ மேதையோர் மறப்பரேல்
நாயினுங்கீழ்ப் பட்டவர்க ளவர்காணிந் நானிலத்தே. (௨௨௧)

நல்லார்சொல் விரும்புவது நல்லாரைக் காண்பதுவும்
நல்லார்க்கொன் றுதவுவது நல்லாரைப் புகழ்வதுவும்
நல்லார்நன் றென்றுரைப்ப நவிற்றியவிவ் வெலாமடங்க
நல்லார்நட் பென்றுமுற னன்றன்றோ நான்மறையோய். (௨௨௨)

பொன்னுள்ளான் பூமியுள்ளான் புந்தியுள்ளா னாயிடினும்
என்னுள்ளா னாவனவ னிருந்தவர்த நட்பிலனேற்
பொன்னில்லான் பூமியில்லான் புந்தியில்லா னாயிடினும்
என்னில்லா னாவனவ னிருந்தவர்த நட்புளனேல். (௨௨௩)

---

௨௧௯. பெறல் அரும் - பெறுகின்றதற்கு அருமையான.

௨௨0. பூன்றதயை - முழுஅருள்; பூரணகிருபை. ஆன்ற - விசாலமான. சான்ற - (அறிவு) நிறைந்த. அனேகம் தோன்றப் பெறினும். தொன்னட்பில் - பழய சிநேகத்தைப்பார்க்கிலும்.

௨௨௧. அறம் - புண்ணியம். மறம் - பாவம். பாத்து - பகுத்தறிந்து. இனிது நன்று இது தீது என்று உணர்த்தும். வீயினும் - இறந்தாலும். மேதையோர் - அறிவுள்ளவர்கள்.

௨௨௨. நவிற்றிய - சொல்லிய. இவ்வெலாம் - இவையெல்லாம். நட்பு என்றும் உறல் நன்று அன்றோ. "நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க, நல்லார்சொற் கேட்பதுவு நன்றே - நல்லார், குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ, டிணங்கி யிருப்பதுவு நன்று"—மூதுரை. "அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப், பேணித் தமராக்கொளல்"—திருக்குறள்.

௨௨௩. புந்தி - அறிவு. இருந்தவர் நட்பு இல்லானேல் என்னுள்ளான் ஆவன். இருந்தவர் நட்பு உள்ளானேல் என்னில்லான் ஆவன்.

பேயோடு பழகுறினும் பிரிவதரி தரிதென்று
தூயோர்கண் மொழிவராற் றாயோரும் புகழ்தூயோர்
ஆயோர்கள் பெருநட்பை யருந்தவத்தாற் பெறலன்றி
ஏயோவெண் மையிற்கிடைப்பி னிகழ்வரோ விகழ்வில்லார். (உஉச)

சமயம்வரி னிடித்துரைப்பார் தக்கவழிச் செலச்செய்வார்
இமையவர்த முலகுறவு மிருளுலகம் பகையுமாய்
அமையவறி வுறுத்துவா ரந்தோ நூல் கற்றுணர்ந்த
கமையுடையார் நட்பெவர்க்குக் காண்கிடைக்கு மரிதரிது. (உஉரு)

கூடுதற்குக் கூடாத கூட்டத்துப் படுநட்பு
வீடுதற்குத் தக்கதாய் நாடோறு மெலிந்தொழியும்
நீடுதற்குத் தக்கதுநன் னெறிநின்றோர் நட்பொன்றே
தேடுதற்குக் கிடையாத திரவியமு மஃதாமால். (உஉசு)

முத்திக்கு வித்தாகு முழுதுணர்ந்தோர் பெருநட்பே
தித்திக்கு நாடோறுந் தேவர்பெறற் கருந்திருவுஞ்
சித்திக்கும் படியருளுஞ் செப்பரிதா லதுநிற்க
எத்திக்கும் புகழுநினைக் கியன்மணநன் காயிற்றே. (உஉஎ)

---

உஉச. பிரிவது அரிது அரிது என்று. தூயோர்கள் - பரிசுத்தமுடையவர்கள். ஆயோர்கள் - ஆகியவர்கள். ஓ—இகழ்தற் குறிப்பையுணர்த்தும் இழிவு சிறப்பிடைச் சொற்கள். எண்மையின் - எளிதில். "விலங்கேயுந் தம்மோடு உடனுறைதல் மேவும், கலந்தாரைக் கைவிடுத லொவ்வா - விலங்கருவி, தாஅயிழியு மலைநாட வின்னாதே, பேஎயொ டானும் பிரிவு"—பழமொழி. "பிரிவு செய் தாலரிதே கொள்க பேயொடு மென்னும்பெற்றி, இருவிசெய் தாளி னிருந்தின்று காட்டு மிளங்கிளியே"—திருக்கோவை.

உஉரு. இமையவர் - தேவர். இருள் உலகம் - நரகலோகம். அறிவுறுத்துவார் - உபதேசிப்பார். கமை - பொறுமை. காண்—அசை. "அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய, வல்லார்நட் பாய்ந்து கொளல்", "நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண், மேற்சென் றிடித்தற் பொருட்டு"—திருக்குறள்.

உஉசு. படும் - உண்டாகும். வீடுதற்கு - அழிவதற்கு. "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு"—திருக்குறள். "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும் - வரிசையால், வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு"—நாலடியார்.

உஉஎ. திருவும் - செல்வமும். "இம்மை யடக்கத்தைச் செய்து புகழாக்கி, உம்மை யுயர்கதிக் குய்த்தலான் - மெய்ம்மையே, பட்டாங் கறமுரைக்கும் பண்புடையாளரே, நட்டாரெனப்படுவார்"—நாலடியார். "கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை யெஞ்ஞான்றும், குருத்திற் கரும்புதின் றற்றே"—திருக்குறள். மணம் - கல்யாணம். ஏகாரம் வினா.

நின்னுடைய மனைக்கிழத்தி நிரம்புபெரு நீர்மையளே
மன்னுடைய சொற்காத்துச் சோர்விலா மாண்பினளே
தன்னுடைய வுயிராநின் றனைப்பேணுந் தன்மையளே
உன்னுடைய வருவாய்க்குத் தக்கசெல வுஞற்றுவளே. (உஉஅ)

சொன்னகா ரியமனைத்துஞ் சொன்னபடி யியற்றுவளே
என்னமிடி வரினும்வெளி யெடுத்தியம்பா வியலினளே
தன்னமுநா யகன்பழிதூற் றுதமையத் தக்கவளே
பன்னருமா மறையுணர்ந்த பளகறுநற் குணக்குன்றே. (உஉகூ)

பைங்குதலை வாய்மைந்தர் பலர்பிறக்க வேண்டுமே
எங்குமரும் புகழுடையா யெத்தனைமைந் தர்கள்பிறந்தார்
அங்கவரைப் பேரவையோ ரணிதரச்செய் செயலனைத்துஞ்
சிங்கலறப் புரிந்தனையோ செய்தனையோ வுபநயனம். (உகூo)

இவர்தந்தை யென்னோற்றா னென்றறிஞ ருரைக்கும்வகை
இவர்கின்ற மனத்தினரா யிருங்கலைகற் றுணர்வரோ
உவர்கொண்ட கடலாடை புடையுடுத்த வுலகமெலாம்
உவர்கொண்ட குணமெவர்க்குண் டெனமொழிய வுயர்வரோ. (உகூக)

நிறைகின்ற சிறுமைந்தர் நினைத்தவையெ லாங்கொடுத்துக்
குறைவின்றி நடத்திவரு கின்றனையே கொடும்பகலில்
உறைகின்ற பசிவருத்தத் துறுநர்மா லெனச்சுருதி
அறைகின்ற தாலவருக் கன்னமிடு கின்றனையே. (உகூஉ)

---

உஉஅ. நீர்மை - குணம். ஏகாரம் வினா "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்." சொற்காத்து என்பதற்குப் பரிமேலழகியார் உரையைப் பார்க்க. மாண்பு - நற்குண நற்செய்கை. வருவாய் - வரும்படி.

உஉகூ. தன்னமும் - சிறிதும். தூற்றுது அமையத்தக்கவளே. பளகு - குற்றம்.

உகூo. பசுமை+குதலை=பைங்குதலை. பேரவையோர் - பெரிய சபையிலுள்ளவர்கள். அணிதர - ஏற்றுக்கொள்ள. சிங்கல்அற - குறைவற. "தந்தை மகற்காற்று நன்றி யவையத்து, முந்தியிருப்பச் செயல்"—திருக்குறள்.

உகூக. என்னோற்றான் - என்ன தவஞ்செய்தான். "மகன் தந்தைக் காற்று முதவி யிவன்தநதை, என்னோற்றான் கொல்லென்னுஞ் சொல்"— திருக்குறள். இவர்கின்ற - நாளுக்குநாள் கல்வியால் உயர்கிற. உவர் - உப்பு. உவர் - இந்தப்பிள்ளைகள்.

உகூஉ. உறுநர் - வருபவர். மால் - விஷ்ணு. சுருதி - சாஸ்திரம்.

நானமுதற் சந்திசெப நன்குநடக் கின்றனவே
ஆனவிவை செயமெய்திட மாகியிருக் கின்றதே
மானமுறு மறைப்பொருளில் வைத்ததியா னஞ்சிதறு
தீனமற நிற்கின்ற தேயெவருஞ் சொலற்கரியாய். (உ௯௩)

சீரார்நின் னூர்நின்று சேரவிவண் வருவாரால்
நீரார்நின் றன்மையெலா நென்னல்வரைக் குந்தவறு
தாராய்ந்து கொண்டிருந்தே னகன்றபல நாள்களின்பின்
ஏராரின் பஞ்சிறப்ப விருவேமுங் கூடினேம். (உ௯௪)

நள்ளார்க ளண்மைக்க ணிருந்தாலு நட்புறுத்தார்
விள்ளார்கள் சேய்மைக்க ணிருந்தாலும் விருப்பொழியார்
தள்ளாத பல்பொருள்க டனைச்சூழ விருந்தாலும்
உள்ளாத வன்கதிரை யுறநோக்கு நெரிஞ்சியே. (உ௯௫)

மடமையா ருறுநட்பே மருவுபெருஞ் சுகங்காணூந்
திடமுறவெவ் வாறென்னிற் செப்பக்கேள் செழுமறையோய்
உடனுறைத லொருவுமிடத் தொருதுன்பு முறலின்று
படர்தலுமின் றொருவேளை பகர்தலுமின் றருகுமால். (உ௯௬)

ஐயநீ குடியிருக்கு மணிநாட்டி லதிகமழை
பெய்யுமழை யின்மைகிளி விட்டின்முதற் பெருங்கேடு
வெய்யகொடுங் கள்வர்வன விருகமுதற் பலகேடு
நையவினி துயிரெலா நன்குதழைக் கின்றனவே. (உ௯௭)

இருவேமு முன்னுளி விலங்குசாந் தீபமுனி
வருகாம ரடிவணங்கி மாமறைநற் றுணர்ந்திடுநாட்
பெருகார்வத் தொடும்பேசிக் கொண்டிருந்த பேச்செல்லாந்
திருகாரா வுளத்துநினைத் திருக்கின்று யோசிறப்ப. (உ௯௮)

---

உ௯௩. நானம் - ஸ்நானம். மெய் - உடல். மானம் - பெருமை.

உ௯௪. சீர் ஆர் - சிறப்பு பொருந்திய. நின் ஊர் நின்று - உன்னுடைய ஊரிலிருந்து. இவண் - இவ்விடம். நீர் - குணம். நென்னல் - நெருநல்; நேற்று. ஏர் - எழுச்சி.

உ௯௫. நள்ளார்கள் - பகைவர்கள். அண்மைக்கண் - சமீபத்தில். விள்ளார்கள் - நீங்காதவர்கள் ; நண்பர்கள். சேய்மைக்கண் - தூரத்தில். கதிரை - சூரியனை. நெரிஞ்சி - தாமரைப்பூ.

உ௯௬. உடன் உறைதல் - உடன்சேர்ந்து வாழ்தல். ஒருவுமிடத்து - நீங்குமிடத்து. படர்தலும் - நினைத்தலும். "பெரிதினிது பேதையார் கேண்மை, புரிவின்கட் பீழைதருவ தொன்றில்"—குறள்.

உ௯௭. அணி - அழகிய. நைய - குன்ற ; இல்லையென்னும்படி. பரிமேலழகியார் உரை கருத்துக்கொண்டு நிற்பது இப் பா.

உ௯௮. காமர் - அழகு. ஆர்வம் - விருப்பம். திருகுஆரா - மாறில்லாத.

கொள்ளைமறை யுணர்ச்சிமிகு குருராயன் பத்தினியாந்
தள்ளைநமைப் பார்த்தமுது சமைப்பதற்கிந் தனமின்றின்
றெள்ளருநன் மைந்தர்காள் கொடுவாரு மெனவேவ
விள்ளருமோர் பெருங்காட்டுள் விறகொடித்துத் திரிந்தனமே. (௨௩௯)

வேறு

ஆய காலையின் ஞாலெழு வெண்முகில்
நேய நெய்த ளிறைவள நோக்குவான்
பாய வன்னம் பறந்தன போன்மெனத்
தோய மாக்கடற் றுன்னுபு சென்றவே. (௨௪௦)

நீணி றக்கடல் வற்றிட நீரம்வா
யாணி ரப்பவி யப்பரு குற்றெழீஇ
வாணி டைப்படர் மஞ்ஞைக் குழாமென
மேனி பைத்து விரைவினின் மீண்டவே. (௨௪௧)

பெட்டு நீர்மழை பெய்துவ ளர்த்திடு
மட்டு நீங்குபைங் கூழ்மர மாதிகள்
பட்டு நீங்கவெப் பம்புரி கோடையை
வெட்டும் வாளென மின்னல் விதிர்த்தவே. (௨௪௨)

எமரு ணற்கிட மாய விருங்கடல்
அமர்தல் கொண்டற லைச்சுவற் றுந்தழற்
சமர்த ணிப்பமின் னேயெனச் சாற்றல்போற்
றமரம் விண்ணுஞ் சலிப்ப வெழுந்தவே. (௨௪௩)

---

௨௩௯. கொள்ளை - மிகுதி. தள்ளை - தாய்; (திசைச் சொல்). இந்தனம் - விறகு. எள்ளரும் - இகழ்தலில்லாத. விள்ளல் - சொல்லல்.

௨௪௦. முகில் - மேகங்கள். பாய - பரவிய. தோயம்-நீர். துன்னுபு-நெருங்கி.

௨௪௧. நீல்+நிறம்=நீணிறம். நீரம் - ஜலத்தை. நிரப்பு அவிய - தரித்திரம் ஒழிய. வாயால்பருகுற்று எழீஇ - வாயினால் குடித்தெழுந்து. மஞ்ஞை குழாம் என - மயிற் கூட்டம்போல. மேனி - உருவம். பைத்து - பசுமை என்னும் பண்படியாகப் பிறந்தது.

௨௪௨. பெட்டு - விரும்பி. பைங்கூழ் - பயிர்.

௨௪௩. எமர் - எம்மவர். உணற்கு - (அமிர்தம்) உண்பதற்கு. அறலை - நீரை. சுவற்றும் - குடிக்கும்; வற்றச்செய்யும். தழல் - வடவாமுகாக்கினி. சமர் - வேகம். தமரம் - மேகங்கள். சலிப்ப - நடுங்க.

மேதி னிப்பகை மேலம்பு தூற்றிடச்
சாதி நன்மலர்க் கற்ப தருவினன்
காதி வாங்கிய கார்முக மென்றுல
கோதி நிற்க வொருவில்விண் டோன்றிற்றே. (உசச)

நம்மை யூர்இறை வற்பகை நாகங்கள்
தம்மை யாமென்றுஞ் சாரற காதிவண்
வெம்மை தீரிட மென்றுவி ராயபோற்
கம்மை மேகமக் காட்டை வளைந்தவே. (உசரு)

விரவு மின்னி னொளிக்கும் வெருவிடி
உரவொ லிக்கு முளம்பதைத் தஞ்சுபு
பரவு தம்மிறை பாற்சரண் சார்தல்போல்
அரவம் யாவு மளைபுக் கொளித்தவே. (உசகூ)

இடிமு ழக்க முழவ மிசைதர
நெடிய கானவ ரங்க நிலவுற
வடிவ மஞ்ஞை யெனுமட மாதரார்
அடிபெ யர்த்திடு மாடன் மலிந்ததே. (உசஎ)

பெட்டு நூல்பெரு கப்பயி லாதவர்
ஓட்டு செய்யு ணினைத்து நினைத்துளங்
கட்டு முத்திக் கரைவது போன்மென
விட்டு விட்டுறை மென்மெல வீழ்ந்தவே. (உசஅ)

ஆன்ற கல்வி யறிவி னிரம்பிய
சான்ற தன்மையர் சற்றுந் தடையின்றித்

---

உசச. கற்ப தருவினன்-இந்திரன். காதி-கோபித்து. வாங்கிய-வளைத்த. கார்முகம் - வில். உலகு ஓதி நிற்க ஒருவில் விண் தோன்றிற்று. மேதினி - உலகம். மதுகைடவர் என்னும் அரக்கர்களது கொழுப்பால் நனைக்கப்பட்டது.

உசரு. ஊர் - ஏறிச்செலுத்துகிற. இறைவன் - இந்திரன். நாகங்கள் - மலைகள். சாரல் தகாது. இவண் - இவ்விடம். விராய - விரவிய ; கலந்த. கம்-நீர். மை - கருநிறம்.

உசகூ. வெருவு - பயம். அஞ்சுபு - அஞ்சி ; செய்பென்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். அளை - புற்று.

உசஎ. முழவம் - மத்தளம். இசையா - சப்திக்க. அரங்கம் - நடனசபை. மஞ்ஞை - மயில்.

உசஅ. போன்ம் என - போலுமென. உறை - நீர்த்துளிகள்.

உசகூ. ஆன்ற - ஆழ்ந்த. சான்ற - பொழிந்தன.

தோன்ற யாப்படங் கத்தொகச் சொற்றல்போற்
கான்ற வேபெருந் தாரைக் கணமழை. (உசகூ)

பாய மாவும் பறவையு மஞ்சுற
மேய கானும் பனிப்புற வெண்மைய
தாய நீருட லார்தர வீங்கிய
காய்நி கர்ப்பக் கனோபலம் வீழ்ந்தவே. (உருo)

மன்ற லங்குருந் தத்தடி வைகியுங்
கொன்றை மூலங் குறுகியு மற்றுள
துன்று சிற்றிலைப் பாதவத் தூர்தொறுஞ்
சென்றுந் தெய்ய திகைத்துநின் றேமன்றே. (உருக)

கோய்ம லர்த்தருத் தோறுங் குறுகியும்
மொய்சி கைத்தலை முன்னனை தானனங்
கைந னைந்திரு கானனை தம்மவோ
மெய்ந னைந்து விறகு நனைந்தவே. (உருஉ)

மேலு மேலும் விடாமழை யாகலாற்
சாலு நீர்புறந் தாளள வாய்க்கணைக்
காலு மாய்முழங் காலள வாய்ப்பினும்
ஆலு நீத்த மரையள வாயிற்றே. (உருந)

வானி லாவு மதிமுடி யண்ணல்போற்
றேனி லாவு கடுக்கை திகழ்தர
மானி லாவுற வேந்தி வயங்கொடு
கானி யாறு கலித்து நடந்தவே. (உருச)

---

உருo. பாய - பரவிய. மாவும் - மிருகங்களும். கானும் - காடும். பனிப்புற - நடுங்க. வெண்மைய * * காய் - கலியாண பூசினிக்காய். கனோபலம் - ஆலங்கட்டி; மழைக்கட்டி.

உருக. மன்றல் - வாசனை. மூலம் - அடி. பாதவத்து - மரங்களுள்ள. தெய்ய - அசை.

உருஉ. தரு - மரம். ஆனனம் - முகம். கால் நனைந்து. மெய் - தேகம்.

உருந. சாலும் - மிகுந்த. பின்னும் ஆலும் நீத்தம் - பின்னும் அசையும் வெள்ளம்.

உருச. அண்ணல் - சிவபெருமான். கடுக்கை - கொன்றைப்பூ. மான் நிலா வுற ஏந்தி. வயங்கொடு - ஜலத்தைக் கொண்டு. கான்யாறு - காட்டாறு.

ஊற்று மாரி யொழிதலின் றென்னினி
ஆற்ற லென்றிரு வேழுமுள் ளாய்தரல்
ஏற்ற காலை யெழுந்தோர் கொடுங்குளிர்க்
காற்று வந்து கடுகிச் சுழன்றதே. (உ௫௫)

மோது காற்றின் முளிசினை மாமரத்
தோது சாகையு லோலித் தொலித்திடன்
மீது கையமைத் தவ்வனம் விண்மழை
போது நில்லெனல் போல விருந்ததே. (உ௫௬)

அன்ன காலை யிடியொலி யார்முகில்
றென்னல் காறு நிரம்பிய வெப்பெலாம்
இன்னல் தீர விரிந்தன வோவென
மன்னக் கேட்பது மான விருந்ததே. (உ௫௭)

காலு மின்னு விளக்கமிக் காட்டினுக்
கேலு மாமழை யின்னமும் வேண்டுங்கொல்
சாலு மீதிற் றழைந்தகொ லென்றுமை
யாலுந் தீபங்கொண் டாய்வதை யொத்ததே. (உ௫௮)

உள்ள யாவு முதவிப் புகழ்ப்படாங்
கொள்ளு நற்கொடை யாரிற் குயின்குழாம்
அள்ள லீர்முழு தும்மளித் தாம்புகழ்
விள்ள லின்றிக்கொண் டென்ன விளர்த்தவே. (உ௫௯)

---

உ௫௫. ஊற்றும் - பொழியும். ஆற்றல் என் - செய்வதென்ன. ஆய்தரல் - ஆராய்தலை.

உ௫௬. மாமரத்து. முளிசினை - உலர்ந்தகிளைகள். முளி-கரடு. சாகை கிளைகள். உலோலித்து - அசைந்து. அவ்வனம்மீது கை அமைத்து. மழை மழையே.

உ௫௭. ஆர் - நிறைந்த. றென்னல் காறும் நிரம்பிய - நேற்று வரைக்கும் (பூமியில்) நிறைந்திருந்த. இன்னல் - துன்பம். இரிந்தனவோ - ஒழிந்தனவோ. மான - போல.

உ௫௮. காலும் - உமிழும் (மேகம் தோற்றுவிக்கும்) மின்னு விளக்கம் - மின்னலின் ஒளியானது. ஏலும் - தகுந்த. சாலும் - போதிய. ஈதின் - இம்மழையினால். தழைந்தகொல் - தழைத்தனவோ. மை - மேகம். ஆலுந்தீபம் - அசையும் விளக்கு.

உ௫௯. புகழ்படாம் - புகழ்க்கொடி. கொடையாரில் - கொடையாளிகள் போல. குயின் குழாம் - மேகக்கூட்டங்கள். அள்ளல் - (கடலினின்றும்) அள்ளிக்கொண்ட. ஆம் - (அதனால்) ஆகும். விள்ளல் இன்றி கொண்டு என்ன - பிரிதலில்லாமற் கொண்டாற்போல. விளர்த்தவே - வெளுத்தன. வெண்மை நிறம் புகழ்க்குறிப்பு.

### வேறு

மாற்று விதமில் பறவையெலாம் வாய்தாழ்க் கொண்டு மரந்தோறும்
போற்று குடம்பைப்புக்கொளிப்பப்பொருமாவனைத்தும்போத்தொளிப்
காற்று குளிருக் காற்றுன்போற் கரங்கள் யாவுந் தொகமுடக்கிப் [பக்
பாற்றி யிருளைப் பகல்செய்யும் பரிதி மேல்பான் மறைந்தனனே.

ஒருவா வன்பிற் றணந்தார்க ளுற்று நோக்கி வெய்துயிர்த்து
வெருவா நின்று கண்பனிப்ப விளங்கு நெடியோன் திருமார்பிற்
பொருவா விரைக்குங் குமங்குழைத்துப் பூசிவைத்தாற் போற்றோன்றுங்
கருவா னெழுந்த செவ்வானங் கடல்சூ ழுலகு வளைந்ததே. (உகூக)

நிலைசேர் வான மகள்கூந்த னீள விரித்து விட்டாற்போற்
கலையா ருணர்ச்சி யொடுகேள்வி கழித்து நிற்பா ருள்ளம்போல்
உலையா துலகிற் பரக்குமா றாற்று கருமைக் குழம்பேபோற்
கொலைசூ ழுநர்தந் தீவினைபோற் குருட்டுக் கங்குல் செறிந்ததே.

ஒருவர் கரமற் றொருவர்பிடித் துறுமே டவலென் றுணராமன்
மருவுங் குளிர்காற் றுனடுங்கி மயங்கிக் காலால் வழிதடவி
இருள்போ மளவு மிவணுறைவோ மென்றோ ரிடமுற் றிருந்தனமே
குருமா முல்லை நமைக்கண்டு கொண்ட நகைபோன் மலர்ந்தவே.

மாட்டும் விறகு தேடப்போய் மயங்கி யிருந்த நமக்கிரங்கிக்
காட்டு மரங்க ளல்லாது கண்ணீ ருகுப்பா ராங்கில்லை

---

உகூo. மாற்றும் விதம் இல் - (குளிரை) மாற்றிக் கொள்ளும் வகையில்லாத. தாழ்க்கொண்டு. மூடிக்கொண்டு. போற்று - (தங்களால்) காப்பாற்றப்படுகிற. குடம்பை - கூட்டில். பொரும் - போர்செய்யும் மா - மிருகங்கள். போத்து - மிருகத்தின்படுக்கை. பாற்றி - ஓட்டி. பரிதி - சூரியன். தொக - ஒருங்குசேர.

உகூக. ஒருவா அன்பில் தணந்தார்கள் - நீங்கா அன்பினின்றும் பிரிந்த தலைவிமார்கள். வெய்து - சூடாக. உயிர்த்து - பெருமூச்சுவிட்டு. வெருவுதல் - அஞ்சுதல். பனிப்ப - நீர் சொட்ட. நெடியோன் - திருமால். பொருவா - ஒப்பில்லாமல். விரை - வாசனையுடைய.

உகூஉ. குருட்டுக்கங்குல் - கண்ணொளியை மறைக்கும் இருள். கலையாருணர்ச்சியொடு கேள்வி - கற்றல் கேட்டல். உலையாது - கெடாது. பரக்கும் ஆறு - பரவும்படியாக. கொலை சூழுநர் - கொலையையே செய்பவர்.

உகூங. அவல் - பள்ளம். இவண் உறைவோம் - இங்கே தங்குவோம். குரு - நிறம்.

உகூச. மாட்டும் - அடுப்பில் வைக்கும். கண்ணீர் - கள்நீர் எனக்கொள்க.

வாட்டு மீரப் பதமன்றி வயிற்றிற் செறிக்கும் பதமில்லைப்
பாட்டு முழக்கு மூமனன்றிப் பார்ப்பார் களுமற் றில்லையே. (௨௬௪)

இந்த வாறு தவமயங்கி யிருக்குங் காலை நங்குலத்து
வந்த மைந்த னட்போடும் வருந்த வருத்து மிவ்விருள்போய்ச்
சிந்தச் சிதைப்ப லெனச்சினந்து செழுவான் முகட்டி லெழுவான்போற்
சந்தக் கதிர்க ளுறப்பரப்பித் தண்ணங் கதிரோ னுதித்தனனே.

வானி லெழுந்த செழுமதியம் வயங்கப் பொழிவெண் கதிராலக்
கானின் மிடைகார்க் களிறெல்லாங் காம ரயிரா வதமெனவும்
மான களவின் கனியெல்லா மமைவெண் ணுவற் கனியெனவும்
மான முறுபுல் லினமெல்லா மடங்க லெனவும் விளங்கியவே. (௨௬௬)

திருவ மொருவற் குறறெரியச் சிற்சில் குறிமுன் றோன்றுதல்போல்
மருவு முலகுக் கிருளொதுக்கி வயங்கு கதிரோன் வரல்தெரியப்
பருவச் சிலபுள் ளெழுப்பொலியும் பாய கீழைத் திசைவிளர்ப்புங்
குருவிட் டொழிதா ராகணமுங் குறியாய் முன்னர்த் தோன்றினவே.

இருவர் சிறுவர் மழையினனைந் திளைத்திக் காடு கோட்பட்டார்
மருவு மவரென் னுற்றாரென் றெட்டிப் பார்க்க வருவான்போற்
பருவ மரைகண் முகமலரப் பற்றறற் றிருளும் போயொளிப்ப
வெருவு நாமுங் களிதூங்க வெய்யோன் குணபா லெழுந்தனனே.

---

கள்நீர் - தேனாகிய ஜலம். உகுப்பார் - விடுவார்; சிந்துவார். பதம் - வழி. பதம் - சோறு. ஊமன் - கூகை; கோட்டான்.

௨௬௫. தவ - மிகவும். நங்குலம் - நமது குலம் (சந்திரகுலம்). மைந்தன் - கண்ணன். நட்போடும் - நண்பனாகிய குசேலனோடும். போய் சிந்த - சுழிந்து சிதற. சிதைப்பல் என சினந்து - அழிப்பேன் என்று கோபித்து. சந்தம் - அழகு. தண்ணங் கதிரோன் - சந்திரன்.

௨௬௬. வயங்க - விளங்க. கதிரால் - கிரணங்களால்; நிலவால். மிடை - நெருங்கியிருந்த. கார் களிறு - கரிய யானை. காமர் - அழகிய. அயிராவதம் - வெள்ளையானை; இந்திரனுடையது; பாற்கடலில் தோன்றியது. களவின்கனி - களாப்பழம். மானம் - வலிமை. புல்இனம் - புலிக்கூட்டம். மடங்கல் - சிங்கம்.

௨௬௭. ஒருவற்கு திருவம் உறல்தெரிய - ஒருவனுக்குச் செல்வம் வருதலை யறிய. வரல் - வருகை. புள் - பறவை. பாய - பரவிய. விளர்ப்பும் - வெளுப்பும். குருவிட்டு ஒழி - ஒளி குன்றிய. தாராகணம் - நட்சத்திரக் கூட்டம்.

௨௬௮. காடு கோட்பட்டார் - காட்டினால் கொள்ளப்பட்டார். மருவும் - காட்டிலிருந்த. என் உற்றார் - என்ன ஆபத்துக்குட்பட்டாரோ. மரைகள் - தாமரைகள் (முதற்குறை). வெருவும் - பயந்த. களிதூங்க - சந்தோஷங் கொள்ள. வெய்யோன் - சூரியன். குணபால் - கிழக்குப்பக்கம்; கீழ்த்திசை.

கல்வி யறிவு மேலிடலுங் கரிசில் பல்லோ ரியற்றியநூற்
சொல்லும் பொருளும்வெளிப்படையாய்த் தோன்றவிளங்குவனபோல
அல்லை யனுக்கு மிரவியெழ வாங்காங் கமரு மரும்பொருள்கள்
ஒல்லை யின்ன வின்னவென வுணரு மாறு விளங்கினவே. (உசுசு)

வெய்யோ னெழுந்த வப்பொழுதே விமல வாசா ரியனை
செய்யோன் மறைச்சாந் தீபமுனி தேடி நம்மை முகம்புலரா
ஐயோ பிரம சாரிகளெங் கடைந்தா ரென்னுற் றனர்கொலென
நையோ கையின்வந் தக்காட்டு ணண்ண நாமுங் கண்டனமே. (உஎ௦)

கண்டு வணக்கஞ் செய்துநின்ற காலை யளவில் கருணையனுப்த்
தொண்டு புரிமா ணாக்கர்களிற் றூயீர் நும்மைப் போல்பவரார்
மண்டு மறைசொ லென்னிமித்த மழையி னனைந்தீர் வருத்தமிகக்
கொண்டு நின்றீர் கற்றகடன் கொடுத்தீர் விடுத்தீர் கோதனைத்தும்.

சீரார் நுமக்குக் கல்விபோற் செல்வப் பொருளுஞ் செழுந்தொடையற்
காரார் கூந்தன் மனைவியருங் கனிவாய் மழலை மைந்தர்களும்
நாரார் தருசுற் றமும்வாழ நாளு மதிக மாகுகவென்
றேரார் தருநல் லாசிபகர்ந் தில்லி னமைக்கொண் டேகினனே.

இன்ன வெல்லா முளத்துநினைந் திருக்கின் றுயோ நீயென்னப்
பன்ன வரிய மறைகதறும் பகவ னுண்மை தோற்றுமல்
உன்ன வரிய கைதவனை யொருமா னுடவன் றனைப்போல
நன்னர் வினவிப் பின்னுமிது நயந்து கூறத் தொடங்கினனால்.

---

உசுசு. கரிசு - குற்றம். அல்லை - இருளை. அனுக்கும் - கெடுக்கும். இரவி - சூரியன். ஒல்லை - சீக்கிரம்; உடனே.

உஎ௦. விமல - மலமில்லாத; தூய்மையான. புலரா - வாடி. பிரமசாரிகள் - வேதம் ஓதும் மாணாக்கர்கள். கிருகஸ்த ஆச்சிரமத்திற்கு முந்திய ஆச்சிரமம் பிரம்மசரியம். நை ஒகையின் - கெட்டகளிப்போடு; துக்கத்தோடு. நண்ண - அடைய.

உஎக. தூயீர் - புனிதர்கள். மண்டு மறை - நிறைந்தவேதங்களை. கோது - குற்றம்.

உஎஉ. தொடையல் - பூமாலை. நார்ஆர் - அன்புபொருந்திய. ஏர்-உயர்வு; எழுச்சி. ஆசி - ஆசிமொழி. இல்லில் - வீட்டிற்கு.

உஎங. பன்ன - சொல்ல. கதறும் - சொல்லும்; முழங்கும்; கோஷிக்கும். உன்ன - நினைக்க. கைதவனை - வஞ்சகனை. நன்னர் வினவி - செவ்வனே கேட்டு. நயந்து - விரும்பி.

வேறு

பந்தனை யகன்ற மேலோய் பற்பல நாட்குப் பின்பு
வந்தனை யெனக்கென் கொண்டு வந்தனை யதனை யின்னே
தந்தனை யாயி னன்று தருசுவைப் பக்க ணத்தென்
சிந்தனை நின்ற தென்றான் றெரிவருஞ் வஞ்சக் கள்வன். (உஎச)

இனியசிற் றுணவே தேனு மின்றுநீ வருவாய் கொல்லோ
இனியநின் னுள்ள மின்றே வெண்ணியா னறிதல் வேண்டும்
இனியநின் மனைவி வாளா வேகிவா வென்ப ளோமற்
றினியவெற் கன்றி யார்க்குக் கொண்டுவந் திருக்கின் றாயே. (உஎரு)

திருந்தவிங் களித்தி யென்று செங்கர மலர்த்தி நீட்டப்
பொருந்தவின் பாலுண் பான்பாற் புளித்தகா டியைக்கொ டுத்திட்
டருந்திடென் றுரைத்தல் போலிவ் வவற்கொடை யென்று வாளா
இருந்தனன் குசேல மேலோ னிவனுள மறிந்த கண்ணன். (உஎசு)

நடலைதீர்ந் தவன்மெய்ப் போர்த்த நாள்பல கண்ட கந்தைப்
படர்தலைச் சுருக்கி வாங்கிப் பாங்குவைத் தினிதி னுய்ந்து
விடலருங் கற்பு வாய்த்த மின்னனார் வணங்குந் தெய்வந்
திடமுற முடிந்து வைத்த சிறுபொதி கண்டு கொண்டான். (உஎஎ)

மலிதரு மன்பின் வந்த வண்பொதி யவிழ்த்து நோக்கி
வலிதரு மவற்று ளன்று வாய்த்தது நமக்கி தென்று
ஒலிதரு கழற்கா லைய னொருபிடி யவலைக் காதல்
பொலிதர வெடுத்து வாயிற் போகட்டுக் கொண்டான் மாதோ. ()

---

உஎச. பந்தனை - பந்தம்; கட்டு. பக்கணத்து - பட்சணத்திலே; சிற்றுண்டியிலே.

உஎரு. வாளா - சும்மா. ஏகி - போய். எற்கு - எனக்கு.

உஎசு. திருந்த - திருத்தமாக. மலர்த்தி - விரித்து. அருந்திடு - பருகு ; குடி. கொடை - கொடுத்தல்.

உஎஎ. நடலை - கபடம் ; பொய் ; துன்பம். வாங்கி - எடுத்து. பாங்கு - பக்கம். விடலரும் - நீங்குதற்கரிய. மின்னனார் - மின்னலையொத்த பெண்கள். தெய்வம் - குசேலர்மனைவி. திடம் உற - உறுதியாக.

உஎஅ. இது முதல் நான்கு செய்யுள்களினும் ஒருபிடி அவல் தின்னலையே அனுவதித் துரைக்கின்றார். மலிதரும் - மிகுந்த. அவற்றுள் - அவல்களுள். வாய்த்தது - கிடைத்தது. காதல் பொலிதர - விருப்பம் பெருக.

செறிதரு சுவைத்தீ தென்றுந் தேவர்க்கு மரிய தாகு
மறிதரு விருப்பி னில்லி னமைத்ததே பழைது மன்று
குறிதரு விலைப்பாற் சென்று கோடலிவ் வளத்த தோவென்
றறியளை வாரி யுண்டோ னொருபிடி யவறின் றானே. (உஎகூ)

முன்னுமிவ் வவலொன் றேனு முனைமுறிந் ததுவு மின்று
பன்னுமுட் டையுமின் றாகும் பட்டவங் கையும ணக்குங்
கொன்னும்வாய் செறிப்பி னம்ம குளமும்வேண் டுவதின் றென்று
உன்னுபல் லுலகு முண்டோ னொருபிடி யவறின் றானே. (உஅ௦)

பாங்கிரு கொடிற்று துக்கிப் பதமுறச் சற்றி ருத்தித்
தேங்குற மென்று மென்று சிரம்பல தரம சைத்துக்
கோங்கிள முலைப்பூங் கோதை குமுதவாய்ப் பைந்தே னூறல்
ஓங்குமின் சுவைகொள் வாயா னொருபிடி யவறின் றானே. (உஅக)

நாட்டுமிவ் வவல்வி ருப்ப நமக்குமிக் குள்ள தென்று
கேட்டுளாய் கொல்லோ முன்னுங் கிளந்திருப் பதுமன் றேயென்
றேட்டுமென் மலர்ப்பூந் தொங்க லிமையவர்க் கமிர்த முன்னாள்
ஊட்டிய புகழின் மேலோ னொருபிடி யவறின் றானே. (உஅ௨)

அரியஅன் பினிற்கொ டுத்த விழிந்ததா யினுஞ் சிறந்த
திரியுமன் பினிற்கொ டுத்த விழிந்ததே சிறந்த தேனும்
பெரியவர் புகழப் பட்ட பெருந்தவக் குசேல மேலோன்
உரியஅன் பினையுங் கூட்டி யொருபிடி யவறின் றானே. (உஅங)

மற்றொரு பிடியெ டுத்து வாயிடப் போகுங் காலை
முற்றிழைத் திருவு ருக்கு மணியெனு முத்த மூரற்

உஎகூ. செறிதரு சுவைத்து ஈது. இல்லில் - வீட்டில். விலைப்பால் - விலைக்கு விற்கும் இடம்; கடை. கோடல் - கொள்ளல்; வாங்கல். அளை - வெண்ணெய். அவல் தின்றான்.

உஅ௦. முட்டை - தவிடு. கொன்னும் - குழறும். குளம் - வெல்லம்.

உஅக. கோதை - இலக்குமி. குமுதம் - செவ்வல்லிபோன்ற. தேங்குஉற - வாய்நிறைய.

உஅ௨. கிளர்ந்திருப்பதும் - சொல்லியிருப்பதும். ஏடு - இதழ். தொங்கல் - மாலை. இமையவர்க்கு - தேவர்களுக்கு.

உஅங. இரியும் - அழியும்; ஓடும்.

உஅ௪. இழை - ஆபரணம். முத்தமூரல் - முத்துப்போன்ற பற்கள். பொன்தொடி - பொன்வளை. கேள்வன் - கணவன்; கிருஷ்ணன்.

பொற்றொடிப் பூங்கொம் பன்னாள் பொருக்கென வோடி வந்து
கற்றவர் புகழ்தன் கேள்வன் கரத்தினைப் பிடித்துக் கொண்டாள். ()

நெய்யடை கவளங் கொள்ளு நெடுங்கடக் களிற்றின் கையைத்
தெய்யவார்த் தோடி வந்தோர் சிறுபிடி பிடித்தல் போன்ற
தையநுண் ணிடைக்க லாப மடிச்சிலம் பலம்ப வோடிப்
பொய்யிலான் கையைத் தேவி பொருக்கெனப் பிடித்த தோற்றம். ()

வேறு

இருங்கி ளிப்பெய ரிருடி யின்னவா
றொருங்கு கூறலு முவந்து தாழ்ந்தெழீஇப்
பருங்கை மால்வரைப் படையு ழக்குபு
பொருங்கை வேலினன் புகறன் மேயினன். (உஅசு)

என்ன வற்புத மெடுத்து ரைத்தனை
பன்னு நாயகன் பரிவிற் றுய்த்திட
றன்னை யூறுறத் தடுக்கு மாதரார்
நன்னர் நீரரோ நவையில் கேள்வியாய். (உஅஎ)

கடுத்த கார்விடங் கயிலைக் கண்ணுதல்
எடுத்துண் காலையு மிடத்து மேவிய
தொடுத்த பூங்குழற் றோகை மாமயில்
தடுத்த தில்லையே சாற்று மேன்மையோய். (உஅஅ)

---

உஅரு. ஐயம் - இருக்கிறதோ இல்லையோ எனச் சந்தேகிக்கக்கூடிய; அழகிய எனினுமாம். கலாபம் - பதினாறுகோவையுள்ள அரைப்பட்டிகை. அலம்ப - ஒலிக்க. பொய்யிலான் - கண்ணன். நெய் அடை - நெய்சேர்ந்த. கடம் - மதமுடைய. களிறு - ஆண்யானை. தெய்ய—அசை. ஆர்த்து - ஆரவாரஞ்செய்து. பிடி - பெண்யானை.

உஅசு. இருங்கிளிப்பெயர் இருடி - சுகர்; (சுகம் - கிளி). மால்வரை படை - யானைப்படை. உழக்குபு - கலக்கி. பொரும் - போர்புரியும். புகறல் - சொல்லுதல். மேயினன் - ஆரம்பித்தான்.

உஅஎ. பரிவில் - விருப்பத்தோடு. துய்த்திடல் தன்னை - புசிப்பதை. ஊறு உற - இடையூறுவிளைய. நன்னர் நீரரோ - நல்லகுணமுடையவரோ. நவை - குற்றம்.

உஅஅ. கண்ணுதல் - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான். கடுத்த - மிகவேகமுடைய. கார்விடம் - கரியவிஷம். இடத்து - இடப்பாகம். தொடுத்த - கட்டப்பட்ட. பூங்குழல் தோகை மாமயில் - உமாதேவியார்.

கணவன் றுய்த்திடக் கருதெ வற்றையும்
இணர்மென் கூந்தலா ரெடுத்தெ டுத்தளித்
தணவ நின்றுப சரிப்ப தல்லது
குணமி லாரெனத் தடுத்தல் கொள்கையே. (உஅகூ)

வாயு முன்பிணி வருத்த நிந்திடும்
ஆயுள் வேதிய ரகற்று மொன்றனை
நாய கன்கொள நயந்து நிற்பனேற்
றீய தென்பர்பின் சிந்தை நோவரே. (உகூ0)

கண்டன் வேறொரு கரும நெஞ்சகங்
கொண்டு மற்றைய குறைத்தி ருப்பினு
மண்டு மன்பின்யா தானும் வைத்துக்கொண்
டுண்டு பாரெனு வூட்டு நீரரே. (உகூக)

ஆர மைச்சுநேர் மதிய மைந்துமிக்
கோர டிச்சியாய்ப் பணியி லூணிடச்
சாரி லன்னையாய்ச் சமைவர் கற்புடை
நாரி மாரென நவில்வர் நல்லவர். (உகூஉ)

கோற்றொ டிக்கருங் கூந்தன் மாதராண்
மாற்ற லார்கெட மாட்டும் வைந்நுதிக்
கூற்ற மன்னவாட் குரிசி லெண்டப
மாற்றி நின்றதென் வழங்கு வாயென்றான். (உகூரு)

---

உஅகூ. இணர் - பூங்கொத்து. அணவ - அருகே. என - போல. ஏ - வினா.

உகூ0. வாயு முன் பிணி - வாயு முதலிய நோய்கள். ஆயுள்வேதியர் - வயித்தியர். நயந்து - விரும்பி.

உகூக. கண்டன் - கணவன். மற்றைய - உணவு முதலியவற்றை. மண்டும் - நிறைந்த. யாதானும் - ஏதாகிலும்.

உகூஉ. நாரிமார் - மாதர்கள். ஆர் அமைச்சு நேர்மதி அமைந்து - அரிய மந்திரியை யொத்த அறிவு பொருந்தி. பணியில் ஓர் அடிச்சியாய் - வேலை செய்வதில் ஓர் அடிமைப் பெண்ணாகவும். ஊணிடச் சாரில் அன்னையாய் - அன்னமிடுவதில் தாயாகவும்.

உகூரு. கோலம் தொடி - அழகிய வளையல். மாற்றலர் - பகைவர். வை - கூரிய - நுதி - நுனி. கூற்றம் அன்ன - யமனைப்போல. குரிசில் - பெருமையுடைய ஸ்ரீ கண்ணபிரானது. எண்தப - எண்ணங்கெட. வழங்குவாய் - விளக்கிச் சொல்வாயாக. (பரீக்ஷித்து மகாராஜன் கேட்டனன் என்க).

சேர லார்முடி தேய்க்கு மொண்கழல்
வீர னிங்ஙனம் வினவி டக்குறு
மூரல் கொண்டருண் முகத்த னாகிய
வீர மாதவ னிறைகொ டுக்குமே. (உ.கூச)

**வேறு**

சொற்பி றங்கிய நற்குலத் தோற்றத்தாள்
கற்பி னுக்கர சாய கனங்குழை
விற்பி றங்கிய வாணுதன் மெல்லியல்
பொற்பி னுக்கொரு பொற்பெனுந் தன்மையாள். (உகூரு)

நிலவு வெண்டிரைப் பாற்கட லின்றெழு
கலவ மாமயி லன்ன கருங்குழற்
குலவு மாமகள் கூற்றினிற் றோன்றினள்
அலகி னற்குணங் கட்கெல்லை யாயினள். (உகூசு)

இலக்க ணங்கள் நிரம்பிய வேற்றத்தாள்
விலக்க ரும்புகழ் வாய்ந்த விளங்கிழை
நலக்கு மன்பற்கு நன்மையல் லாதொன்று
கலக்கச் செய்குவ ளோபுவி காவலோய். (உகூஎ)

மேவு மன்பன் மனக்கு விரோதமா
யாவுஞ் செய்யகி லாளயர்ந் தாவது
நாவி னாலு நவிற்றுகி லாளுளம்
பாவு மாறு படர்தலுஞ் செய்கிலாள். (உகூஅ)

---

உகூச. சேரலார் - பகைவர். வீரன் - பரீக்ஷித்து மகாராஜன். குறுமூரல் - புன்னகை. மாதவன் - சுகன். இறை - விடை.

உகூரு. சொல்பிறங்கிய - புகழ்விளங்கிய. வாள்நுதல் - ஒளிவீசும் நெற்றி. பொற்பினுக்கு - அழகினுக்கு.

உகூசு. கலவம் - கலாபம். அன்ன - போன்ற. மாமகள் கூற்றினில் - இலக்குமியின் அமிசத்தில். அலகு இல் - அளவில்லாத.

உகூஎ. ஏற்றம் - உயர்வு. விளங்கு இழை - ஒளிக்கின்ற ஆபரணங்கள். அன்பற்கு - நாயகனுக்கு.

உகூஅ. மனக்கு - மனதிற்கு (சாரியை பெறாமல் உருபேற்றது). அயர்ந்து-மறந்து. நவிற்றுகிலாள் - சொல்லாள். பாவும் - பரவும். படர்தல் - நினைத்தல் ; நடத்தல்.

### வேறு

பலகலைகள் முற்றுணர்ந்த பளகிலாத் தவமறையோற்
குலகமிறும் பூதடைய வொழியாத பெருஞ்செல்வ
நிலமிசையுண் டாகவென நினைந்தவலோர் பிடியெடுத்து
நலமுறத்தின் றனனென்று மறிந்தாளந் நன்னுதலை. (உசுசு)

நகத்தின்ற பிடியவற்கே சகங்கொள்ளாப் பெருஞ்செல்வ
மிகத்துன்று மஃதன்றி மீட்டுமொரு பிடியெடுத்து
நகத்தின்று விடுவானே னுள்பலவு மன்னவற்குத்
தொகத்துன்று மடிமையாய்ச் சொற்பணிகள் கடவானுய். (௩00)

தானமர வேண்டுமெனுந் தக்ககருத் துளத்தமரக்
கானமருங் கருங்கூந்தற் கதிரமரு மதிவதனக்
கூனமரும் விற்புருவக் குயிலமரு மென்மொழியாள்
தேனமருந் தார்மார்பன் செங்கைபிடித் துத்தடுத்தாள். (௩0க)

அன்றியுமத் தொழுகுலத்தா னணிமனைக்கு வேண்டுவது
துன்றியசீர்ச் செல்வமே துன்னலார் முடியுரிஞ்சும்
வென்றியமர் கருங்கழற்கால் வெள்ளொளிய வேல்வேந்தே
மின்றிகழு மணிமார்பன் பணிசெயல்வேண் டுவதின்றே. (௩0உ)

ஆதலிற்றன் னயகனுக் கமைந்தவித மாகும்விதங்
காதமர்பொற் குழைநிழித்துக் கருங்குவளைக் குலஞ்சவட்டி
மோதடுகூற் றொடும்பொருத முடங்கல்விடுந் தடங்கருங்கண்
மாதர்புரிந் ததையன்றி மற்றொன்று புரிந்திலளே. (௩0௩)

---

உசுசு. நன்றுதல் - நல்ல நெற்றியையுடைய உருக்குமிணிதேவி. பளகு இலா தவமறையோற்கு - குற்றமிலாத குசேலனுக்கு. இறும்பூது - ஆச்சரியம்.

௩00. தக - தகுதியாக. சகம் - உலகம். துன்றும் - உண்டாகும். நக - களிக்க. அன்னவற்கு - குசேலனுக்கு. தொகதுன்று - உடன் கூடியிருக்கின்ற.

௩0க. தான் - கண்ணன். கானம் - மணம். கதிர் அமரும் மதி வதனம் - ஒளி பொருந்திய சந்திரனைப்போன்ற முகத்தினையும். கூன் - வளைவு. தார் - பூமாலை.

௩0உ. தொழுகுலத்தான் - யாவரும் வணங்கும் பிராமண குலத்தான்; குசேலன். அணி - அழகிய. துன்னலார் - பகைவர். கருமை - பெருமை. மின் திகழு மணி மார்பன் - கண்ணன்.

௩0௩. இதம் - நன்மை. குலம் - கூட்டம். சவட்டி - வாடச் செய்து; அழித்து. அடு - கொல்லும். கூற்று - யமன். பொருத - சண்டை செய்ய. முடங்கல் - ஓலை. தடம் - விசாலமான. மாதர் - உருக்குமிணிதேவி.

வன்புடைமாற் றலர்செய்த்தோர் வாய்மடுத்துத் தசைகுதட்டி
இன்புடையீ ருளுஞ்சுவைத்திட் டெழுங்கதிர்வாட் கண்ணபிரான்
அன்புடையார்க் கிதுகொடுத்த லாகுமிதா காதென்று
தன்புடையா யினுமெண்ணத் தக்கவனோ தார்வேந்தே. (௧0௪)

வாரிதிசூ ழுலகிலொரு மானுடவ னறியாது
சீரியலச் செய்தவறஞ் சிறிதேனு மப்பயனாற்
பேரியலுஞ் சுவர்க்கத்திற் பெரிதின்பந் துய்ப்பனெனிற்
கூரியலும் வடிவேலாய் குசேலமுனிக் கிஃதரிதோ. (௧0௫)

நீடுபுகழ்ப் பகவனடி நீங்காது வளருளத்தா
னோடுபொறிச் சேட்டையெலா மொடுக்கியமா தவனன்றே
ஏடுசெறி மலர்மார்பா விம்மறையோ னெனப்புகன்றிட்
டாடுபுகழ்ப் பெருந்தவத்தோ னப்பாலுஞ் சொலப்புக்கான். (௧0௬)

தேவியாற் றடைபட்டுச் செறிதரக்கைக் கொளுமவலைப்
பாவியவண் புகழானப் பழங்கந்தை தனின்முடிந்து
மேவியவோர் பிடியவலின் மிகமகிழ்ச்சி யுடையானாய்
நாவியலுந் துதிமுழக்கி நன்முகமன் பலசொற்றான். (௧0௭)

அன்றிரவோர் மென்படுக்கை யணிந்துதவ வதின்மேவி
மன்றிகழவ் வுவளகத்து வளம்பலவுங் கண்டதனாற்
றுன்றியபே ரானந்த மொழியாது தோன்றியெழக்
கன்றியதீப் பொறியவித்தோன் கண்படைகொண் டருளினான். (௧0அ)

௧0௪. தார் - பூமாலை. வன்பு உடை மாற்றலர் - வலிமையுடைய பகைவரது. செய்த்தோர் - இரத்தத்தை. வாய்மடுத்து - குடித்து. குதட்டி - மென்று. ஈருளும் - ஈரலையும். இது ஆகாது என்று. புடை - பக்கம். ஓகாரம் - எதிர்மறை.

௧0௫. வாரிதி - கடல். சீர் இயல - சிறப்புண்டாக. துய்ப்பன் - அனுபவிப்பன். அறியாது செய்த அறம் - அபுத்திபூர்வ புண்ணியம்.

௧0௬. பொறி - இந்திரியம். ஏடு செறி - இதழ்கள் நிறைந்த. பெருந் தவத்தோன் - சுகன்.

௧0௭. பாவிய - பரந்த. புகழான் - கண்ணன். செறிதர - நிரம்ப. முகமன் - உபசார வார்த்தை.

௧0அ. அணிந்து - அலங்கரித்து. மன்திகழ் பெருமை விளங்கும். உவளகம் - அந்தப்புரம். கன்றிய - வருத்திய. தீபொறி - கொடிய இந்திரியங்களை. அவித்தோன் - கெடுத்தவனாகிய குசேலன். கண்படை - தூக்கம்.

கதிருதிக்குங் காலையெழீஇக் கடன்பலவு முற்றியடர்
முதிர்புலன்செற் றருஞான முயன்றடைந்தோ னதலினன்
மதிகுலத்து மன்னவன்பால் வாய்திறந்தொன் றுங்கேளான்
நிதியமிகப் பெற்றவனும் நினைந்தூர்க்கு வழிக்கொண்டான். (௩0௯)

அக்காலைக் கண்ணனுந்தன் னணிவாயில் வரைவந்து
மிக்கார்வத் தொடுமடியில் வீழ்ந்துவணங் கிடமகிழ்ந்து
தொக்காசி பலகூறித் துவாரபா லகர்வாயில்
எக்காலு மின்பமறான் கடந்தப்பா லேகிடுங்கால். (௩க0)

விண்டார்தம் மணிமௌலி மிதித்துழக்குங் கருங்கழற்கால்
வண்டாடு நறுந்துளப மாலைதுயல் வருதடந்தோட்
கொண்டாடும் புகழ்க்கண்ணன் களிகூர்ந்து கோயில்புகக்
கண்டார்க ளாங்கிருக்குங் கார்க்குழன்மின் னார்பலரும். (௩கக)

மலர்வதனஞ் சாய்க்குநரு மணியதரம் பிதுக்குநருஞ்
சிலதியரைச் சினக்குநருந் திருமிநடப் பவருமாய்க்
குலவுமறை யவற்கொன் றுங் கொடுத்திலன்போ வென்றுனென்
றிலவவிதழ்ச் செய்யவா யியன்றனவெ லாமுரைப்பார். (௩கஉ)

---

௩0௯. கதிர் - சூரியன். எழீஇ - எழுந்து. கடன் பலவும் முற்றி - நித்திய கடன்களைச் செய்து முடித்து. புலன் - இந்திரியம். செற்று - அழித்து. மதி குலத்து மன்னவன் பால் - கிருஷ்ணனிடம். நிதியம்-செல்வம்; அம்—சாரியை.

௩க0. அணி - அழகிய. ஆர்வத்தொடும் - விருப்பத்தோடும். துவார பாலகர் - வாயில் காப்போர். அறான் - நீங்காதவன்; குசேலன். ஏகிடுங்கால் - போகும்பொழுது.

௩கக. விண்டார்தம் - பகைவர்களுடைய. மணி மௌலி - மாணிக்கம் பதிக்கப்பெற்ற கிரீடம். உழக்கும் - வருத்தும். கருங்கழல் - பெரிய வீரக் கண்டை. துயல்வரும் - அசையும். களிகூர்ந்து - ஆனந்த மடைந்து. கார் குழல் - மேகம் போன்ற கூந்தலுடைய. மின்னார் - பெண்கள்.

௩கஉ. மலர்வதனம் - தாமரைப் பூப்போன்ற முகத்தை. மணி அதரம் - அழகிய உதட்டை. சிலதியரை - தோழிமார்களை. சினக்குநரும் - கோபிப் போரும். திருமி - திரும்பி. குலவு - விளங்கும். மறையவற்கு - வேதியராகிய குசேலருக்கு. இலவ இதழ் செய்யவாய் - இலவம் பூவிதழ் போன்ற சிவந்த வாயால்.

**வேறு.**

தாயெதிர் வுற்ற சேயென வுள்ளந் தழைவுற்றான்
போயெதிர் கொண்டான் காலில்விழுந்தான் புனைவித்தான்
நேய முளானென் றாரறி வித்தா னீங்கென்றான்
சேய்மைய னைத்தா னன்றிது வென்றார் சிலமாதர். (௩௧௩)

பார்த்திபர் பல்லோர் காத்தனர் நிற்கப் பாராளுக்
கூர்த்த மதிப்பூ சுரனெதிர் கொண்டான் கொண்டாடிப்
பூர்த்தி மிகுந்தா னந்தோ வாளா போகென்றான்
சீர்த்தி மிகுந்தா னன்றே யென்றார் சிலமாதர். (௩௧௪)

துன்றிய வன்பிற் கட்டி யணைத்தான் றொழுதிட்டான்
பொன்றிகழ் பள்ளி மீதமர் வித்தான் புகழ்ந்திட்டான்
ஒன்று மளித்திட் டானல னுதயத் துன்னூர்க்குச்
சென்றிடு கென்று னன்றிது வென்றார் சிலமாதர். (௩௧௫)

எளியோன் பாவ மித்தனை தூர மேன்வந்தான்
அளியார் தேனே பாலே யெனவினி தாப்பேசிக்
களியா நின்றோர் காசும் மீயான் கழிகென்றான்
தெளியார் நல்லோ ரிவனுரை யென்றார் சிலமாதர். (௩௧௬)

காடும் நாடும் நீந்தின னொகிக் கழியன்பின்
நீடு நிரப்பு நீங்கிடு மென்னு நினைவுள்ளஞ்
சூடுபு வந்தா னிங்கொரு வேளைச் சோற்றுக்கே
தேடுவர் சான்றோ ரிவன்புக ழென்றார் சிலமாதர். (௩௧௭)

---

௩௧௩. சேய் - பிள்ளை. புனைவித்தான் - அலங்கரித்தான். நீங்கு என்றான் - பொருளொன்றுங் கொடாமல் போய்வா என்றான். சேய்மையன் - தூரத்திலிருப்பவன்; அயலான்.

௩௧௪. சீர்த்தி - சிறப்பு. மிகுந்தான் . கிருஷ்ணன். பார்த்திபர் - அரசர்கள். கூர்த்த மதி பூசுரன் - கூர்ந்த அறிவுடைய பிராமணனை (குசேலனை). பூர்த்தி மிகுந்தான் - நிறைநெஞ்சுடையனாயினன். அந்தோ - ஐயோ. வாளா - சும்மா.

௩௧௫. உதயத்து - சூரியோதய காலத்தில்.

௩௧௬. அளி ஆர் தேனே பாலே என - இனிமை நிறைந்த தேன்போலும் பால்போலும். கழிக - போ. தெளியார் - நம்பமாட்டார்.

௩௧௭. கழி - மிகுந்த. நீடு நிரப்பு - முழு தரித்திரமும். சூடுபு - கொண்டு, சான்றோர் - பெரியோர்.

குன்றா லன்று மாரி தடுத்த கோமான்மற்
றென்றா நண்ப னென்றிவண் வந்தா னுறவுள்ள
மன்றா யயன் றன்கொடு வந்ததை யும்வாரித்
தின்றா னென்று மீந்தில னென்றார் சிலமாதர். (ருகஅ)

ஒழுங்குறு முற்றவ மில்லவர் யார்நட் புற்றாலென்
விழுங்கு மிடித்துயர் தீரரு நீரினர் மெய்யீதால்
அழுங்க லிலாதுல காள்பவர் தேவிய ராஞலுஞ்
செழுங்கை தரிப்பது மண்வளை யென்றார் சிலமாதர். (ருகக)

வேறு

இங்கிவனம் மறையோன்பால் வைத்ததயை யெலாமறிந்தோ மென்னே யென்னே, கங்கணங்கண் ணுறுவதற்குக் கண்ணடியும் வேண்டுங்கொல் கருங்கண் ணீர்காள், துங்கமுட னொருவேளைச் சோறுண்ட துயர்ந்தவரை துளைத்துப் போகி, அங்குவரு சிகரி யொன்று பிடித்ததுபோ லாயிற்றென் றறைந்தார் சில்லோர். (ருஉ0)

நரபதிபால் வேண்டுவன பெற்றுவருந் தலைவனென நடவை பார்த்துப், பரவுபுகழ் மனையிருக்கு மக்தோநன் மைந்தருமப் பரிசே நிற்பர், விரவிலிவ னென்செய்வான் சிந்துபழுங் கந்தையன்றி வே றொன் றில்லான், புரவுடையா னென்பனொரு கலையுமளித் திலனென்று புகன்றார் சில்லோர். (ருஉக)

எத்துணைய செல்வமிருக் திருந்தானு மீத்துவத்த லிவன்பா லில்லை, மெத்துநய மொழிகளான் மயங்கியொன்றுங் கேளாஞய்

ருகஅ. குன்றால் - கோவர்த்தனகிரியால். கோமான் - கண்ணன். இவண் - இங்கு. உறவு உள்ளம் அன்றாய் - (குசேலன்) நட்பை மனதில் கொள்ளா தவனாய்.

ருகக. மிடி - தரித்திரம். தீர் அரு நீரினர் - நீங்கிக்கொள்ளமுடியாத தன்மையுடையவரே. அழுங்கல் - வருத்தமில்லாமல். வளை - வளையல்.

ருஉ0. கருங்கண்ணீர்காள் - கரியகண்களையுடைய மாதர்களே. கங்க ணம் - கையிலணியும் ஓர் ஆபரணம். கண்ணடி - கண்ணாடி. துங்கமுடன் - உறுதியாக. வரை - மலை - சிகரி - எலி.

ருஉக. நரபதிபால் - நரேந்திரனுகிய கிருஷ்ணனிடம். நடவை - வழி. மனை - மனைவி. அப்பரிசே - அவ் எண்ணம் உடையவராகவே. விரவில் - மனைவி மக்கள் வந்து சுற்றிக்கொண்டால். இவன் - குசேலன். புரவு உடை யான் - காத்தற்றொழில் உடையவ (னென்னும் பெருமைகொண்ட) கண்ண பிரான். கலையும் - வஸ்திரமும். அளித்திலன் - கொடுத்தானில்லை.

ருஉஉ. எத்துணைய - எவ்வளவினதாய. ஈத்துவத்தல் - ஏழைகளுக்குக் கொடுத்துக் களிப்படைதல். "ஈத்துவக்கு மின்பம் அறியார்கொல் தாமு

விரைந்து போனான், பித்துறுமா மறையவனு மிவனுமகிழ்ந் தாற
னுப்பிப் பெயர்ந்து வந்தான், கொத்துறுமிந் நட்பிருந்தென் னிரா
தொழிந்தா லென்னென்று குயின்றார் சில்லோர். (ந உ உ)

அம்மறையோ னொருபொருளுங் கேளானுய்ச் சென்றதையா
மறிந்தோ மன்ற, மம்மர்தபுத் தீத்துவப்பார்க் காணிலன்றோ கேட்ப
வர்க்கு வாயுண் டாகும், விம்மலுறு நசையினரு மிவனிடத்துக் கேட்
பதற்கு மேவா ரென்றாற், றம்மையுணர்ந் துயர்ந்தவரோ கேட்கத்
தக் கவரென்றார் தடங்கட் சில்லோர். (ந உ ந)

என்னினைத்து வந்தானோ வவனிவனும் யாதுநினைத் திருக்கின்
றானோ, பன்னரிய விவன்செய்யு மாயையெவ ராலறியப் படும்வாய்
வந்த, இன்னனவெ லாம்பேச லறிவன்று நமக்கெனவண் டிரங்குங்
கூந்தன், மின்னனைய நுண்ணிடைப்பே ரமர்க்கண்மட மாதர்சிலர்
விளம்பி னாரே. (ந உ ச)

சிற்றிடைப்பே ரமர்க்கண்மட மாதர்பல ரிவைமுதலாச் செப்பி
நிற்கக், கற்றவரேத் தெடுக்குமுனி துவரைநெடுந் தெருப்பலவுங்
கடந்து போகி, வற்றுதலில் பெருங்கடலு நீங்குபுதன் னூர்க்கேகும்
வழியைக் கூடி, நற்றவமாந் தன்னிலக்கிற் சிந்தையுற மிகமகிழ்ந்து
நடக்குங் காலை. (ந உ ரு)

அருந்தவர்கள் புகழ்சீர்த்தி யமைந்ததிருக் கண்ணபிரா னருளி னாலே
பொருந்துவிர தாதிகளான் மிக்கிளைத்த தன்னுடம்பு பூரிப் புற்ற
திருந்தபழங் கந்தைசெழும் பொன்னுடை யாயிற்று விலங்குங் கண்டப்
பெருந்துளப மணியாரம் பெருவிலைமுத் தாரமாப் பிறங்கிற் றாலோ.

---

டைமை - வைத்திழக்கும் வன்க ணவர்''—திருக்குறள். பித்து - பயித்தியம். மறையவனும் - குசேலனும். இவனும் - இக்கண்ணபிரானும். ஆறு அனுப்பி- வழிவிட்டு. கொத்து - மிகுதி. குயின்றார் - சொன்னார்கள்.

நஉந. மம்மர் தபுத்து - துன்பத்தைக் கெடுத்து. விம்மல் உறும் நசையின ரும் - பேராசை யுடையவரும். மேவார் - வாரார். தம்மை யுணர்ந்தோர் ஞானிகள் ஆவர். மன்ற—அசைச்சொல். தடம் கண் சில்லோர் - விசாலமான கண்களையுடைய சில மாதர்கள்.

நஉச. பன்னரிய - சொல்லுதற்கரிய. பேர் அமர் - பெரும் போர்.

நஉரு. துவரை - துவாரகை. நீங்குபு - தாண்டி. தன் இலக்கில் - தன் குறிப்பில்.

நஉசு. ஆதி என்பது வறுமையைக் குறிப்பது. கண்டம் - கழுத்து. பிறங் கிற்று - விளங்கிற்று.

செவியணிபுல் லியபொருள்க ளரதநகுண் டலமாகித் திகழ்ந்த வான்ற, சவியணிகை விரற்றருப்பைப் பவித்திரம்பொன் னாழியாய்த் தகைந்த தோங்கும், புவியணியுங் கட்டழகு காமனுங்கா முறுசிறப் பிற் பொலிந்த தம்ம, கவியணிபு மதகளிற்றுக் கதிகமாம் வலியுமுடற் கலந்த தன்றே. (௩உ௭)

பாயபெரு மிடிமுன்னே தனக்கொழிந்த வவித்தையெனப்பாறிமாய்ந்த
தேயவழி நடையிளைப்பு முதலியவெ லாஞ்சற்று மின்றாய் விட்ட
காயவெயில் குளிர்ந்ததுபா லையுநீரூ றிற்றிளமென் காலும் வீசிற்
றாயவிவை யனைத்துமுணர்ந் திறும்பூது மிகக்கொண்டா னன்ன காலை.

வேறு

ஒழுகுங்கட வரையுங்கதி ருறழ்செம்பொ னிரதமும்
எழுவெங்கதி யுளைபொங்கிய வியல்தங்கிய பரியுங்
கொழுநின் றவை யயில்கொண்டவர் குழுவும்பல குழுமப்
பழுதென்பதி லவர்மன்னவர் பலர்வந்தெதிர் கொண்டார். (௩உ௯)

மணிவார்முடி மண்டோய்தர மறைமாமுனி தாளிற்
பணிவார்சிலர் துதிப்பார்சிலர் படரன்பினில் வழிபட்
டணிவார்சிலர் பார்ப்பார்சில ரார்ப்பார்சில ராகிக்
கணிவார்புய விறல்வேந்தர்கள் கழலாக்களிப் புற்றார். (௩௩0)

---

௩உ௭. புல்லிய - அற்பமான. அரதநம் - இரத்தினம். ஆன்றசவி - மிக்க ஒளி. ஆழி - மோதிரம். தகைந்தது - விளங்கினது. புவி - உலகம். காமனும் - மன்மதனும். காமுறும் - விரும்பும். கவி அணியும் - கவிகளால் புனைந்து கூறப் பெறும். களிற்றுக்கு - யானையைப் பார்க்கிலும்.

௩உ௮. பாய - பரவிய. மிடி - வறுமை. அவித்தை - அவிச்சை; அஞ்ஞானம். பாறி - அழிந்து. ஏய - முன்னே பொருந்திய. பாலையும் - பாலைநிலமும். நீர் ஊறிற்று - ஜலம் சுரக்கப்பெற்றது. காலும் - தென்றற்காற்றும். இறும்பூது - ஆச்சரியம்.

௩உ௯. கடவரையும் - மதயானைகளும். கதிர் உறழ் - சூரியனை யொத்த. கதி - வேகமான நடை. உளை - பிடரிமயிர். இயல் - நல்லிலக்கணங்கள். பரியும் - குதிரையும். கொழு - முனை; கொழுப்பு. வை அயில் - கூரிய வேல். குழுவும் - கூட்டமும்.

௩௩0. கணி - கண்ணி; பூமாலை. வார் புயம் - நெடும் புஜம். விறல் - வெற்றியுடைய. வார் - நீண்ட. மணிமுடி - இரத்ந கிரீடம். மண்தோய்தர - பூமியிற்பட. அணிவார் - அலங்கரிப்பர். ஆர்ப்பார் - ஆரவாரஞ் செய்வார். கழலா - நீங்காத.

பொன்னார்வட வரைமேற்கதிர்ப் புத்தேளெனப் பொலிய
மின்னார்கதி ருமிழும்மொரு வியன்மாமணித் தேர்மேன்
முன்னார்மறை யோனைப்பல முகமன்புகன் றேத்தி
நன்னாரொடு பெருவேந்தர்கள் சூழாநடந் தனரால். (௫௫௧)

மண்ணென்பது தெரியாவகை வானத்திடை யமரர்
கண்ணென்பது நுழையாவகை கற்பத்தரு மலரை
எண்ணென்பது மின்றும்வகை யிறைத்தார்களித் தார்த்தார்
புண்ணென்பது பொலிவேலவர் பூத்தா ரிறும்பூது. (௫௫௨)

கடன்மேலெழுந் தார்த்தாலெனக் கடனீருறப் பருகி
உடன்மேகங்க ளார்த்தாலென வுயர்வான்முக டதிர
மடன்மேலெழு தார்வானவர் வண்டுந்துபி யைந்தும்
விடன்மேலுள தாகாவகை மேலும்பெரி தார்த்த. (௫௫௩)

### வேறு

அளவி லாமகிழ் தலைசிறந் தோங்கிட வவிர்ந்து
பளகி லாதுயர் தருப்படர் கொடியசைந் தென்ன
வளரி லாவிய மின்னுக ணடித்தென மணிவாய்த்
தளவ மூரல்விண் மடந்தையர் நடித்தனர் தயங்க. (௫௫௪)

---

௫௫௧. ஆர் - பொருந்திய. வடவரை - வடக்கிலுள்ள மகாமேருகிரி. கதிர் புத்தேள் என பொலிய - சூரியனைப்போல விளங்க. கதிர் - ஒளி. வியன் - பெரிய. முகமன் - உபசாரவார்த்தை. நன்மை நாரொடு - நல்ல அன்போடு. சூழா - சூழ்ந்து.

௫௫௨. அமரர் - தேவர்கள். தரு - விருட்சம். எண் என்பதும் இன்றும் வகை - கணக்கில்லாதபடி. புண் - (பகைவர்) மாமிசம். வேலவர் - வேலாயுத முடைய அம்மன்னர்கள். இறும்பூது பூத்தார் - ஆச்சரிய மடைந்தார்கள்.

௫௫௩. ஆர்த்தால் - ஆரவாரித்தால். உறப்பருகி - மிகவுண்டு. மடல் - பூவிதழ். தார் - மாலை. ஐந்துபி ஐந்தும் - தேவதுந்துபி ஐந்தும். மேல் விடல் உளது ஆகாவகை - இடை விடாமல். ஆர்த்த - ஒலித்தன.

௫௫௪. தலைசிறந்து - மிகுந்து. அவிர்ந்து - பிரகாசித்து. பளகு - குற்றம். தரு - கற்பகவிருட்சத்தின்மேல். என்ன - போல. மின்னுகள் நடித்து என - மின்னல் கொடிகள் நடனஞ் செய்தாற்போல. மணி - பவளம். தளவ மூரல் - முல்லை யரும்பொத்த பற்கள். விண்மடந்தையர் - தெய்வலோகமாதர்கள். தயங்க - விளங்க.

பிரக லாதனன் பராசரன் பெருஞ்சவு னகன்சீர்
வரவி யாதனம் பரீடன்புண் டரீகன்முன் மற்றோர்
கரவி லாதவுள் ளத்தராய்க் கழிமகிழ் சிறப்ப
விரவி நின்றுதோத் திரமெடுத் தியம்பினர் மேன்மேல். (கககரு)

இன்ன பல்வகை யதிசய மெதிருறக் கண்டு
நன்னர் மாமறைக் குலத்தவ னாயகன் பாதத்
துன்னு நெஞ்சகம் பெயர்த்தில னுறுவன வெல்லாம்
பன்னு மெம்பிரா னருளென நினைத்தனன் படர்வான். (கககசு)

அரச ரேமுத லாயினு ரனைவரு மடுத்துப்
பரசி யேவலர் போற்றிரி யார்பின்பு படரப்
புரசை மால்கரி பரிமுதற் படைகளும் பொலியத்
தரைசெய் பேறென விளங்குதன் னூர்ப்புறஞ் சார்ந்தான். (கககஎ)

பரியு நீள்பழங் கந்தைகொ ளுடையணிப் பரிசு
பெரிய மாதவர் வேந்தர்கண் முதலியோர் பெரிதுந்
தெரியு மாபுகழ்ந் தேத்திடச் சிறந்தன னென்னில்
உரிய தாகிய தவத்தினி லுயர்ந்ததொன் றுண்டோ. (கககஅ)

என்று ரைத்தமா முனிவர னிணையடி யிறைஞ்சி
நன்று சொற்றனை மற்றது நடத்துகென் றடையார்க்
கொன்றி ரத்தம்வாய் மடுத்திடும் வாட்படைக் குரிசில்
துன்று மற்பொடு கேட்டலுஞ் சுகமுனி சொல்வான். (கககசு)

**குசேலர் துவாரகை கண்டு**
**தந்நகர்ப்புறமடைந்த அத்தியாயம் முற்றிற்று.**

ஆகச்செய்யுள் - ருசுஉ.

---

கககசு. நன்னர் - நல்ல. மாமறைக்குலத்தவன் - குசேலன். நாயகன் - கண்ணன். உன்னு நெஞ்சகம் - தியானிக்கின்ற உள்ளத்தை. உறுவன - சம்பவிப்பன. படர்வான் - நடந்து செல்வான்.

கககஎ. பரசி - தோத்திரஞ் செய்து ; போற்றி. ஏவலர் - வேலைக்காரர். புரசை - யானை கட்டுங் கறி. மால்கரி - பெரிய யானை. பரி - குதிரை. தரை செய்பேறு என - இம்மண்ணுலகஞ் செய்த தவப்பேறுபோல.

கககஅ. பரியும் - கிழிந்த ; இரங்கும். இப்பரிசு - இந்தப்படி.

கககசு. இணை அடி - இரண்டு பாதங்களையும். இறைஞ்சி - வணங்கி. மற்றது - ஏனைய வரலாற்றையும். நடத்துக - சொல்லியருள்க. அடையார் - பகைவரை. வாய்மடுத்திடும் - குடிக்கும். குரிசில் - பரீக்ஷித்து மகாராஜன். அன்பொடு - பேரன்போடு.

மூன்றுவது

# குசேலர் செல்வ நுகர்ந்து வைகுந்தமடைந்த அத்தியாயம்

கடவுள் வணக்கம்

## இன்னிசை வெண்பா

ஒருதிடந் தான்கதிக்க ணுய்க்குமெனச் சொல்ப
கருதிடந் தானவன் காமர் குலத்தான்
பொருதிடந் தானவர் பொன்ற வமர்த்தான்
மருதிடந் தானடிய வா. (க)

## வேற்றொலிவெண்டுறை

கருங்கடலி னடுவெணெழு கதிரெனக்கார் நிறத்துமணி
கதிர்ப்பக் காமர்
பெருங்கனக வரையெனச்செம் பொன்னுடை நான்றபுயம்
பிறங்கப் பாயல்
வென்றிவா ளரவமுந் தொடரமென் றுமறைத்
துன்றுமா மங்கையுந் தொடரவாய் விட்டெழீஇ
மன்றவே தங்களுந் தொடரவான் சுவையமிர்
தொன்றுசெந் தமிழ்தொட ரொருவர்பின் தொடர்தரச்
சென்றவன் திருவடி சேருவார் யாருமே. (உ)

## கலித்தாழிசை

காமர்நறு விரைத்துளபக் கண்ணியனைப் புண்ணியனை
மாமகள்தன் கொழுநனை வழுத்துவீர் மானுடர்காள்

---

க. கருது இடம் - யாவரும் பிறக்கவிரும்புகின்ற இடமாகிய. தானவன் - சந்திரன். மருது இடந்தான் அடி அவா கதிக்கண் உய்க்கும் ஒரு திடம்தான். பொன்ற - மடிய. அமர்த்தான் - போர் செய்தவனும். மருது - மருத மரத்தை. இடந்தான் - பிளந்தவனும். ஒரு திடம் தான் - ஒப்பில்லாத உறுதிமொழி யேயாம்.

உ. கார்நிறம் - கரிய நிறமுடைய திருமார்பு. மணி - கௌஸ்துபமணி. நான்ற - தொங்குகிற. பிறங்க - பிரகாசிக்க. பாயல் - சயநமாகிய. துன்றும் -

மாமகள்தன் கொழுநனை வழுத்துவீ ராமாகிற்
றாமரைப் பெருமுதலுஞ் சாரற் கரியகதி சார்வீரே. (௩)

ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவந்த
**வஞ்சித்தாழிசை**

மாதர்களில் வருந்தாமே, போதமுறப் புரிந்திடுவீர்
சீதமலர்த் திருமார்பன், கோதறுசீர் குறிப்பீரே.
மங்கையரின் வருந்தாமே, பொங்கமுறப் புரிந்திடுவீர்
செங்கமலத் திருமார்பன், கொங்கலர்சீர் குறிப்பீரே.
வனிதையரின் வருந்தாமே, புனிதமுறப் புரிந்திடுவீர்
கனிமொழிச்செந் திருமார்ப, னினியசீர் குறிப்பீரே. (௪)

ஒப்புமைபற்றிவந்த ஆறடித்தரவு
**கொச்சகக்கலிப்பா**

வண்டாடு பூந்துளப மாலையனை வானோர்கள்
கொண்டாடுஞ் சீர்த்தியனைக் கோவலர்பா டித்தயிர்நெய்
உண்டாடு சீதரனை யொப்பிலா வற்புதனைக்
கண்டாடு மன்பருளங் காதலிக்கும் புண்ணியனைத்
தொண்டாடு வன்றியெனச் சொல்லித் துதிமுழக்கி
ஒண்டா டிணைக்கொண் டுயர்வீ ருலகீரே. (௫)

**வேறு**

மின்றிகழ் பிறழ்பற் கூற்றம் விலாப்புடை வீங்க வுண்ண
வென்றிகொள் செறுநர்ச் சாய்த்து விருந்திடும் வெள்வேல் வேந்தே
ஒன்றிய புகழ்க்கு சேல னூர்ப்புறஞ் சார்ந்த காலை
நன்றிமிக் குறுமச் சீறூர் நலப்பெரு நகரா யிற்றே. (௬)

---

வாழும். வான்சுவை அமிர்து ஒன்று. செந்தமிழ் தொடர் ஒருவர் - செந்தமிழ்ப் பாக்களை யருளிச் செய்த திருமழிசையாழ்வார்.

௩. தாமரைப் பெருமுதல் - தாமரையில் வீற்றிருக்கும் பிரமன்.

௪. போதம் உற - ஞானத்தைப் பெற. புரிந்திடுவீர் - விரும்புவோர்களே. புரிதல் - விரும்பல். பொங்கம் உற - பொலிவுடைய. கொங்கு - தேன்போலினிமையாகிய.

௫. கோவலர்பாடி - திருவாய்ப்பாடி. துவன்றி - நெருங்கி. ஒள்தாள் - ஒட்பமாகிய திருவடி.

௬. செறுநர் - பகைவர். வேந்தே - பரீக்ஷித்து மகாராஜனே. சீறூர் - சிறியவூர்.

மற்படு கான மெல்லா மாடமா ளிகையே யாகிச்
சொற்படு புலவ ராலுஞ் சொலற்கருஞ் சிறப்பு வாய்ந்து
விற்படு மமரர் நாடு வீழ்ந்துமண் ணிறைகொண் டாற்போல்
அற்படுத் தொளிர்ந்த தைய னருளினிற் சிறந்த துண்டோ. (எ)

இமைக்குமந் நகரங் காணூஉ வெறும்பவலிக் காதி மைந்தன்
சமைத்தவேற் றுச்சி ருட்டி தனிற்றயித் தியரைச் சாயக்
குமைத்தரும் போகந் துய்த்துக் குலவுநந் நகர்க்கு மாறு
அமைத்தபொன் னகரோ வென்ன வமரருண் மயங்கி னாரே. (அ)

அறன்கடை நயக்கும் வெஞ்சூ ராருயிர் சவட்டி வாங்கித்
திறன்படு சுரர்கால் யாப்புச் செறிகழல் வித்துச் சீர்த்தி
நிறங்கிளர் வெள்வே லைய னிறைகுடி யேற்று நாளிற்
பிறங்கிய துறக்க நாட்டின் பெற்றியந் நகரின் பெற்றி. (கூ)

அருநிதி தவமென் றுராய்ந் தமைதர வீட்டி யீட்டித்
தருநிதி அனைய கண்ணன் றன்னருள் பெற்ற மேலோன்
பெருநிதி நகர நோக்கிற் பிறங்கிய செல்வம் வாய்ந்த
இருநிதிக் கிழவன் வாழ்க்கை யெழினகர் சிற்றூ ராமால். (கO)

நயந்தரு நடுவுள் ளானை நல்லறஞ் சூழ்ந்தாற் போலப்
பயங்கெழு நகரஞ் சூழ்ந்து பாசநீத் தறிவின் மேலா
உயர்ந்தவர்க் கினிது செய்த வுதவிபோ லுயர்ந்து மிக்க
வயங்கொளப் பொலிந்தன் றெஞ்சா மஞ்சுசூ ழிஞ்சி மாதோ. (கக)

கோன்பெறு மயிர்தங் கொள்ளை கொண்டுளார் நகரை மோதெதன்
றின்புறு கீர வாழி யினியநீர்க் கடலை யேவ

---

எ. மல் - வளம். வில் - ஒளி. இறை கொண்டாற்போல் - தங்கினாற் போல். அல்படுத்து - இருளையழித்து.

அ. எறும்பவலி - மிகுந்த தவவலிமையினை யுடைய. காதிமைந்தன் - விசுவாமித்திரமுனிவர். தயித்தியரை - திதியின் புத்திரராகிய அசுரரை. சாய - அழிய. குமைத்து - கொன்று.

கூ. அறன் கடை - பாவத்தொழில். சவட்டி - வருத்தி. கால்யாப்பு செறிகழல்வித்து - கால் கட்டாகிய விலங்கை யவிழ்ப்பித்து. சீர்த்தி நிறம் கிளர் - புகழினுடைய நிறம் விளங்குகிற. ஐயன் - முருகக்கடவுள்.

கO. இருநிதிக் கிழவன் - பெருமை வாய்ந்த குபேரன். இருநிதி - சங்கநிதி, பதுமநிதி.

கக. நடு - நடுநிலைமை. எஞ்சா மஞ்சு சூழ் இஞ்சி - மிகுதியாக மேகஞ் சூழ்ந்த மதிலானது. பயம் கெழு - பயன்கள் நிறைந்த.

கஉ. கொன் - பெருமை. கீரம்ஆழி - பாற்கடல். கீரம் - க்ஷீரம் என்பதன் திரிபு. வானவர் நகர் இதே என்ன.

வன்புறு மதுவி தேவா னவர்கக ரென்னச் சூழ்ந்து
மன்பெறப் பொருதல் போன்ற தகழிநீர் மதிலை மோதல். (கஉ)

பற்பல வடுக்கு மாடம் பரந்தவிண் டாங்க நோக்கி
அற்புறு நந்தம் பொன்னு டந்தர நிற்ற லாலே
விற்பட நிலத்தெவ் வேலை வீழுமோ வென்றுட் கொண்ட
கற்பக மாலைத் தேவர் காதர மொழிந்த தன்றே. (கங)

பற்றையார்ந் துயர்ந்த வோங்கற் பரிசன்ன பைம்பொன் மாடத்
தெற்றையான் புனைவல் வானுற் றிருபுற நெருங்கி நிற்குங்
கற்றையார்ந் தெழுந்த மாடங் கவிழ்தர வொட்டா தென்னு
ஒற்றையா ருருளைத் தேரை நடத்துவோ னுவகை பூத்தான். (கச)

இந்திர நீல மேடை யெழுங்கதிர்க் கற்றை மீப்போய்க்
கந்தடு வெண்க ளிற்றைக் கருங்களி றுக்க நோக்கி
முந்தைநாட் சாப மீட்டு முளைத்தது கொல்லென் றஞ்சிச்
சிந்தையு ளாய்ந்து பின்ன ரிதுவெனத் தெளியு மாலோ. (கரு)

வஞ்சிநுண் ணிடையி னார்மேன் மாடமே டையினி ருந்து
வெஞ்சினப் புலவி மூள மணிவடம் வெறுத்த தோளில்
அஞ்சுமூ டலின்விண் மாத ரெறிந்தமுத் தாரம் வீழ
விஞ்சைவல் லவனங் கேள்வ னெனவுளம் வியந்து கொள்வார். (கசு)

சுதைபயின் மாடந் தோறுஞ் சுடர்மதி தவழுந் தோற்றங்
குதைவரிச் சிலையை வாட்டுங் கோடிய புருவ நுண்கூர்ப்
புதையிகல் கண்ணி னாரம் போருக முகத்தை நேரத்
ததைபுடற் களங்கந் தேய்த்துக் கழிப்பது தகையு மன்றே. (கஎ)

---

கங. விற்பட - ஒளிகெட. நோக்கி - நோக்கலால் என்னும் வினையெச்சத் திரிபு. வேலை - சமயம். காதரம் - அச்சம்.

கச. பற்றை ஆர்ந்து - சிறு தூறுகள் அடர்ந்து. பற்றை - செங்காந்தள். ஓங்கல் - மலை (தொழிலாகு பெயர்.) எற்றை - எதனை. புனைவல் - அலங்கரித் துரைப்பேன்.

கரு. மீபோய் , மேலே சென்று. கந்து அடு - கட்டுத்தறியை முறிக்கிற. முந்தைநாட் சாபம் - தூருவாசராலடைந்த சாபம். இதனைத் திருவிளையாடற் புராண முதலியவற்றிற் காண்க.

கசு. புலவி - ஊடல். மணிவடம் - முத்துவடம். விஞ்ஞை - மாயவித்தை. கேள்வன் - நாயகன்.

கஎ. சுதை - சுண்ணச் சாந்து. குதை - நாண்பூட்டுமிடம். கோடிய - வளைந்த. புதை - அம்பு. அம்போருகம் - தாமரை. ததை - நெருங்கிய. தகையும் - ஒக்கும்.

மணிநிலா முற்ற மேவி மாதரார் வயங்கு கண்கட்
கணிநிலா வுறுமை தீட்ட வதிகமை யுகிரிற் கோத்துத்
துணிநிலா விசும்பிற் றுள்ளத் தெரித்திடு தோறு மாங்குத்
தணிநிலா மெய்யிற் சார்ந்து தயங்கிடுங் களங்க மென்ன. (கஅ)

வெள்ளிய மாடந் தோறும் விளங்கெழின் மணிப்பூ ணல்லார்
அள்ளொளிக் கற்றை வீச வணிந்துநிற் கின்ற தோற்றந்
தெள்ளுவெண் டிரைசு ருட்டுஞ் சிறந்தபாற் கடலி னூப்பண்
எள்ளவில் பவள வல்லி யெழுந்துநின் றிடுத லேய்க்கும். (ககூ)

இரசிதத் தமைத்த மாட மெறிசெறி திரைப்பா லாழி
வரவதன் மீது துஞ்சு மஞ்சுமா றடித்து மாவாம்
விரவுசெம் மேகக் கற்றை விளங்கிடு செம்பொ னூடை
உரவுவெண் பிறைவெண் சங்க முடுக்களச் சங்கின் முத்தம். (உ0)

விலங்கல்விண் ணுயர்ந்த மாடம் வியன்கொடி முடங்க லாங்கண்
இலங்குறு மதிய மந்தேத் திருன்மட மாதர் மஞ்ஞை
நலங்கொளம் மதியங் கண்டு நகைநிலா மணிபெய் தெண்ணீர்
கலங்கலி லருவி யீட்டங் கார்கடக் களிநல் யானை. (உக)

அண்ணலங் களிநல் யானை யார்ப்பும்வாம் பரிமு ழக்கும்
ஒண்ணலங் கொடிஞ்சித் திண்டே ரோதையும் வயவ ரார்ப்பும்
பண்ணலங் கனிந்த தீஞ்சொற் பாவையர் கலன்க ளார்ப்பும்
மண்ணலம் புனைந்த வாடை வாரிவா யடைக்கு மாதோ. (உஉ)

மறைபயில் சிறார்தங் கூட்டம் வயங்கிய கிடையு மற்றைக்
கறையறு கல்வி கற்குங் காமர்சா லையுங்கார்க் கூந்தல்
நறைமொழு கலங்கன் மாதர் நடநவில் சாலை யும்பொன்
நிறைபல வறமு மோங்கு நெடியசா லைகளும் பல்ல. (உஙூ)

---

கஅ. அதிகம் மை - மிகுதியாகிய மையை. உகிரில்கோத்து - நகத்திற் கோத்துக்கொண்டு. துணி - ஒளி. தணி - குளிர்ந்த.

ககூ. நாப்பண் - நடுவிலே. ஏய்க்கும் - நிகர்க்கும்.

உ0. வரம் - மேன்மையாக. தடித்து - மின்னலானது. மா - திருமகள். உடுக்கள் - நக்ஷத்திரங்கள்.

உக. விலங்கல் - மலை. முடங்கல் - மூங்கில். அம்தேத்து இருல் - அழகிய தேன்கூடு. கடம் - மதநீர்.

உஉ. கொடிஞ்சி - மேல்மொட்டினை யுடைய. வயவர் - காலாட்கள். தீசொல் - இனியவார்த்தைகள். மண் - பூமிதேவி.

உஙூ. நவிலல் - பழகுதல்.

பரிநிரை செண்டு போகும் பைம்பொன்வார் மறுகு நீள்கைக்
கரிநிரை கடம்பெய் தேகுங் காமரு மறுகுஞ் செம்பொன்
விரிமணி யுருளைத் திண்டேர் விரைந்துசென் மறுகும் வீரர்
அரியின மஞ்ச வாளாட் டாடிடு மறுகும் பல்ல. (உச)

கழிந்தகா முகர்த நெஞ்சங் கனிந்தசீ ரணங்க ளோர்பால்
எழுந்துசெல் கதியுந் தோற்பத் துனைவினி னேகும் பாய்மா
வழிந்திடு நீர்மை முட்ட வர்வுவ விண்ணும் வாயும்
அழுந்துறச் செல்வ மென்ன வறிதரத் தெருட்டல் போன்ற. (உரு)

விற்றவழ் சூழி யானை மிகப்பொழி தானம் பாய்ந்து
முற்றவும் வழுக்க லுற்ற வீதியின் முனியு மூடற்
பொற்றொடி யவரெ றிந்த மணிக்கலன் பொலித லாலே
உற்றகால் வழுக்கி வீழ்த லொழிந்தனர் நடப்பார் யாரும். (உசா)

கோன்னுனை மருப்பி யானைக் குழாம்பொழி தானம் வாவுந்
துன்னுளைப் பரிவி லாழி துலங்குமந் நகர நின்றும்
பன்னுமண் ணுலக மெங்கும் பரத்தலால் வழுக்கு மென்று
நன்னிலங் கால்தோ யாம னடக்கின்றார் துறக்க வாணர். (உஎ)

நயக்குமா தர்கடங் கூந்தற் கிடுநறும் புகைவிண் மாதர்
வயக்குமெய் சூழ்த லேக்கார் மணமவர்க் கியற்கை யென்பர்
இயற்கையைச் செயற்கை யாகச் செயற்கையை யியற்கை யாக
மயக்குமற் றவரைக் கேட்கி னிலக்கணை வகையா மென்பர். (உஅ)

மங்கலப் பொலிவு மிக்க மாடமா ளிகையும் வாசத்
தொங்கலங் கூந்த னல்லார் தொகுதியும் விருந்தை யூட்டும்
பொங்கிய களிப்பு மீகைப் புகழ்ச்சியு நல்லோர் வாழ்த்தும்
பங்கமின் மக்கட் பேறும் பண்புமிக் கஃதம் மூதூர். (உகூ)

உச. செண்டு - குதிரை நடையின்பேதம்; இதனை வையாளி என்பர். அரி இனம் - பகைவர்கூட்டம்.

உரு. கழிந்த - விட்டுப்பிரிந்த. துனைவினின் ஏகும் பாய்மா - விரைவாகச் செல்லுகிற குதிரைகள். மைமுட்ட - மேகத்தை முட்டும்படி. வாவுவ - தாவிச்செல்லுவனவற்றை.

உசா. சூழியானை - முகபடாமணிந்த யானைகள். தானம் - மதநீர்.

உஎ. கொல்நுனை - (பகைவரைக்) கொல்லுகிற முனையுள்ள. உளை - நெருங்கிய பிடர்மயிர். விலாழி - வாயுமிழ்நீர்.

உஅ. மயக்கும் அவரை - புலவர்களை.

உகூ. தொங்கல் - பூமாலை. நல்லார் - மாதர்கள்.

பணைபுகை மிகுதி யாலே படர்தழன் மிகுதி தானித்
துணையதென் றுணர்வார் போலச் சொற்றவிச் சிறப்பி னாலே
மணமலி புகழ்க்கு சேலன் மனைச்சிறப் பினையு மோர்தி
அணவுறு மஃதெற் றென்று வினவற்க வரச ரேறே. (௩௦)

ஊர்ப்புற மரசர் முன்னோ ருடங்குற விறுத்த வேதச்
சீர்ப்புகழ்க் குசேல னென்பான் சேய்மையே நகர நோக்கித்
தார்ப்பொலி மார்பக் கண்ணன் றன்னருள் வலியா லின்னும்
பார்ப்பன பலவுண் டென்னாப் படர்ந்தன னாகிச் சென்று. (௩௧)

பெருமதில் வாயி லெய்தப் பிறங்குமந் நகரத் துள்ளார்
அருமைசால் களிப்புப் பொங்க வமைந்தகை யுறைக ளோடுந்
திருமலி மங்க லங்கள் சிறப்புற வேந்திக் காரும்
வெருவுபல் லியமி யம்ப விரைந்தெதிர் கொள்ள வந்தார். (௩௨)

வாழ்ந்தனம் வாழ்ந்தே மென்னா மலர்முகங் கொடுமண் டோயத்
தாழ்ந்தனர் தேர்மேல் வந்த சாந்தனை யந்த காரம்
போழ்ந்தொளிர் சிவிகை யேற்றிப் பொலங்குடை நீழல் செய்ய
வாழ்ந்தவன் புடைய ராகி யமைதரக் கொண்டு செல்வார். (௩௩)

பல்லிய மியம்பச் சில்லோர் பைம்பொற்காற் கவரி வீசச்
சில்லியந் தடந்தேர் முற்பல் சேனையு மிடைந்து சூழ
நல்லியன் மங்க லங்க ளேன்மறை யவர்கள் பாட
அல்லியங் கமலக் கண்ணற் கன்புளான் வீதி சார்ந்தான். (௩௪)

இருபுறத் துள்ள மாடத் திலங்குசா ளரங்க டோறும்
மருவுற வதனம் வைத்து மங்கைமார் மகிழ்ந்து நோக்கிப்
பொருவிலிம் மறையோன் செய்த புண்ணிய மெற்றோ விந்த
இருமைசால் சிறப்பை யுற்றா னென்றுபற் பலசொல் வாரால். (௩௫)

௩௦. பணை - அதிகரித்த. அணவுறும் - பொருந்திய.

௩௨. கையுறை - காணிக்கை. மங்கலங்கள் என்பது அட்டமங்கலங்களை:— அவையாவன: சாமரம், நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல் என்பன. அன்றி, கண்ணாடி, விடை, தீபம், ஸ்ரீவத்ஸம் (பெண் குழந்தை இடையில் வைத்திருப்பதா யமைக்கும் பெண் வடிவம்), சாமரம், வலம்புரிச்சங்கு சுவஸ்திகம் (மண்டப வடிவம் அல்லது மேழிவடிவம்), பூர்ண கும்பம் என்பனவாம். இங்ஙனம் இருவகைப்பட்டிருப்பதைத் திருவிளையாடல் திருமணப்படலம் ௬௭ - ௧௭௩ - வது செய்யுள்களானும், கந்தபுராணம் திருக்கலியாணப் படலம் ௩௪ - வது செய்யுள்களானு மறிக.

௩௪. சில்லி - தேருருள். அல்லி - அகவிதழ்.

௩௫. மருவுற - பொருந்த.

கிள்ளுபு பற்று தற்குங் கெழுமுறு தசையி லாமெய்
யெள்ளுபு கழிக்குங் கீற லிளைபழங் கந்தை யென்றுங்
கொள்ளுபு திரிவோ னம்மா குனிசிலை மார னொப்புந்
தள்ளுபு பழிக்கு மெய்யன் சார்ந்தனன் பாரீ ரென்பார். (௩௬)

கந்தமூ லம்பு சித்துங் கான்முத லிடம்வ திந்தும்
பந்தம தொழித்துஞ் சாலப் பண்ணுவர் தவம்பல் லோர்கள்
தந்துகே ளொசிம ருங்குற் றுமவார் கருங்கு ழாலே
இந்தமா மறையோன் றன்பே றியாவரே பெற்றா ரென்பார். (௩௭)

அருமைசா லறம்வி ருத்தி யாகுக வென்று மென்று
பெருமறை முழங்கு மன்றே பேரறம் பற்ப ளூனும்
ஒருமையன் பினிலு ளுற்றி வந்தன னதன்வி ருத்தி
இருமையிச் செல்வங் கண்டீ ரின்னுமென் பெறுமோ வென்பார். (௩௮)

ஏவரெவ் வுயிரி டத்து மிலங்கருள் செலுத்தி நிற்போர்
தேவரி லுயர்ந்தோ ரன்னோ ரெனமறை செப்பு மாற்றான்
மூவரும் புகழ்க்கு சேலன் மூதரு ளுடைமைக் கிந்தப்
பூவரு முயர்வோ வின்னும் பொலிவுமே லுண்டா மென்பார். (௩௯)

மனமொழி காய மென்ன வகுத்திடு கரண மூன்றுங்
கனம்விளர்ப் பெனக்க றுத்த கண்ணன்ற னடிக்கே யாக்கித்
தினமுநன் னெறியி னிற்குஞ் செயிரிலாச் சீர்த்தி யானிப்
பனவனுக் கிதுவோ செல்வம் பகரி தினுமுண் டென்பார். (௪0)

புயனிகர் வண்ணத் தண்ணல் பொருவிலம் போரு கக்க
ணயனுறச் செல்லு மாறே நற்றிரு மகளுஞ் செல்வாள்
பயனுறிப் பனவன் மேலப் பார்வைமிக் காயிற் றந்தச்
செயலினுக் கேற்கு மாறத் திருவும்வந் துற்றா ளென்பார். (௪௧)

பைத்தகா னகம்வ திந்தும் பருப்பதக் குகைவ திந்தும்
எத்துணை நற்ற வங்க ளியற்றிநன் குயர்ந்தா ரேனுந்
தத்துநீ ருடைமண் ணுளுந் தன்மைவந் துற்ற தாகின்
மெத்திய மனத்த ராகி விரும்பிடார் யாவ ரென்பார். (௪௨)

குமைத்தபற் றிகந்தா ரேனுங் கடவுளாற் கொடுக்கப் பட்ட
தமைத்திடு நன்றே யாக வல்லது தீங்கே யாக
இமைத்திடு மளவே யாக வெக்காலு மாக வின்றேன்
சமைத்தமென் மொழியீர் சற்றுந் தள்ளுவா ருளரோ வென்பார். ()

கரிசறு மனைவி பல்கால் வேண்டிடக் கண்ணன் பாற்சென்
றுரியவன் போடுந் தன்னா லுதவிய தளித்துக் கண்டு
வரிசைகண் மிதப்பப் பெற்று வளர்பெறுந் திருவும் பெற்றிப்
பரிசுவந் தனனம் போல்வார் பாக்கிய மனையா னென்பார். (௪௪)

சான்றவர் திருவுற் ருலுந் தகுதியின் மிடியுற் ருலும்
ஆன்றதந் நீர்மை குன்ரு ரடல்வலிச் சனக னென்பான்
என்றசெந் தண்மை வெம்மை யிடச்சமங் கொண்டாற் போலத்
தோன்றுவர் மயக்கம் பூணுர் துடியிடை. மடைவீ ரென்பார். (சரு)

பற்றறத் துறந்தோ னுக்கிப் படர்பெருந் திருவு மற்றை
முற்றிழை யவர்மு யக்கு நன்றுகொ லென்பார் முன்னர்
நற்றவச் சிவன னென்பா னயந்தரு மிளமை வாய்த்துப்
பொற்றொடிப் போகம் பன்னுட் புரிந்திருந் திலனோ வென்பார். (சசு)

வேறு

என்றுரைத்த சுகமுனிவ னிணையடித்தா மரைவணங்கித்
துன்றலர்த்தார் துயல்வருதிண் டோள்வேந்தன் சிவனனெனும்
இன்றவத்தன் யாரிளமை யெங்ஙனடைந் தான்மடவாள்
மன்றலுற்ற தெவ்வாறு வகுத்துரைத்தி யெனவுரைப்பான். (சஎ)

பேருலகு கொண்டாடும் பிருகுவெனும் பெருந்தவத்தோன்
சீருறுநற் றிருமைந்தன் சிவனனெனும் பெயருடையான்
ருருருவப் பூண்மார்பா தயங்கிமய கிரிப்பாலோர்
வாருலவைப் பூங்கானம் வதிந்துதவம் புரிந்தனனே. (சஅ)

பற்பலநா ளிருக்கையெழாப் பரிசிருந்து தவம்புரியும்
பொற்புறுமா தவனுடம்பைப் புற்றுமூ டியததன்மேற்
கற்புமுதற் கொடிபடர்ந்து காமருபல் லரும்பீன்று
சொற்பெறுமா மலர்பரப்பித் துதைந்தனவா லந்நாளில். (சகூ)

ஙையாதிவ் வுலகுயிர்க்க ளூடோறு மருள்சுரப்போன்
பொய்யாதி கடிந்ததவப் புனிதரடி முடிக்கொள்வோன்
மெய்யாதி நற்குணங்கள் விரும்பியடை தரப்பொலிவோன்
சையாதி யெனுநாமந் தரித்தவொரு தார்வேந்தன். (ருo)

---

சகூ. சிவநன் - பிருகுவுக்குப் புலோமை யென்பவளிடத்துப் பிறந்த புத்திரன்.

சஅ. வார் உலவை - நீண்டமரங்களடர்ந்த.

சகூ. துதைந்தன - நெருங்கியிருந்தன.

ருo. சையாதி-வைவஸ்வதவமனுவின் புத்திரருள் ஒருவன். இவன் இக்ஷ்வாகுவுக்குத் தம்பி. இவனுக்கு உத்தாநபர்ஹி, ஆநர்த்தன், பூரிஷேநன் என்னும் மூன்று புதல்வரும், ஸுகந்யையென்னும் ஒரு புதல்வியும் உண்டு.

அன்னவன்றன் மகள்வானத் தணங்கினர்க்கு மணங்கனையாள்
கொன்னவில்வேல் விழியினுள் கோதறுதே மொழியினுள்
துன்னுநறுங் குழலினுள் சுகன்னியெனும் பெயருடையாள்
மன்னுசில தியரோடும்பூக் கொய்வானவ் வனம்வந்தாள். (ருக)

பாங்கியர்க டற்சூழப் பாங்கெங்குந் தவமலர்ந்த
பூங்கொம்பர் போனடந்து பொலிவிரைப்பன் மலர்கொய்வாள்
தேங்குறவெள் ளெனப்பூத்துத் திகழ்முல்லை சூழப்பட்
டாங்குயர்வன் மீகங்கண் டார்வத்தின் வந்தடுத்தாள். (ருஉ)

மாதர்நறுங் கொடிபடர்வன் மீகத்துள் ளிருப்பதுதான்
யாததனை யறிவாமென் றில்லிவழி நோக்குதலுந்
தீதகனற் றவப்பெரியோன் செய்யவிழி தோன்றவிறும்
பூதுடைய ளாகியிது பொன்வண்டோ வெனநினைத்து. (ருங)

ஒருசிறிய திரணமெடுத் துறச்சுலவிச் சூன்றிடலு
மருவுபெருந் தவயோகங் கழிதரவிம் மணிப்புற்றின்
அருகுறவந் தியாரிதுசெய் தாரறிவ லெனப்பார்த்தான்
கருநறுமென் குழலாளைக் கண்ணுற்றான் மாதவனே. (ருச)

தாமரையில் வாழுமொரு தையலோ வயிராணி
மாமகளோ விரதியோ மற்றிவளென் றுள்நினைந்தான்
காமனுமாங் கஃதறிந்து கழைகுழைத்து நாண்பூட்டித்
தேமலர்வா ளிகள்பலவுஞ் சிந்தினன் மேன்மேலும். (ருரு)

பொங்கியெழு பெருங்காமப் புலிங்கத்தீக் கொழுந்தோடி
மங்குதலி லாதழற்ற வாற்றுனய் மாதவத்தோன்
றங்கியபுற் றுச்சிதர்ந்து தரைவீழக் கரநீட்டிக்
கொங்கலர்மென் குழன்மடவாள் கோற்றொடிக்கை பற்றினன். (ருசு)

வெறுக்கொண்டு பதைபதைத்து விதிர்த்துதறிக் கரம்பறித்துக்
குருக்கொண்ட சிலம்பலம்பக் கோலவளை யும்புலம்பத்
தருக்கென்று மவிந்தவிடைத் தயங்குமே கலையரற்றப்
பொருக்கென்று பாங்கியர்பாற் போய்விழுந்தாள் பொற்கொடியே. ()

---

ருக. சிலதியர் - தோழிமார்கள்.

ருஉ. தேங்குற - நிறைய. வன்மீகம் - புற்று.

ருங. மாதர் - அழகிய. இல்லி - துளை; துவாரம். இறும்பூது - ஆச்சரியம்.

ருச. திரணம் - துரும்பு. உறசுலவி - அதிகமாகச் சுழற்றி. சூன்றிடலும் - தோண்டுதலும். மாதவன் - பெருந்தவச்சிரேஷ்டனாகிய சிவநன்.

ருரு. கழைகுழைத்து - (கரும்பு) வில்லை வளைத்து.

ருசு. புலிங்கம் - தீப்பொறி. சிதர்ந்து - தகர்ந்து.

ருஎ. குரு - நிறம். மேகலை - இடையிலணியும் ஓராபரணம்.

வாய்புலர்ந்து கண்சாம்பி மயங்கினுள் செயனேக்கிப்
பாயவனத் தென்கண்டோ பயந்தாண்மற் றிவளென்று
தேயுமிடைப் பாங்கியர்கள் சிவிறியால் வீசியுடற்
ருேய்புழுதி துடைத்துமிக வுபசரிப்பத் துயர்தீர்ந்தாள். (ருஅ)

அன்னபொழு தடற்பரியூர்ந் தரசன்சை யாதியென்பான்
பொன்னனைய மனைவியர்நா லாயிரவர் புடைசூழ
மின்னவிரப் பூஞ்சோலை விநோதநிமித் தமதாகத்
துன்னினுன் பரியிழிந்து சூழும்வளம் பார்த்துவப்பான். (ருக)

மன்புற்றி னின்றுவெளி வந்துநின்ருன் றனைக்காணூஉ
வன்புற்றுக் கொண்டாடி யடிபணிந்தா னுருநோக்கி
இன்புற்ற விழியிடைநீர் வாரவிது செய்தவரெவ்
வன்புற்ற மனத்தரென வனமுழுது மாராய்வான். (சூO)

இலகுபெரும் பாங்கியரோ டிருந்தமக டனைக்கண்டான்
அலகிறவ முனிக்கிடுக்க ணூர்செய்தீ ரெனக்கேட்டான்
சிலதியர்யாஞ் செய்திலோ மென்றெழிந்தார் செய்தமகள்
நிலவுறவந் தடிவணங்கி நிகழ்ந்தனவெ லாமுரைப்ப. (சூக)

என்செய்தாய் பேதாயென் றிரங்கிவிரைந் தாங்கெய்தி
மன்செய்த முனிவனடி வணங்கியடி யேன்புதல்வி
புன்செய்கை தனைப்பொறுக்க வேண்டுமெனப் புகன்றிரப்ப
நன்செய்கை யுன்செய்கை யென்றுநவில் வான்முனிவன். (சூஉ)

இப்பொழுதே யுன்மகளை யெழின்மன்றன் முடித்தெனக்குத்
தப்பறநீ தருவாயேற் பொறுத்திடுவன் ருராயேல்
வெப்புறுமென் சாபத்தால் வீடிடுநின் குலமென்ருன்
ஒப்பில்புகழ் மன்னவனு முடன்பட்டான் மகட்கொடைக்கு. (சூங)

அணிமுடங்க றிசைதிசையுய்த் தியாவரையும் வரவழைத்துத்
தணிவின்மகிழ் தலைசிறப்பத் தமன்முன்னர் விதிப்படியே
கணிதமில்வண் புகழ்மன்னன் கலியாண வினைமுடித்து
மணிநகைவாய்ப் பசுங்கொடியை மாதவன்கைக் கொடுத்தனனே. (சூச)

சீலமிகு சிவனனெனுந் திருமுனிவன் சுகனியெனுங்
கோலமட வரற்கூடிக் கொடுந்துயர்நீத் துளங்களித்தான்
ஏலநறுங் குழன்மாது மிருங்கற்பிற் சிறந்தனளாய்ச்
சாலவுமெய்ப் பணியெவையுந் தலைக்கொண்டு வாழ்ந்திடுநாள். (சூரு)

ருஅ. புலர்ந்து - உலர்ந்து. சாம்பி - செருகி. சிவிறி - விசிறி.

சூச. முடங்கல் - மணவோலைச்சுருள்.

ஆன்றசிறப் பவ்வனத்தி லசுவினிதே வர்களொருநாட்
டோன்றினர்க ளெதிர்நிற்குஞ் சுகனிதிரு வுருக்கண்டு
மான்றவுளத் தினராகி மாரவேள் கணைக்கிலக்கா
ஊன்றுபெருங் காமத்தி னுள்ளுடைந்து மொழிவாரால். (சுசு)

கற்பகத்தின் பூங்கொம்பே காமருபூம் பசுங்கொடியே
பொற்பவிரு மதிக்கொழுந்தே பொலியிரதச் செங்கரும்பே
சொற்பெறுநிற் பெறுதந்தை யாவன்மணித் தூமுறுவல்
விற்புருவப் பைங்கிளிநின் பெயர்யாது விளம்புகையால். (சுஎ)

அமரருடற் பிணிதவிர்க்கு மசுவினிதே வர்கள்யாங்கள்
சமரமிகு வேளாற்ற றவிர்த்தெமையா ளென்றிரப்பத்
தமரமிகு கருங்கழற்காற் றரியலர்கூற் றெனப்பொலிவேற்
பமரமிகு தார்ப்பெருமான் பாராள்சை யாதிமகள். (சுஅ)

என்பெயர்யா தெனிற்சுகனி யிருந்தவத்து மேலாயும்
மன்பெறுமா முனிசிவனர் மனைக்கிழத்தி யாதலினாற்
கொன்பெறுநும் முளத்தெண்ணங் கூடாதிவ் வாறுநினைந்
தென்பெறவல் லீர்போமென் றெடுத்தெறிந்து பேசினளால். (சுகூ)

புறவடிநோக் குபுமொழிந்த பொன்னனையாள் சொற்கேளா
இறவுளதன் மையராகி யெழிற்பொலிவு மிகவாய்த்த
அறவடிவத் தெம்போகம் போலநரை திரையமைந்த
துறவிதரும் போகமோ சுகன்னிக்குத் தக்கதே. (எ0)

மலர்பொதுளித் தீர்த்தத்துன் மகிழ்நனும்யா மும்படியிற்
குலவுவனப் புறவாய்த்துக் குலையாத விளமையொடு
நிலவுவமவ் வுருமூன்றி னினக்கினைந்த சீருருவைத்
திலகநுதன் மடமாதே சேர்ந்துதழு விக்கோடி. (எக)

---

சுசு. அசுவினிதேவர்கள் - சூரியனுடைய மகளாகி வடவையுருவத்தை யுடைய ஸம்ஞா தேவியின் நாசி வழியாகப் பிறந்த இரட்டையர்; (வடவை - பெண் குதிரை) இவர்கள் தேவவைத்தியர்களென்றும் அதிக அழகுள்ளவர்களென்றும் கூறப்படும்.

சுஎ. தூமுறுவல் - வெள்ளிய பற்கள்.

சுஅ. தமரம் . சத்தம். பமரம் - வண்டுகள்.

எ0. இறவு உள்ளதன்மையர் ஆகி - மரணகாலத்து உள்ள துன்பத்தை யுடையவராகி.

எக. மலர்பொதுள் - மலர்கள் நெருங்கின. மகிழ்நன் - கணவன். குலையாத - அழியாத.

என்றுரைத்த வார்த்தைதனக் கிலவவாய் நெகிழாளாய்ச்
சென்றுமகிழ் நனுக்குரைப்பத் திரைநரைமூப் பிணையாலே
துன்றியெழு வருத்தமிறத் தொலையாத விளமைபெறல்
நன்றியலுங் காரியமென் றுளத்தோர்ந்தா னற்றவனும். (௭௨)

மங்கைதிரு முகநோக்கி மற்றவர்சொற் குடம்படெனப்
பங்கமறு தவன்மனையை முன்போக்கிப் பின்படர்ந்தான்
அங்கவரு மகிழ்ந்துமுனி வரனொடுமத் தடம்படிந்து
பொங்குமிள மையும்வனப்பும் பொலிவுற்றார் வெளிவந்தார். (௭௩)

செங்கதிரோ னுதயமெனத் திகழ்மூவ ருருநோக்கி
மங்கையர்சூ ளாமணிதான் வடுவுறு தொழிதரவென்
பொங்கியல்கற் பினுக்கென்னுப் பொருக்கெனத்தன் மகிழ்நனுரங்
கொங்கைஞெமுங் குறத்தழுவிக் கொண்டுமகிழ் கூர்ந்தனளே. (௭௪)

மாதவனுங் களிகூர்ந்து மனஞ்சமழ்ப்ப முகஞ்சாம்பிப்
போதவஞர்க் கடலழுந்தும் புலவரிரு வரைநோக்கி
மேதகையீர் மூப்பகன்று விரும்பிளமை பெறப்புரிந்த
ஏதமினல் லுதவியைநா னென்றுமற வேனென்றான். (௭௫)

அருள்செய்மக மொன்றியற்றி யவிப்பாகம் பகிர்ந்தளித்துப்
பொருள்செயவர் மனமகிழப் பொலிவித்துப் போக்கியபின்
றெருள்செயுள முனிவேந்தன் சீர்வேந்தன் பயந்தவிருண்
மருள்செய்குழ லொடுகூடி வாழ்ந்திருந்தா னதுநிற்க. (௭௬)

மாதர்பல ரிவ்வாறு வகுத்துரைப்ப மணிச்சிவிகை
மீதுபுரந் தரனுலவும் விழவுமிகச் சமழ்ப்படைய
ஆதரவிற் பல்லோரு மகமகிழ்ச்சி யுறச்சென்று
தாதவிழ்தா மரைமார்பன் றன்மனைவா யிலையடைந்தான். (௭௭)

வேறு

வாயிலை யடைந்த மறைக்குலத் தலைவன் மாமணி யானநின் றிழிந்து
மேயதன் முன்னர்க் கந்தைபோற் றுவார மிக்கச்சிற் றிலைக்குடி றிரிந்து
தூயசெம் பொன்னா லமைத்திடப் பட்ட சுடர்ப்பெரு மாளிகை யாகிப்
பாயபல் வளனு நிறைதரப் பொலியும் பண்பினை நோக்கின னின்றான்.

---

௭௨. இலவம் - முருக்கம்பூ—உவமைத்தொகை. இற - நீங்க.

௭௪. ஞெமுங்குற - அழுந்தும்படி.

௭௫. சமழ்ப்ப - நாண. அஞர் - துக்கம். அசுவினிதேவரைப் புலவரென்றது தேவவருக்கம் ௩௩-ல் கலந்தவராதலாலென்க.

௭௬. மருள்செய்குழல்—அன்மொழித்தொகை.

௭௭. புரந்தரன் - இந்திரன்.

மனைக்குரி மரபிற் றனக்கிணை யில்லா மடநடைக் கற்புடையாட்டி, கனைக்குமொண் முகிலைக் கிழித்தெழு செங்கேழ்க் கதிரெனக் கவின்குடி யிருந்த, நனைக்குழ லணிசெம் மணித்தகட் டணியு நாடுமிந் திரவிலம் மங்கு, றனைக்குழ முற்றுச் சூழ்ந்தெனப் பலவீத் தண்ணறுந் தொடையலும் பொலிய. (எகூ)

அம்முகி னின்று வழுக்கியோர் மின்ன லவிர்பிறை மேற்கிடந் தாங்குத், தெம்முனை மழுங்க வளையும்விற் புருவச் செம்பொன்செய் பட்டமுங் கதிர்கள், விம்முமப் பிறையி னுரோகணி யுள்வாய் வீற்றிருந் தெனவியன் கற்றை, டம்முமொள் வயிரப் பொட்டுமேற் றணிந்த பல்கதிர்ப் பணிகளும் விளங்க. (அ0)

இலவித ழுளவாய்க் கற்பின தரும்பை யிணைத்தென வாயகத் திணைந்து, நிலவுபல் லழகைக் காணநிற் பதுபோ னிற்குமுக் கணிப்பரு முத்து, மலரிதழ்ச் செந்தா மரைகொலிம் முகமென் றறிதரக் கதிரிரண் டிருபாற், குலவவுற் றிருந்தா லெனச்செவி யணிந்த குருமணி யோலையும் பொலிய. (அக)

வலம்புரிக் கழுத்தைக் கண்டமென் றடுத்த மாதருஞ் சொலாவகை மறைத்த, நலம்புரி பதக்கங் கோத்தபன் மணிச்சின் னல்லணிகளுமெழில் வாய்த்த, பொலங்கெழு குவட்டிற் பன்னிற வருவி பொலிந்தெனக் கொங்கைமேற் றதும்பு, மிலங்குவெண் டாளம் பவளமா ணிக்க மெரிபொன்மா லையுநனி யொளிர. (அஉ)

தோளடி நிலையி லரதநத் தொடியுஞ் சுடர்தரு முன்கைவெள் வளையும் வாளவிர் வயிர கடகமுஞ் செம்பொ னிடைக்கிடை வைத்தசெந் துப்பு நீள்சுடர்த் தொடரு மமைந்தசூ டகமு நிரைவிர லுருமெழு கதிரை யாள்சுடர் மணிவைத் திழைத்தவா ழிகளு மந்தகா ரங்குடி யோட்ட.

பெருவிலைச் செம்பட் டுடுத்திய விடையிற் கவ்விய வொட்டியாணமும்பே, ருருவவெண் கோவைக் காஞ்சியுஞ் செங்கே ழுமிழெழு கோவைமே கலையும், பொருவறு மீரெட் டிரட்டிய கோவை புரிகலாபமும்விரி சிகையு, மருவுசெம் பரிதி மின்மினியாக வழங்கொளி திசையெலாம் போர்ப்ப. (அச)

---

எகூ. செங்கேழ் - செந்நிறம். தகட்டணி - சடையில்லை. வீ - மலர்.

அங. அரதநம் - இரத்தினம். செந்துப்பு - சிவந்த பவளம். சூடகம் - கைவளை.

காலணி செம்பொற் சதங்கையந் தொடருங் கதிர்மணித் தண்டையுஞ் சிலம்புஞ், சாலவு மொளிர்ந்து கலின்கலி னென்னத் தழைந்த பூங் கற்பகக் கொம்ப, ராலென நடந்து மங்கல மேந்தி யளவறு பாங்கிய ராய, கோலமா மடவார் சூழ்ந்தனர் நடப்பக் கொழுநனை யெதிர்கொள்வான் வந்தாள். (அரு)

வந்தனை புரிந்து பைம்பொனு தனத்தின் மகிழ்நனை நிறுத்தியுண் மகிழ்ந்து, சந்தமென் மடவார் செம்மணிச் சிரகத் தண்புனல் வாக்கிடத் தன்பொற், செந்தளிர்க் கரத்தாற் றிருவடி விளக்கிச் சிறந்த வெண் பட்டினு லொற்றிக், கந்தநல் வருக்கம் பூசிமென் மலராற் கட்டிய மாலையுஞ் சாத்தி. (அசு)

விரைகெழு தூமந் தவழ்தரக் காட்டி மிளிர்தரு விளக்கமுங் காட்டிக், கரையில்பன் மணிநீ ராஞ்சனம் வளைத்துக் கடிதிரு பாலினு மெறிந்து, புரையில்கற் புடையாள் வணங்கின ணிற்பப் புயலெனப் பல்லியங் குளிற, வரையெனப் பணைத்துக் கதிரொளி மழுக்கு மாளிகைக் கெழுந்தரு ளினனே. (அஎ)

இரசிதக் குவையுங் காஞ்சனக் குவையு மிலகுறு செம்மணிக் குவையுந் தாளவெண் குவையும் வச்சிரக் குவையுஞ் சாற்றரு மரகதக் குவையும் பரவிய கிரணச் செந்துகிர்க் குவையும் பாயமே தகப்பெருங் குவையும் அரதந வகையின் மற்றுள குவையு மறைதொறுங் கிடப்பனகண்டான்.

பொற்கலப் பேழை மணிக்கலப் பேழை புரையில்வெண் பொற்கலப் பேழை, விற்படு விசேடக் கலனிறை பேழை மேவிய விருபத் தேழ் மகாரும், அற்புற வணியத் தனித்தனி வகுத்த வணிகலப் பேழைபன் னிறத்த, சொற்பெறு விலைப்பட் டடுக்கிய பேழை தொகையிலா திருப்பன கண்டான். (அகூ)

குருமலர் செம்பொற் கலமெதிர் வைத்துக் கோதறு வெள்ளிய மூரல் பருகுதற் கமைந்த வின்சுவைக் குழம்புப் பால்விரா யுபசரித்தூட்டத் திருகுபு வேண்டா வென்மரு மதனைத் திருமிப்பா ராதுசெல் குநரும் அருகிய பசியு மில்லையென் மருமா யணிமகார் செருக்குதல் கண்டான்.

---

அஎ. குளிற - முழங்க. பணைத்து - பெருத்து.

அஅ. இரசிதம் - வெள்ளி. காஞ்சநம் - சுவர்ணம். தாளம் - முத்து. வச்சிரம் - வயிரம். துகிர் - பவளம். மேதகம் - கோமேதகம். அரதந வகையில் - நவரத்தினங்களில்.

அகூ. பேழை-பெட்டி. புரைஇல்-குற்றமில்லாத. வெண்பொன்-வெள்ளி.

கூ0. குருமலர் - ஒளிவிரிந்த. வெள்ளியமூரல் - வெண்சோறு. கலம் - உண்கலம். குழம்பு பால்விராய் - குழம்பாகிய பால்சேர்த்து. திருகுபுவேண்டா என்மரும் - கையைத் திருகிக்கொண்டு வேண்டாமென்று சொல்வோரும். அருகிய - சொற்பமாகிய. அணிமகார் - அழகியமக்கள்.

வயிரவொண் சுட்டி நுதன்மிசைப் பொலிய மார்பிடை யைம் படை விளங்கக், கயில்செறி தொடருங் கடகமுங் கரத்திற் காதிலம் பொற்குழை தயங்கச், செயிரறு பொன்னு ணரைமிசைக் கதிர்ப்பச் சிறுசிலம் படிகளிற் கவினப், பயிறரு மைந்தர் கலகல கலெனப் பண் பினின் றுடுதல் கண்டான். (கூக)

தளவரும் பணைய கரிசில்வா லரியுந் தயங்குசெம் பொன்னிறப் பருப்பும், வளமிகு குறையாக் கறிகளுங் குறைத்த மாண்கறிக் குப் பையு மற்றைக், கிளர்தரு முபக ரணங்களு முலோக மேழினுங் கெழுமுறச் செய்த, பளகறு கலங்கள் பல்லவு மடுமிற் பரப்பெலாம் பொலிவன கண்டான். (கூஉ)

வேறு

கரையில் பல்வளஞ் சென்றுலாய் நோக்குமக் காலைப்
புரையில் கற்புடை மனைவியார் விரையமுன் போந்து
விரைந றுஞ்செழுந் தயிலக்காப் பிடுபெனுள் விரும்ப
உரைசி றந்திடு நானஞ்செய் தருளுமென் றுரைப்ப. (கூங)

அங்கொ ராதன மிட்டன ளொருத்திவந் ததன்மேற்
றுங்க மாமறைத் தலைமையோ னிருந்தனன் றுணிந்தோர்
மங்கை பொன்செய்த வள்ளத்துத் தைலமுன் வைத்தாள்
செங்கை பற்றியோர் நங்கைபொன் சிவிறியை வீச. (கூச)

---

கூக. நுதல் - நெற்றி. ஐம்படை - காவற்பொருட்டு அணியும் திருமாலின் பஞ்சாயுதங்கள். அவையாவன.—சங்க சக்ர கதா கட்க கோதண்டங்கள். கயில் - ஆபரணக் கடைப்புணர்வு. அரைமிசை - இடையில். செயிர்அறு - களங்கமற்ற. கதிர்ப்ப - ஒளிவீச. கவின - அழகுசெய்ய. பயில்தரும் - நெருங்கின.

கூஉ. தளவு - முல்லை. கரிசுஇல் - குற்றமில்லாத. வால்அரியும் - வெள் ளிய அரிசியும். குறைத்த - திருத்திய. மாண்கறிகுப்பையும் - சிறந்த மற்ற கறிக்குவியலும். கெழுமுற - பொருந்த. பளகு அறு கலங்கள் - குற்றமற்ற பாத்திரங்கள். அடும் இல் பரப்பு - சமையல்வீட்டுப் பரப்பு.

கூங. தைலக்காப்பு இடுபு என் உள்விரும்ப - எண்ணெய்க்காப்பிட்டுக் கொண்டு என் மனங்களிக்க.

கூச. மாமறை தலைமையோன் . குசேலன். துணிந்து - விரைந்து. பொன் செய் வள்ளத்து - பொன்னால் செய்யப்பட்ட கிண்ணத்தில்.

மாந்த ளிர்க்கரத் தந்நறுந் தயிலத்தை வாக்கிப்
பூந்த டங்கணோர் மடக்கொடி சென்னியிற் பூசி
வாய்ந்த வங்கத்து மப்பினள் வயங்குபா சனங்கள்
ஆய்ந்த நீர்நிறை யாடிடம் புகுந்தன னம்மா. (௯௫)

ஆங்கு மாதர்கள் குழுமிநெய் யகற்றிவெப் படுநீர்
பாங்கின் வாக்கிட மூழ்கிமெய் யீரமும் பாற்றி
ஓங்கு வேறுடை யுடீஇநிய திக்கட னுவகை
தேங்கு மாமுடித் தனன்புகுந் தனனூணுந் தேஎத்து. (௯௬)

இந்தி ரன்றிசை நோக்கின னுவந் திருந்தான்
நந்த ரம்பையம் பேரிரு பாசிலை நயக்க
முந்த ரிந்தவாய் வலம்பட முன்புபோ கட்டார்
சிந்தை யன்பொடு கரகநீர் புரோக்கித்துத் திருத்தி. (௯௭)

நிலவு மெய்ப்பணி மாதரா ரெடுத்துக்கை நீட்டக்
கலவ மாமயிற் சாயலங் கற்புடை மனையாள்
குலவு தன்கையாற் குய்கமழ் கருனைநல் வறையல்
பலவு மின்புளி விரவிடாப் பாயதீங் கறியும். (௯௮)

அறையை நேர்ததி யையவி யளாவிய கறியும்
முறையின் முற்றவே வாதடு முதிர்சுவைக் கறியுங்
குறைவில் புன்னிலப் பயறொடு கூட்டிய கறியும்
நிறையு நெய்ப்பசை யறுநிக ரறுபுளிங் கறியும். (௯௯)

கதிக்கு மற்றைய கறிகளு மூறிய காயும்
உதிக்கு நோலையு மடையுமற் றுள்ளசிற் றுணவும்
விதிக்குஞ் சித்திர வனங்களு மேவுபா ளிதமும்
பதிக்கு மன்பொடு பேரிலை புதைபடப் படைத்து. (௧௦௦)

---

௯௫. பாசனம் - பாத்திரம். மாந்தளிர்க்கரம்—உவமைத்தொகை. மடக்கொடி—உவமையாகுபெயர். அம்மா—அசை.

௯௬. பாங்கின்வாக்கிட - இதமாக வார்க்க. பாற்றி - போக்கி. தேஎத்து - தேயத்து என்பதன்மரூஉ; தேயம் - இடம்.

௯௭. இந்திரன்திசை - கிழக்கு. நந்து - செழித்த. இருபாசிலை - பெரிய பசிய இலையை. இலையரிந்த வாய் வலப்பக்கத்திலிருக்கும்படி போடவேண்டுமென்பார் "அரிந்தவாய் வலம்பட முன்புபோ கட்டார்" என்றார்.

௯௮. பணிமாதர் - பரிசாரகப் பெண்கள். கலவம் - கலாபத்தையுடைய. குய்கமழ் கருனை - தாளிப்பு மணக்கின்ற பொரிக்கறி.

௯௯. அறையை நேர் ததி - கற்பாறையை ஒத்த தயிர். ஐயவி - கடுகு. முற்றவேவாது அடு முதிர்சுவை கறியும்.

௧௦௦. நோலை - ஒருவிதச் சிற்றுண்டி. பாளிதம் - பாற்சோறு.

முல்லை வீயினை நிகர்தரு மூரலும் படைத்து
வல்ல பொன்னிறப் பருப்படு திரளையும் வைத்து
நல்ல வானநெய்க் குடங்கவிழ்த் திவ்வகை நயப்ப
எல்லை யின்மறை யவர்க்குமைந் தருக்கும்பாங் கியற்றி. (௧௦௧)

உவந்து முன்னர்நின் றுண்கமா வென்றுப சரிப்பத்
தவந்த ழைத்தமா மறையவன் றகுவன வுண்ணு
இவர்ந்த வாசையின் விலாப்புடை வீங்கவுண் டெழுந்த
நிவந்த வேதியர் குழாத்தொடு மெழுந்தவ ணீந்தி. (௧௦௨)

வளங்கொ ணீரில்வாய் பூசின னிபதியின் வகையுங்
களங்க மின்மறை யவரொடு மியற்றினன் கந்தந்
தளங்கொள் பூந்தொடை விரைகெழு பாகடை தாங்கி
விளங்கு மன்னர்முன் யாவர்க்கு மிவ்வகை விரும்பி. (௧௦௩)

விருந்து செய்தனன் சாந்தம்பூம் பாகுவெள் ளிலையுந்
திருந்த நல்கின னவரவ ரிடம்புகச் செலுத்திப்
பொருந்து மிவ்வகைப் போகத்திற் சிற்சினுள் போகக்
கருந்து ழாய்கமழ் சேவடி கமழ்தரு முளத்தான். (௧௦௪)

ஒருதி னத்தினி லுவளக வரைப்பினை யுற்றுக்
கருது மக்களு மனைவியு முறுவகை கழிப்பி
இருக வாடத்தை நூக்குபு தாழக்கோ லிறுக்கி
மருவொ ருத்தனு யிருந்தன னின்னன வலிப்பான். (௧௦௫)

வேறு

இம்மை தனின்மற் றிரும்பொருளை யீட்டல் காத்த லிழத்தலென
வெம்மை புரிமூ வகைத்துயரும் விளையா நிற்கும் பாவத்தால்
அம்மை நிரையத் துயருமுறு மந்தோ சீசீ யிப்பொருளைச்
செம்மை யுடையோர் வேண்டுமெனச் சிந்தித் திடுவரோ மறந்தும். ()

ஊழின் வலியாற் பெருஞ்செல்வ முறினுங் கால முண்டாக
வாழுங் கருத்த ராய்த்துணிவுற் றடங்கத் துறப்ப ரறிவுடையோர்
தாழு மனர்போ லொழிதலன்றித் தருமிம் மையிற்க ரணமூன் றும்
வாழி யிலக்கிற் சிதருமை மருவப் பெறும்பே ரின்பத்தால். (௧௦௭)

௧௦௧. முல்லை வீயினை - முல்லை அரும்பை. மூரல் - அன்னம்.

௧௦௨. இவர்ந்த - மிகுந்த. நிவந்த - உயர்ந்த. நீந்தி - நீங்கி.

௧௦௫. உவளகவரைப்பினையுற்று - அந்தப்புரத்தை யடைந்து. கழிப்பி - அனுப்பிவிட்டு. கவாடத்தை - கதவுகளை. நூக்குபு - மூடி. வலிப்பான் - நினைப்பான்.

உடன்முற் பொறிக டமக்குரிய வூறு முதலைம் புலங்களையும்
அடனற் றொழிலப் புலனிமித்த மாகப் படைத்த வினைத்திணையும்
விடன்மிக் கதுவா லெவற்றினுக்கும் விருப்பிற் சிலவுள் ளனவேனும்
படரு மனமற் றவ்வழியே பயக்கு மளவில் பவத்தொடர்ச்சி. (கo௮)

பருவந் திடச்செய் பவத்தொடர்ச்சி பாற்றத் துணிந்த பண்பினர்க்கு
மருவிந் திரிய வுணர்வினொடும் வழங்கும் பிராண வாயுவொடும்
ஒருவில் காம வினைவிளைவி னோடுங் கூடு மனவுடம்பு
முருவ வுடம்பு மிகையானுற் றொடர்ப்பா டின்னு முளவேகொல். ()

தானல் லுடலை யானென்றுந் தன்னோ டுரிமை யல்லாமை
ஈன முறுபல் பொருளனைத்து மென்ன தென்று முறநினைத்து
மான வயர்பற் றினுக்கேது மயக்க மதனை மாய்ப்பவனே
வான வருஞ்செல் லருமுலகம் புகுவா னென்னு மறைநூல்கள். (கக0)

பற்ற லாகா விருவேறு பற்றை யிறுகப் பற்றினரைப்
பற்ற லாகா வெனவனுர்கள் பரிந்து கண்ணோட் டஞ்செயுமே
பற்ற லெல்லா மறத்துறந்த பண்பி னோரே தலைப்படார்
பற்ற லுடையா ரெஞ்ஞான்றுங் காண்பார் நிலையில் பல்லவையும்.

பொருவி றேவு மிருபயனும் பொய்யா தனுகு மறுபிறப்பும்
மருவு முயலின் கோடாமை மயிர்க்கம் பலம்விண் மலரெனுநூல்
ஒருவு மதியற் றுறப்பற்ற லுறுமஞ் ஞானம் விபரீதம்
இருவும் பிறப்பி னெஞ்ஞான்று மதனு லொழிந்த வின்பமே. (ககஉ)

பகருந் தெய்வ மம்மைவினைப் பயனுண் டோவின் றேவென்னும்
புகர்கொண் டிடுசங் கையினீங்கிப் பொலியு ஞான வனுபவத்தால்
நிகரி லுண்மை யறிந்திடுத னீளுந் தொறுமவ் வனுபவமற்
றிகவில் பழைய வுலகவா சார ஞான மிரிந்திடுமே. (ககரு)

முதல்வெம் பவத்துக் கெனுமடமை முற்றுமொழியச் செம்பொருளைச்
சுதமென் பதற நினைத்தலே தூய சமாதி யென்பாரவ்
விதநின் றிடிற்பன் னுளுடலை விடுங்கால் வேறெண் கலவாது
மதமொன் றுறவே றெண்கலப்பின் வருமே யதற்குத் தகுபிறப்பு.

---

கக0. மான அயர் பற்றினுக்கு - பெரிதும் அயர்தற்குரிய பற்றுக்களுக்கு.

ககக. அனுர்கள் - துன்பங்கள். பல்லவையும் - பலபொருள்களையும்.

ககஉ. ஒருவும் - நீக்குகிற. இருவும் - இருத்தும்.

ககரு. அம்மை - மறுபிறப்பு. புகர் - குற்றம். இகவுஇல் - நீங்குதலில்லாத—தொழிற்பெயர். இரிந்திடும் - நீங்கிப்போம்.

ககச. சுதம் - அழிவு. வேறுஎண் கலவாது - வேறு எண்ணம் உண்டாகாது. மதம் ஒன்றுற - மதம் பொருந்த.

அன்றே யுள்ள வஷித்தையென லஞ்ஞா னம்பல் விதமதித்தியான்
என்றே யெழுத லகங்கார மிதுவேண் டுவதென் றெழுதலவா
சென்றே யதுடற் றுதலாசை மறுப்பிற் சேறல் சினமைந்து
நின்றே கிடநோ யொழியுமென நிகழ்த்தா நிற்கு நிரம்பியநூல் (கசரு)

எல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்று மெழுமைப் பவமு மீன்றிடும்வித்
தொல்லா வவாவே யப்பத்தி லுறுதுன் பறிந்தோ னுதியாமை
யல்லான் மற்றும் வேண்டுமோ வேண்டா னலவ் வுதியாமை
சொல்லார்ந் திலங்கும்வேண்டாமை தன்னைவேண்டத் துனைவின்வரும்.

அன்னோ வன்னோ வேண்டாமை யன்ன மேன்மைப் பெருஞ்செல்வம்
என்னோ காணப் படுமீண்டு மின்று கேட்கப் படுஞ்சிறப்பின்
மின்னா ராண்டு மஃதொப்ப தின்றா லெனினவ் விழுச்செல்வந்
தன்னா தரவிற் பெறுவார்க்குச் சாற்று முவமை யுளதேகொல். (கசஎ)

அற்றா னென்று சொலப்படுவா னுசை யற்றா னொருவனே
மற்றா தரவி னஃதொன்றும் வைத்துப் பிறவே துக்கமெலாஞ்
செற்றா னெனினு மவையாக்குஞ் செயிர்த்துன் பகன்றா னேயன்றி
உற்றார் வணங்கு மவன்போல வொழிந்தான் கொல்லோ வுறுபிறவி.

---

கசரு. இச்செய்யுட் கருத்தினை "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற - னாமங் கெடக்கெடு நோய்" என்னுந் திருக்குறளுரையில் விரிவாய்க்காணலாம்.

கசசு. எழுமை பவமும் - ஏழு பிறப்பினையும். ஒல்லா - கூடாத. சொல் ஆர்ந்து இலங்கும் - புகழோடுகூடி விளங்குகிற. துனைவின்வரும் - விரைவி லுண்டாகும்- "அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றும் - தவா அப் பிறப்பீனும் வித்து" என்னும் திருக்குறளுரையில் இச்செய்யுளின் கருத்தைப் பரக்கக் காணலாம்.

கசஎ. அன்னோ அன்னோ - அந்தோ அந்தோ—அடுக்குப் பெருவியப் புக் குறிப்பு. காணப்படும் ஈண்டும் - காணப்படுகிற இவ்வுலகத்தும். மின் ஆர் ஆண்டும் - பிரகாசம் பொருந்திய அவ்வுலகத்தும். ஆதரவில் - அன்போடு. "வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை - யாண்டு மஃதொப்பதில்" என்னும் திருக்குறளுரைப் பொருட்டு.

கசஅ. செற்றான் எனினும் - கடந்தானாயினும். செயிர் - துன்பம். உற் றார் - (தத்துவஞானத்தை) அடைந்தவர்கள். "அற்றவரென்பா ரவாவற்றார் மற்றையார் - அற்றாகவற்ற திலர்" என்னும் திருக்குறளின் பொருள் இச்செய் யுளிற் கிடத்தல் காண்க.

மெய்யை யுணர்தன் முடிவாக வேண்டுங் கருவி யெலாம்பெற்றுச்
செய்ய முத்தி யடைவதற்குச் சிறந்து ளோனை மறவிவழிப்
பைய நுழைந்து பவமீட்டும் பாய்த்திக் கெடுக்க வல்லதவா
ஐய வதனுக் குளநடுங்கி யஞ்சிக் காத்த லறிஞர்தொழில். (கககூ)

ஆத லாலிம் மனைவாழ்க்கை யகத்தே யிருந்து முத்திதனைப்
போத வடையத் துணிவதுதான் புணையா மஞ்சு துயில்பொருப்பைக்
காதன் மிகுதி யாற்பெயர்த்துக் கத்துந் தரங்கக் கடலிடையிட்
டேத மகல வதுபற்றி யொருவன் கரையே றுதல்போலும். (க௨0)

மனையிற் பெருஞ்செல் வத்துறைவோன் மருவு தியான முறச்சிறிது
நினையிற் காண வருவாரை நேர்சென் றழைத்துத் தழுவிடவும்
வினையத் தினும்வினோ தத்தினும் விரும்பிப் பேசி டவுமவர்கள்
நினையப் பட்ட தளித்திடவும் பொழுது கழியு நினைப்பழியும். (க௨க)

ஒன்றும் பெறாத விலரெனினு முற்ற பெருஞ்செல் வத்தினர்பாற்
சென்று கொளுநட் புடையரெனத் தேயஞ் சொலற்கே சிலர்சூழ்வார்
மன்ற வொன்றா யினுமோர்பயன் வழங்க லாகு மெனமூடல்
துன்று நறுநெய்க் குடத்தெறும்பு சூழ்தல் போலுஞ் சிலர்சூழ்வார்.

பொறையின் றேனும் பொறையுடையாய் புகழின் றேனும்புகழுடையாய்
நிறையின் றேனு நிறையுடையாய் நீதி யுடையா யின்றெனுநற்
றுறையின் றெனுநற் றுறையுடையா யென்று சூழ்வர் கேட்டவர்கள்
அறைகின் றனர்பல் லோருநமக் கமைந்த வெலாமென் றகங்களிப்பர்.

களியிற் றெய்வ சிந்தனையுங் கழிந்தே நிற்கு மதுகழிய
அளியிற் சிறந்த நல்லறமு மகன்றே நிற்கு மஃதகல
ஒளியிற் றிடவந் திருளடைந்தாங் குடற்றும் பாவம் வந்தடையும்
விளியிற் கொடிய நிரையமெலாம் புகுந்து கிடக்கும் வேலைமிகும். ()

கககூ. மறவிவழி - மறப்பு வாயிலாக. பவம்பாய்த்தி - பிறவியிற் செலுத்தி. பைய - மெல்ல. "அஞ்சுவதோரு மறனே யொருவனை - வஞ்சிப்பதோரு மவா" என்னுந் திருக்குறளின் கருத்து.

க௨0. மஞ்சுதுயில் பொருப்பை - மேகங்கள் தூங்குகிற மலையை. தரங்கம் - அலை.

க௨௨. மன்ற - நிச்சயமாக. மூடல்துன்றும் - மூடப்பட்டிருக்கிற. "ஆகா தெனினு மகத்து நெய்யுண்டாகிற் - போகாதெறும்பு புறஞ்சுற்றும்—ஓகோ - கொடாஅ ரெனினு முடையாரைப் பற்றி - விடாஅ ருலகத் தவர்" என்னும் நாலடியார் கருத்து இப்பாட்டில் அமைந்திருத்தல் காண்க.

க௨ச. அளியில் - அன்பில். இற்றிட - நீங்க. உடற்றும் - துன்புறுத்தும். விளியில் - இறந்தால். வேலை - தொழில்.

அந்த நிரையக் கொடுந்துன்ப மாரோ படுவார் நினைத்திடினும்
வெந்து புழுங்கா நின்றதுள மேவு மிவைக்குக் காரணமிப்
பந்த முறுக்குஞ் செல்வமெனப் பயந்தா னுயிரின் னனநினைந்தான்
இந்த வருத்த மிறத்துதிப்பே னெம்பி ரானை யெனத்துதிப்பான். ()

## மச்சாவதாரம்

### வேறு

எழுதரு மறையைக் கவர்ந்தன னாகி யெறிதிரைக் கடல்புகுந் தொளித்த, முழுவலிச் சோம காசுர னுயிரை முனைகெழு மீனமாய்ச் சவட்டிப், பழுதிலம் மறையை யுலகிடை விரித்துப் பளகறுத் துயிரெலாம் புரந்தாய், கொழுதிவண் டுழக்கு நறுந்துழாய்ப் படலைக் கொற்றவ நின்னடி போற்றி. (கசுசு)

## கூர்மாவதாரம்

எறிசெறி தரங்கப் பாற்கட னடுவ ணெறுழ்வரை மத்தெனக் கூட்டித் தறியென மதியை நாட்டிவெண் பிறைப்பற் றழல்விழி யரவநாண்பூட்டி மறிதொழின் மறியச் சுரர்கடை காலம் மந்தரங் கடலழுந் தாது முறிவின்மோட் டாமையுருக்கொடு பரித்த முன்னவ நின்னடிபோற்றி.

## வராகாவதாரம்

மலர்தலைப் புவியைப் பாயலாச் சுருட்டி மயங்குபா தலத்திடைக் கரந்த, இலகுபொற் கண்ண னுயிர்குடிப் பதற்கு மிமைப்பினப் புவி விரிப் பதற்கு, நிலவுவெண் பிறைக்கோட் டடல்வலிக் கேழ னிமிருருக் கொண்டவெம் பெரும, அலர்மகள் குடிகொண் டுறைமறு மார்பத் தச்சுத நின்னடி போற்றி. (கசுஅ)

---

கசுசு. சவட்டி - அழித்து. பளகு - குற்றம். கொழுதி உழக்கும் - கிண்டித் துவைக்கிற. படலை - மாலை. இச்செய்யுள் முதல் கூறப்படும் தசாவதார மேன்மைகளைப் பாகவதத்திலும் இராமாயணத்திலும் காண்க.

கசுஎ. தரங்கம் - அலை. எறுழ்வரை - உறுதியான மலையை. மதியை - சந்திரனை. தறி - தூண். முறிவு இல் - அழிவில்லாத. மோடு - பெருமை. பரித்த - சுமந்த.

கசுஅ. மலர்தலை - பரந்த இடத்தையுடைய. பொன்கண்ணன் - இரணியாக்ஷன். கோடு - கொம்பு. கேழல் - வராகம்; பன்றி.

## நரசிங்காவதாரம்

மலைத்தட நிறத்து முன்னவ னுயிரை மாட்டிய பழிகொளக் கருதி, அலைத்தட ரேலைத்துச் சுரர்முதல் யார்க்கு மச்சுறுத் திட்டது மன்றிப், புலைத்தொழி லுணர்வாற் றன்பெயர் வழுத்திப் போற்ற வும் புரிந்தபொல் லானைக், கொலைத்தொழில் புரியத் தூண்கிழித் தெழுந்த கோளரி நின்னடி போற்றி. (கஉகூ)

## வாமனாவதாரம்

பெருகிய தவத்துக் காசிப னதிதி பிறங்குறு தந்தைதா யாகத்
திருகறத் தோன்றி மமதையிற் படிந்த திறல்கெழு மாவலி பாற்சென்
றுருகிய மனத்தின் மூவடி மண்கொண் டோரடிக்கிடம்பெறுமையினென்
மருவவன் சிரத்தில் வைத்துயிர் புரந்த வாமன நின்னடி போற்றி.

## பரசுராமாவதாரம்

மாணுடைச் சமதக் கினியிரே ணுகைக்கு மகனெனத் தோன் றிமா மறையோர்ப், பேணுடைத் துலக நடைநெறி யிகந்து பெயர்ப் பருஞ் செருக்கினின் மூழ்குங், கோணுடைக் குரிசிற் குலமறச் சவட் டிக் குலவுமம் மறையவர்ப் புரந்த, ஏணுடைப் பரசு ராமவைம் படக்கை யிறையவ நின்னடி போற்றி. (கஙக)

## ஸ்ரீராமாவதாரம்

தடநெடு மாட மாளிகை யயோத்தித் தசரதன் கோசலை மகவா
அடல்கெழு பாயல் சங்குசக் கரமுந் தம்பிய ராயடி பரவத்
திடனுறத் தோன்றிக் கடுந்தொழி லரக்கி சேயொடு மிறச்சிலை வாங்கி
மடனிகு முனிவன் மகத்தினைக் காத்தோர் மாதுகல் லுருவினையகற்றி.

---

கஉகூ. நிறத்து - மார்பினையுடைய. முன்னவன் உயிரை - தமையனது உயிரை. மாட்டிய - வாங்கின. அச்சுறுத்திட்டதும் - பயமுறுத்தினதும். பொல்லானை - கொடியவனாகிய இரண்யகசிபனை. கோளரி - நரசிங்கனே.

கஙO. திருகு அற - மாறுபாடில்லாமல். திறல் கெழு - வலிபொருந்திய.

கஙக. பேண் உடைத்து - போற்றுதலை விட்டு. இகந்து - கடந்து. பெயர்ப்பு அரு - நீக்குதற்கரிய. கோண் உடை - வலியையுடைய. குரிசில் குலம் அற சவட்டி - க்ஷத்திரிய வமிசத்தை முற்றுமழித்து. ஏண் உடை - பெருமையையுடைய.

கஙஉ. அடல் கெழுபாயல் - வலியுடைய சயனமும். அரக்கி - தாடகை. சேய் - சுபாகு மாரீசர்கள். மடன் இகு முனிவன் - அறியாமையைக் கொன்ற விசுவாமித்திரர். மாது - அகலிகை.

பெருவள மிதிலை நகரகம் புகுந்து பெயர்க்கருங் கார்முக மிறுத்துக்
குருமலர்நிறையப்பூத்தகொம்பன்னகோதையைமணந்துமீட்டயோத்தித்
திருநக ரடைந்து தாயுரை தாங்கித் தேவியுந் தம்பியுந் தொடர
மருவிய களிப்பி னந்நகர் நீங்கி மாண்பினோர் கிராதனை நட்டு. (கநங)

தவப்பெரு முனிவர் குடிகொளும் பன்ன சாலைகள் கடந்துவிண்டடவ
நிவப்புறு குடுமிச் சித்திர கூட மடைந்தவ ணையத்தி னிறுத்த
கவற்சிமிக் குடைய பரதனுக் கினிய கழறிப்பா துகைகொடுத்தனுப்பி
உவப்புற வெவருந் தண்டகம் புகுந்தங் குடன்றெழு விராதனைமாட்டி.

திகழ்சர பங்கன் கருத்தினை முடித்துச் செந்தமிழ் மணங்கமழ் செவ்வாய்ப், புகழ்முனி யிருக்கை யடைந்தவ ணொருவிப் பொலி பஞ்ச வடித்தல மடையா, இகழ்வ றுமெருவை யிறைக்குள மகிழ்வித் திராவணற் கிளையவள் கலாங்கண், டகழ்தரப் போந்த கரன்முத லோரை யடுதொழிற் கூற்றுண நல்கி. (கநரு)

மாயையி னடைந்த வுழையுயிர் போக்கி மாதினைக் கவர்ந்தெழு மரக்கன், பாயவொள் வாளாற் சிறையறுப் புண்ட படர்புகழ்த்தாதை யைக் கண்டு, மேயபல் கடனும் விதியுளி முடித்து விலக்கருங் கொடுந் தொழிற் கவந்த, னுயவற் றொலைத்துச் சவரிபூ சனைகொண் டகன்று போய் மதங்கவெற் படைந்து. (கநசு)

---

கநங. கார்முகம் இறுத்து - வில்லையொடித்து. குருமலர் - நிறமுள்ள பூக்களை. கோதையை - சீதாபிராட்டியை—சினையாகுபெயர். கிராதன் - சிருங்கபேரபுரத் தலைவனான குகன்.

கநச. பர்ணசாலை - இலைக்குடில் ; (பர்ணம் - இலை). நிவப்புஉறு குடுமி - உயர்ந்த சிகரங்களையுடைய. கவற்சி - துன்பத்தை. உடன்று - கோபித்து. விராதன் - குபேரசாபத்தால் அரக்கனான தும்புருவனென்னும் கந்தருவன்.

கநரு. முனி - அகத்தியர். பஞ்சவடி - ஐந்துவடங்கள் நிலவப்பெற்ற ஓர் இடம் ; வடம் - ஆல். எருவையிறை - கழுகரசனாகிய சடாயு. இளையவள் - சூர்ப்பநகை. கலாம் - கொடுமை. அகழ்தர - செவிமூக்குகளை அறுக்க. கரன் - விஸ்ரவசுவுக்கு ராகையினிடத்திற் பிறந்த புதல்வருள் மூத்தவன்.

கநசு. உழை - மாரீசனாகிய மாயமான். மாதினை - சீதாபிராட்டியை. பாய - (ஒளி) பரவிய. தாதையென்று சடாயுவைக் கூறியது தமது தாதை பால் நண்புபூண்டிருந்த காரணம்பற்றி யுபசரித்தமுறை. கவந்தன் - இந்திர னுடைய வச்சிராயுதத்தால் உள்ளழுந்திய தலையையுடைய அரக்கன் ; கவந் தம் - தலையில்லாவுடல். சவரி - இராமருக்குக் கனிவகைகளீந்து மோக்ஷ மடைந்த ஒரு வேடிச்சி.

கதிரவன் பயந்த மதலையை நட்டுக் கனந்தவழ் மாமரந் துளைத்து
முதிரொளிக் குலிசப் படையினன் மகனை முனிந்தடல் புரிந்துல கடங்க
அதிர்தரத் திரியுஞ் சேனைதற் சூழ வனுமனு லறிவதை யறிந்திட்
டெதிரறு கடற்க ணொருசரம் புகுத்தி யியங்குற நடவையுண் டாக்கி.

இலங்கையுட் புகுந்து தசமுக னவனுக் கிளவல்விண் ணிறைய வன் பகைமுற், பொலங்கழன் மைந்தர் மற்றையோ ரையும்வெம் போர்க்களத் தவித்துவீ டணற்கு, நலங்கெழு முரிமை யரசளித் துலகி னூட்டுகற் பரசியை மீட்டு, நிலம்புக ழயோத்தி யடைந்தர சளித்த இராகவ நின்னடி போற்றி. (௧௫௮)

பலராமாவதாரம்

மல்லலம் புவனம் புகழ்வசு தேவன் மயிலியற் றேவகி பிறருக், கொல்லரும் வனப்பி னுரோகணி யிவர்கட் கொருமக வாவவ தரித்துக், கொல்லுமா குறித்த பிரலம்பன் முதலோர்க் கூற்றுணக் கொடுத்துயிர் புரக்குஞ், சொல்லருஞ் சீர்த்திப் பளிக்குரு வமைந்த தூயவ நின்னடி போற்றி. (௧௫௯)

கிருஷ்ணாவதாரம்

பாவடிக் களிற்றுப் படையுடைக் கஞ்சன் பரித்துறை மதுரைமா நகரில்
ஆவணித் திங்க ளெள்ளிருட் பக்கத் தட்டமி தனிலருங் கற்பின்
மாவகிர்க் கருங்கட் டேவகி வயிறு வாய்த்திடக் காற்செறி கழன்று
மேவுறப் பணிந்த புகழ்வசு தேவன் மென்மலர்த் தடங்கர மடைந்து.

காவல்செய் புதவும் யமுனையு நடவை கடிதினி திருளிடை யுதவக்
கோவலர் பாடி நந்தகோன் மனையிற் கோதில்கற் பசோதை யீன்றெடுத்த
மாவலர் கதுப்பின் மாயைதான் பிறந்த மனையுறப் போக்குபு புகுந்து
தாவரு மகிழ்ச்சி யாவரு மடையத் தடையற வளர்தரு நாளில். (௧௬௧)

---

௧௫௭. கதிரவன் மதலை - சூரியன் புத்திரனாகிய சுக்ரீவன். நட்டு - நேசித்து. கனம் - மேகம். குலிசப்படையினன் மகன் - இந்திரன் புத்திரனாகிய வாலி. இயங்குற - நடக்க.

௧௫௮. தசமுகன் - இராவணன். இளவல் - கும்பகர்ணன். விண்ணிறையவன் பகை - இந்திரஜித்து. வீடணன் - விபீஷணன்.

௧௫௯. மல்லல் - வளமுடைய. இருதாயருக்கு ஒருமகவாய் அவதரித்த தென்றது :— தேவகியின் வயிற்றில் மூன்று மாதங் கருவாயிருந்து பிறகு உரோகணியின் கருப்பத்தில் மாயையிற் சேர்ந்து பிறந்தமையா லென்க.

௧௬௦. பாவு அடி - பரவிய அடி. கஞ்சன் - கம்ஸன். பரித்துறை - குதிரைப்பந்தி. கால் செறி - கால் விலங்கு.

௧௬௧. புதவு - கதவு. யமுனை - கடவுமரம். நடவை - வழியாக. மா அலர் கதுப்பின் - வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய. போக்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம்.

மாயையி னறிந்த மாதுலன் விடுக்க வந்தபூ தனையுயிர் சவட்டிப், பாயமென் சுவைய பண்ணிகா ரம்பெய் பண்டிநுண் டுகள்பட வுதைத்து, வாயுவிற் சுழன்று கொண்டுசெ லரக்கன் மாய்தர நிலத்திடை வீழ்த்தி, யாய்தொடிப் புகழ்த்தாய் காணிய தன்னு ளடங்கலுங் காட்டுபு மறைத்து. (கசஉ)

நந்தகோன் றடக்கை பற்றுபு குறுந்தாள் பெயர்த்துமென் மெல நடந் துலவிச், சந்தமார் தாதை சொற்படி வந்த வேதியன் றருபெயர் பெற்றுச், செந்துவர்க் கனிவா யன்னைபா லருந்தச் சேர்த்துபு வெண்டயி ருடைக்கும், அந்தவே லையிற்பால் பொங்குபு வழித லாற்றுவானகன் றமை நோக்கி. (கசங)

அவ்விடத் திருந்த வெண்டயிர்க் குழிசி யனைத்தையு மத்தினு லுடைத்துச், செவ்விய வளையைத் திரட்டியுண் டடுத்த செழுமனைப் புகுந்தூறி வெண்ணெய், வவ்வுதற் குரன்மே னின்றுகன் மோதி வாய்ப்பெய்து பூசைக்குங் கொடுத்துக், கொவ்வையங் கனிவா யன்னைமென் றாம்பாற் குழிசெறி கறையொடு பிணிப்ப. (கசச)

மருதிரண் டொடிய வீர்த்திடைத் தவழ்ந்துமற்றவை மாற்றிய பின்னர்க்
கருதுறு பிருந்தா வனமடைந் துகளுங் கற்றின மேய்த்திடு நாளில்
ஒருகருங் கன்று கொடுவிள வெறிந்தங் குற்றபுள் வாய்கிழித் தரவப்
பெருகிய சாபந் தொலைத்திடச் சிறார்கள் பெட்புற வாற்றுணு வுண்டு.

மலர்மகன் கவர்ந்த கற்றினஞ் சிறுவர் மாயையிற் பண்டுபோ லாக்கிக், கலவிய விடநீ ருண்டுடல் துறந்த வுயிர்களுய்ந் திடக்கடைக் கண்பார்த், தலகில்தீக் கொடுமைக் கட்செவிப் பணத்தி லடித்தல நிறுத்துபு நடித்துக், குலவுறு தந்தை யாய்ச்சிறார் தம்மை வளைவனக் கொழுந்தழ லயின்று. (கசசு)

கசஉ. மாதுலன் - மாமனாகிய கம்ஸன். பூதனை - கம்ஸனேவலால் ஸ்ரீ கண்ணபிரானை நச்சுமுலையூட்டிக் கொல்லவந்த ஓர் அரக்கி. பண்ணிகாரம் பெய்பண்டி - பலவகையான அப்பவர்க்கம்பெய்த சகடரூபமாய்வந்த ஓர் அசுரன்; சகடாசுரன்.

கசங. குறுதாள் - சிற்றடி. சந்தம் - அழகு.

கசச. குழிசி - மிடா. அளை - வெண்ணெய். பூசை - பூனை. அன்னை - தாயாகிய யசோதை. தாம்பால் - தாம்புக்கயிற்றால். குழிசெறி கறையொடு பிணிப்ப - குழியுள்ள உரலோடு கட்ட.

கசரு. மருது - மருதமரம். உகளும் - துள்ளுகிற. விளஎறிந்து - விளாம் பழம் விழ வீசி. புள் - பறவை. ஆற்றுணு - கட்டுச்சோறு. (மருதமரமாக இருந்தவர் - நளகூபரமணிக்கிரீவர். கன்று வடிவாக இருந்தவன் - வச்சாசுரன். புள் - கொக்கு வடிவாய்வந்த பகாசுரன். அரவமாயிருந்தவன் - அகாசுரன்.)

கசசு. கட்செவி - காளிந்தனென்னும் பாம்பு. பணத்தில் - படத்தின் மேல். வனத்தழல் - காட்டுத் தீ.

பனிநிலா முறுவ லாய்ச்சியர் மயங்கப் பவளவாய் வேய்ங்குழல் வைத்துக், கனிநலத் தவர்நீ ராட்டயர் காலைக் கலையெலாங் கவர்ந் திணர்க் குருந்தின், இனிதுற வேறிக் கரைமிசை யிவர்ந்தோர்க் கெடுத் தெடுத் தந்துகி லீந்து, நனிமலர்ச் சோலை யகம்புற முருவம் பல கொடன் னவர்நல முண்டு. (கசஎ)

தவம்பயின் முனிவர் பன்னிய ரளித்த சமைந்தவின் சுவையுணு வினையுண், டுவந்துவா சவன்கொள் பூசையைத் தான்கொண் டுறு மழை வரைகொடு தடுத்துச், சிவந்தகண் ணசுரன் கொடுசெலுந் தந்தை திருமுற மீட்டுமற் றவனும், நிவந்தவண் டர்களுங் காணவை குந்தங் காட்டுபு ஞெரேலென மறைத்து. (கசஅ)

இரும்பசுக் காவல் செய்யுமா வயினல் விராதைதன் னெழினலங் கவர்ந்து, விரும்புபன் மாதர் குழாத்தொடும் பாடி மேவுபு தந்தையைக் கவரும், அரும்புபல் லரவைக் கான்மிதித் தகற்றி யமைதரு கான மீட் டடைந்து, வரும்பெருஞ் சங்க சூடனை மாய்த்து மணியினை முன் னவற் களித்து. (கசகூ)

நாரத முனிவன் சொற்கொடு கஞ்சன் செலுத்திட நண்ணிய கேசி ஆர்தரு மற்றோ ருயிர்குடித் தன்று னமர்தரு மதுரையை யடைந்து சார்தரு மீரங் கொல்லியைத் தடியா வெழில்கலன் றந்தவற் குதவி ஈர்மதுக் கண்ணி யன்புட னளித்தாற் கினியத னின்பவீ டளித்து.

சாந்தநன் களித்த கூனியை யணங்காச் சமைத்துடன் வேத் தவை புகுந்து, காந்தெரி கவிழ்க்குங் கட்கடைக் களிறு கல்லடு திணி

கசஎ. முறுவல் - பல். இணர் - மலர்க்கொத்து. இவர்ந்தோர்க்கு - நின்ற வர்க்கு. நலம் - போகஇன்பம்.

கசஅ. வாசவன் - இந்திரன். வரை - கோவர்த்தனமலை. அண்டர்கள் - இடையர்கள். ஞெரேலென - விரைவாக.

கசகூ. இரு - பெரிய. ஆவயின் - அவ்விடத்தில். பாடி - திருவாய்ப்பாடி. அரவு - முனிவரை யிகழ்ந்து பாம்பு வடிவமான சுதரிசனன். சங்கசூடன் - குபேரனது சினேகிதன். முன்னவன் - பலராமன்.

கரு௦. கேசி - குதிரை வடிவாக வந்து ஸ்ரீ கண்ணபிரானிடம் சண்டை செய்து மடிந்தவன். ஈரங்கொல்லி - வண்ணான். தடியா - கொன்று. ஈர்மது கண்ணி - குளிர்ச்சியும் தேனுமுள்ள பூமாலையை.

கருக. கூனி - கம்ஸனுக்குச் சந்தன முதலிய வாசனைத் திரவியம் கொண்டுவந்து கொடுக்கும் தாசி ; இவளைக் குப்ஜை, நைகவக்ரை, சைபந்திரி என்றுங் கூறுவர். அணங்கு ஆ செய்து - தெய்வப் பெண்போல அழகுபெறச் செய்து. வேத்து அவை - ராஜ சபை. காந்து எரி - எரிகின்ற நெருப்பு. கல்

புய மல்லர், நாந்தக வாண்மைக் கஞ்சனை முன்னோர் நடுங்கியுள் ளுயிர்விடக் கடிந்து, வாய்ந்தநன் பெருஞ்சீ ருக்கிர சேனற் கரசுரி மைத்திறம் வகுத்து. (கருக)

தந்தையுண் மகிழ்ந்து நூற்கடி முதலாஞ் சடங்குக ளியற்றுவித் திடலும், மைந்துடை யுணர்ச்சிச் சாந்திபற் சார்ந்து மறைமுதற் கலை யெலா முணர்ந்து, வெந்திற லவுணன் வரைநிறங் கிழித்து விரிகதிர்ச் சங்கமொன் றெடுத்து, முந்தைநா ளிறந்த மதலையை மீட்டா சாரியன் தேவிமுன் வைத்து. (கருஉ)

கோவியர்த் தேற்ற வுத்தவற் போக்கிக் கூனிதன் னிளநல நுகர்ந்திட் டேவியல் சாபத் திரிதராட் டிரன்பா லிலகுமக் குரூரனைப் போக்கி மாவியற் றானைச் சராசந்த னோடே மண்டமர் பதினெழு முறைசெய் தோவியப் புரிசை மதுரையை முனிவ னுந்துகா லயவனன் வளைப்ப.

ஆர்திரைப் புணரி நடுவண்வண் டுவரை யணிநகரொன் றுள தாக்கிப், போரினுக் காற்றான் போல்விரைந் தோடிப் பொங்குசீர் முசு குந்த னுறங்கும், ஓர்வரைக் குகையுட் புகுந்தவ னுற்றெவ் வுடல் பொடிப் பித்துமுன் னவனோ, டேர்கெழு மதுரை நின்றுவண் டுவ ரைக் கேகுழிச் சராசந்தன் வளைப்ப. (கருச)

அவற்குமஞ் சினன்போன் முன்னொடு மாங்கோ ரணிவரை யிவர்ந்தழல் சூழக், கவற்சியின் றாகி விரைந்துகுப் புற்றுக் கடிமதிற் றுவரையை யடைந்து, நவத்தளிர்ப் பொழில்சூழ் விதர்ப்பநாட் டரச னங்கைமுன் னோனுரைக் கஞ்சி, நிவப்புற விடுத்த தூதுகண் டாங்கு ஞெரேலெனத் தேர்மிசைச் சென்று. (கருரு)

---

அடு - மலையை வென்ற. திணிபுயம் - வலிய தோள். நாந்தகம் வாளாயுதம். உக்ரசேனன் - வடமதுரைக்கரசன்.

கருஉ. நூற்கடி - பூணூல் கலியாணம். மைந்து - வலி. சாந்தீபன் - ஸ்ரீ கண்ணபிரானுக்கு வித்யாகுருவாகிய வேதியன். அவுணன் - பாஞ்ஜசனன். வரைநிறம் - மலைபோன்ற மார்பு.

கருந. உத்தவன் பிருஹஸ்பதிக்குச் சீடன். சாபம் - வில். போக்கி - அனுப்பி. சராசந்தன் - மகத தேசத்தரசன். ஓவியம் புரிசை - சித்திரங்களை யுடைய மதில்.

கருச. புணரி - கடல். முசுகுந்தன் - மாந்தாதாவின் குமாரன்; முசுமுக முடையவன்; முசு - ஒருவகைக் குரங்கு. தெவ் - பகைவன். ஏகுழி - போகும்போது.

கருரு. இவர்ந்து - ஏறி. கவற்சி - கவலை. நவம் - புதிய. நங்கை - உருக் மிணிதேவி. முன்னோன் - உருக்மி. நிவப்புற - மேன்மையாக.

வரந்தரு கவுரி திருவடி வணங்கி மாமலர்ச் சோலையி னின்ற, பரந்தபே ருண்கட் கன்னியைக் கவர்ந்து பகைத்தமன் னவர்களை யோட்டி, யரந்தடி நெடுவே லுருக்குமன் குடுமி யரிந்துவண் டுவரையை யடைந்து, சுரந்தரு ளுருக்கு மிணிபெறு மைந்தன் றொடுகடன் மீன்வயி றடைந்து. (கருசு)

இரதியைச் சார்ந்து வளர்ந்தவ னலனுண் டேற்றிகற் சம்பரற் றொலைத்துக், குரவலர் குழலி யொடுதுவா ரகையிற் புகுந்திடப் பெருமகிழ் கூர்ந்து, பரவுசத் திராசித் திரவிபாற் பெறும்பொன் பயந்திடு மணிபிர சேனன், கரமல ரளிப்பக் கோளரி கவரப் பின்னரோர் கரடிகைக் கவர்ந்து. (கருஎ)

பிலத்திடை யடைந்து மகடுயி லிடத்து வைத்திடப் பெரும்பழி தனக்கு, நிலத்திடை வருத ஞெக்கியப் பிலத்தை நேர்ந்துசாம் பவனொடு பொருதி, வெலத்தகு வாகை யொடுமவன் மகளை மணியினைக் கைக்கொடு மீண்டு, வலத்தவ னுய சத்திரா சித்துக் கம்மணி நல்கிட மகிழ்ந்து. (கருஅ)

எழினலங் கனிந்த சத்திய பாமை தனைமணி யொடுமுவந் தீயக்
கழிமகிழ் சிறந்து மணியையம் மாமன் கையளித் தறன்மகன் முதலோர்
ஒழிவுறத் துயர மன்னவர் பாற்சென் றுறையுநாண் மாமனைக் கடிந்தாங்
கழிவிலம் மணிகைக் கொள்சத தனுவாவாருயி ரிறத்தொலைத் தகற்றி.

மழைவளஞ் சுரப்ப வக்குரூ ரன்செம் மணியொடு வந்துகண் டுடலுந், தழைமகிழ் சிறந்தம் மணியினை யவற்கே தருசெழும் பொற்பிரளெல்லாம், உழைமரு ணயனச் சத்திய பாமைக் குதவுக வென்றினி தளித்து, விழைகள்வார் கூந்தற் சுபத்திரை தன்னை மேகவா கனன் மகற் கீந்து. (ககூ0)

---

கருசு. கன்னியை - உருக்குமிணி தேவியை. மைந்தன் - பிரத்யும்னன்; மன்மதாம்சமுடையவன். தொடுகடல் - தொண்டப்பட்ட கடல்.

கருஎ. இரதி - மாயாவதி. குரவு அலர் குழலியொடு - குராமலரை யணிந்த கூந்தலையுடையவளோடு. இரவி - சூரியன். கோளரி - சிங்கம். கரடி என்றது - சாம்பவந்தனை.

கருஅ. பிலத்திடை - குகையினிடை. மகள் - ஜாம்பவதி. மணி - சமந்தக மணி; இது தினந்தோறும் எட்டுப்பாரம் பொன்னைத் தருவது.

கருகூ. அறன் மகன் - தருமராசன்.

ககூ0. உழை - மான். மேகவாகனன் மகன் - அருச்சுனன்.

எரிமணி மாட விந்திரப் பிரத்த மெய்துபு தனஞ்சய னோடு
மரில்படு கானில் வேட்டமா டிடுங்கா லமிழ்தென வின்னிசை பாடும்
வரிநெடுங் கடங்கட் காளிந்தி யின்ப மருவிவண் டுவரையை யடைந்து
விரிபெரும் புகழ்சா லவந்திம னளித்த மித்திர விந்தையைக் கவர்ந்து.

அரவுயர் கொடியோ னாதியோ ருள்ள மச்சுற வில்வளைத் தமர்த்துப்
புரபுபூண் டியருங் கோசலத் தரசன் போர்விடை யேழையுந் தழுவிக்
குரவுவார் கூந்தற் சத்தியை மணந்து குலவுறு கேகயத் தரசன்
உரவுளத் தவளும் மன்றல்செய் தளிப்ப வுற்றபத் திரைநல நுகர்ந்து.

இலங்குமத் திரத்திற் கயற்குறி தப்பா தெய்திலக் கணைமணம் புணர்ந்து, வலங்கொளு நரகற் கொன்றுவச் சிரத்தோன் மனக்குறை முடித்தினி தருளிப், பிலங்கொளாங் கிருந்த வொருபதி னாறு யிரமட வார்பெரும் போகந், துலங்குற விரும்பிச் சத்திய பாமை தொழுதிட வைந்தரு நல்கி. (கசுங)

ஆம்பலங் குதலை வாய்மொழி மைந்த ரளவிலர் தோன்றிடக் களித்துக், தேம்பலின் மைந்தன் மகற்சிறை புரிந்த திறலினன் கைத் தலஞ் சிதைத்துக்,கோம்பியாய்க் கிடந்தோன் பாதகந் தவிர்த்துக் குல விய காசிமன் னனையும், பாம்பணைப் பரன்யா னேயெனத் தோன்றும் பவுண்டர வாசுதே வனையும். (கசுச)

உயிர்குடித் தந்த வாரண வாசி யொன்னலன் மகன்விடு பூதஞ்
செயிருறத் துரந்து சுயோதனன் கன்னிசெழுநல நுகர்ந்திருட்கவர்ந்த
வயிரவாட் சாம்பன் சிறையைமுன் னோன்போய் மீட்டுவர் திடமகிழ்சிறந்து
பயிலும்யாழ் முனிவன் கண்டிடப் பதினா றாயிரந் திருவுருக் காட்டி.

---

கசுக. அரில் படுகானில் - மூங்கில் அடர்ந்த காட்டில். காளிந்தி - சூரியன் மகள்.

கசுஉ. புரவு - காத்தற்றொழில்—தொழிற்பெயர்.

கசுங. கயல்குறி - மச்சயந்திரத்தை. இலக்கணை - மத்திர தேயத்து அரசன் மகள். ஐந்தரு - மந்தாரம், பாரிஜாதம், சந்தானம், தேவதாரு, கற்பகம்.

கசுச. ஆம்பல்வாய் - செவ்வல்லி மலர்போன்ற வாய். தேம்பல் - வாட்டம். திறலினன் - வலியனாகிய வாணாசுரன். கோம்பி - பச்சோந்தி;ஒருவகை ஓணான். மைந்தன் மகன் - பிரத்யும்நன் மகனாகிய அநிருத்தன்.

கசுரு. வாரணவாசி - காசி. ஒன்னலன் மகன் - பகைவனுடைய மகனாகிய சுதக்ஷணன். சுயோதனன் கன்னி - துரியோதனன் மகளாகிய இலக்கணை. யாழ்முனிவன் - மகதயாழைத்தாங்கிய நாரதர்.

மல்லுயர் திணிதோட் சராசந்த னுடலம் வகிர்ந்திடு கான்மக னறியப்
புல்லினைக் கிழித்துப் பற்பனுள் வருந்து புரவலர் சிறைவிடு வித்து
நல்லற மைந்த னிராசசூ யத்தி னடைபிறழ் சேதிபற் றடிந்து
வல்லசா லுவனைத் தந்தவக்கிரனை வலங்கெழு படையொடுஞ்செகுத்து.

விறன்மிகு விசயன் வாவுமான் றடந்தேர்ப் பாகனாய் நடத்திவீ டுமன்முற்
றிறன்மிகு வேந்த ரைவரான் மடியச் செய்துபூ பாரமுங் கழிப்பி
அறன்மகற் கரசு நல்கியென் கந்தை யகம்பொதி யவலுந்தின் றளித்த
நிறன்மிகு கமலக் கண்ணுடைக் கண்ண நின்மல நின்னடி போற்றி.

## கலிகாவதாரம்

இமையவர் துதிக்கப் படியிடைப் பரியா யினிவரு மெம்பிரான் போற்றி
அமைதரு மறையுங் காணொணுப் பொருளா யகிலமு மாயவ போற்றி
இமையள வினிற்கை வரைமுறை யிடச்சென் றினிதருள் சுரந்தவ போற்றி
கமைதரு மன்ப ரெண்ணியாங் களிக்குங் கமலநா யகவடி போற்றி.

எனத்துதி முழக்கிக் கண்கணீ ரரும்ப விருகரஞ் சென்னிமேற் குவியக், கனத்திரு மறைநூ லுணர்ச்சிமிக் குடைய காமரு குசேலமா முனிவன், உனற்கரி யவனென் றனக்கினி தருள வுருங்கொலோ வென்றுநெக் குருகி, மனக்கசி வுறுங்கான் மனத்தினுங் கடுகி மாமறைப் பிரான்வெளி வருமால். (கசுசு)

### வேறு

பொன்னுரு மணிமகுடம் பசியவரை முகட்டெழுசெம் பொன்னை யேய்ப்ப, மின்னுரு மிருசெவியின் மணிமகர குண்டலம்வில் வீசி யாட, ஒன்னார்த முயிர்குடிக்கு மெறுழ்வலித்தோ ளங்கதச்செவ் வொளிமே லோங்கத், தென்னூரக் கதிர்கீழும் பாய்ந்ததென வுத்தரியந் திகழா நிற்க. (கஎ0)

கசுசு. வகிர்ந்திடு - பிளந்த. கால்மகன் - வாயுபுத்திரன்; வீமன். புரவலர் - அரசர். சேதிபன் - சிசுபாலன்.

கசுஎ- மான் - குதிரை.

கசுஅ. பரிஆய் - குதிரையுருவாகி; (கற்கியவதாரம்). கமை - பொறுமை. கைவரை-கைம்மலை; கஜேந்திரன்.

கஎ0. பொன் - அழகு; சூரியன். மகரகுண்டலம் - சுறவுமுகமமைந்த ஒரு காதணி. அங்கதம் - தோளணி. வில் - ஒளி. தென் - அழகு. உத்தரியம் - மேலணியும் உடை.

காமருநன் னெறிநடப்ப வறந்தழைப்ப வெவ்வுயிருங் களிப்பின் மேவ, மாமறையை வடித்துவிரித் தினிதுரைத்த திருமலர்ச்செவ் வாய்க்குண் டாய, தோமறுவண் பெரும்புகழிற் சிறிதுவெளிப் பட்டலவு தோற்ற மேய்ப்ப, ஏமமுறு குறுமூரல் வெள்ளென்று சிறிதரும்பி யிலகா நிற்க. (களக)

கோங்கவிழு நறுமலர்கொண் டருச்சித்து முளநினைந்துங் குடந்தம் பட்டுப் பங்கமறு பஃறுதிகண் முழக்கியுமிவ் வாறுவழி படலோ வாது கங்குல்பக னிற்போர்க ணனிமூழ்கி யின்படையக் கமலக் கண்கள் பொங்குமருட் பெருவெள்ளந் திரையெறிந்து கரைபுரளப் பொழியா நிற்க.

தங்கள்குலம் விளக்கியபே ரிருங்கருணை தெரிந்துவகை தழைப்ப நாளும், மங்குதலி லிவன்பாலே யுறைவமெனப் பகலிரவு மருவத் தோன்றுஞ், செங்கதிரும் வெண்கதிரும் வலத்துமிடத் தினுமமர்ந்த செவ்வி யேய்ப்பப், பொங்குகதிர்த் திகிரியுஞ்சங் கமுமிருகைத் தலத்துநனி பொலியா நிற்க. (களங)

மன்பதைகண் முறையிடாதஞ்சலென வெடுத்தபயம் வழங்குங்கையுங் கொன்பரவு முலகமெலா முள்ளடியோர் புறத்துறநீள் குளிர்பூந்தாளில் அன்புறுக வெனவரதங் காட்டுமொரு திருக்கையுமப் போது பூத்த தென்பரவு நன்பவள வம்புயமுஞ் சமழ்ப்பவெழில் சிறவா நிற்க. ()

அரியதவங் குயின்றுநெடுங் காலம்வயி றுளைந்தீன்ற வணங்கை யீந்து, விரியதிர்வெண் டிரைத்திருப்பாற் கடலளித்த வரிசையைப் பால் விலகா ராலுந், தெரியவருஞ் சிற்றிடையத் திருவுறையு ளமைத் தல்பெருஞ் சீர்த்தி யென்று, கரியநிறத் திடையமைத்த கவுத்துவமா மணிக்கற்றை கலுலா நிற்க. (களரு)

---

களக. ஏமம் - இன்பம். குறுமூரல் - புன்சிரிப்பு. வடித்து - தெளிவித்து.

களஉ. குடந்தம்பட்டு - நால்விரல் முடக்கிப் பெருவிரல் நிறுத்தி நெஞ்சில் வைத்து நிற்றல்.

களங. தங்கள் குலம் என்றது சூரிய குலத்தையும் சந்திரகுலத்தையும்.

களச. வரதம் - காத்தல். சமழ்ப்ப - நாண.

களரு. பால் விலகார் - பக்கத்திருந்து விலகாதவர். கலுலா நிற்க - ஒளி வீசாநிற்கவும்.

ஆடமைத்தோட் செங்கனிவாய்க் கருங்கூந்த லயிலனுக்கி யம் பலேக்கும், ஓடரிக்கட் டிருமடந்தை மணிகாலும் வெயில்வருத்த முறுதொ தூங்க, நீடமைத்த விளஞ்சோலே யெனத்தழைந்து மணங் கான்று நிலவு மென்பூந், தோடமைத்த பசுந்துளபத் தொடையலளிக் குலமுணத்தேன் றுளியா நிற்க. (கஎசு)

நிலங்காவ லொருவன்விடு களியானேக் கோட்டினுக்கு நிலமு மெண்ணில்
அலங்கார மடமாத ருழுதுழக்கிக் கலக்கியம ராட வுய்க்கும்
இலங்கார மணிந்துபணேத் திருகியண்ணுந் தெழுந்தமுலே யிருங்கோட் டிற்குங்
கலங்காத நிறப்பிரதா பம்போலச் செஞ்சாந்து கஞலா நிற்க. (கஎஎ)

திருவரையிற் கொய்துவிரித் தலங்காரம் பெறவுடுத்த செம்பொ னுடை, உருகெழுசெங் கதிருதர பந்தனம்பொன் னிரட்டைநா ணொளிரா நிற்க, இருபுடையுங் கருங்குழல்வெண் ணகைச்செவ்வாய்த் தேவியரெண் மர்களுஞ் சூழக், கருமுகிலொன் றொளிர்மின்னற் காடு வளா யெதிர்காட்சி கதியா நிற்க. (கஎஅ)

வயங்கெழுதுந் துபியைந்துங் காருநெடுங் கடலுமென வாய்விட் டார்ப்ப, நயங்கெழுபூ மழையமரர் பொழிதரவிண் ணரமகளிர் நடியா நிற்க, மயங்கெழுநல் லறந்தழைப்ப வுலகுகுது கலிப்பவெளி வந்து நின்றான், பயங்கெழுமா மறைப்பொருளா யம்மறைக்கு மெட்டாத படிவத் தண்ணல். (கஎகூ)

வேறு

காண்டலும் விரைந்தெ ழுந்து கரையுடைத் தெழுநீத் தம்போன்
மாண்டதாய் வரவு கண்ட மழவிளங் கோத னம்போற்
றாண்டுதன் மனமும் பிந்தத் துணேவினி ஞேடி யன்பு
பூண்டவர்க் குரிய தாண்மேற் பொள்ளென வீழ்ந்தெ ழுந்து. (கஅ௦)

---

கஎசு. அமை - மூங்கில். அயில் அனுக்கி - வேற்படையைக் கீழ்ப் படுத்தி. அளிகுலம் - வண்டின் கூட்டம்.

கஎஎ. பணேத்து - பருத்து. கிறம் - நெஞ்சு ; மார்பு.

கஎஅ. கொய்து - சுருக்கி. கதியாகிற்க - சிறவாநிற்க.

கஎகூ. மயம் - அழகு. பயம் - பயன்.

கஅ௦. நீத்தம் - வெள்ளம். மாண்ட - மாட்சிமையுடைய. கோதனம் - பசு வின் கன்று.

முடிமிசைக் கரங்கூப் பாமும் முறைபிர தக்கி ணஞ்செய்
தடிமிசை யன்பு பொங்க வானந்தக் கண்ணீர் வாரப்
படிமிசைக் கிடத்துந் தண்டின் பரிசென மீட்டும் வீழ்ந்து
நொடிமிசை யெழுந்து துள்ளி நோற்றுளோம் யாமே யென்று. (கஅக)

பூசனை சிறப்பிற் செய்து பொருந்துபாத் தியமு னீந்து
நேசமிக் கூறிப் பொங்க நேர்நின்று குடந்தம் பட்டு
வாசநன் கங்கை பங்கன் வதியிடம் வந்த தொத்த
தாசறு நினது காட்சி யையவென் றினைய சொல்வான். (கஅஉ)

அறமிகு தலங்கள் சார்ந்து மாரணி யங்கள் சார்ந்து
திறமிகு வரைகள் சார்ந்து நெடியநா ளிருந்து ணின்றி
மறமிகு பொறியை வாட்டி வளர்தவம் புரிவார்க் கன்றிப்
புறமிகும் பாவி யேற்குங் கிடைத்ததே புகழ்சால் காட்சி. (கஅங)

இலகுநான் மறைக ளோல மோலமென் றெண்ணி ளுள்கள்
அலறிவா யிளைத்துங் காண்டற் கரியநின் னரிய காட்சி
கலகமார் வினைக்கோட் பட்டுக் கலங்குபு மருளின் மூழ்கும்
புலனிலா யானுங் காணக் கிடைத்தது புதுமை யைய. (கஅச)

என்றினி தருளிச் செய்ய வெழுந்தருள் வான்கொ லென்று
பொன்றலி றவத்தின் மேலாய்ப் புண்ணியம் பழுத்த மேலோர்
துன்றிநிற் கின்ற ரெல்லா நிற்கவுள் ளகத்தூய் தன்மை
கொன்றிலேற் பொருளாக் கொண்ட கருணையைக் குறிக்கொ ணடே.

பழையநான் மறையு மோர்ந்த பங்கயத் தவனுங் காணாத்
தழையுமிக் காட்சி காணப் பெற்றுளத் தன்மை பூண்டோர்
விழையுமோ ரின்பம் பெற்றேன் விருப்பினீ பெறலென் பாலென்
மழைபெறும் பொருளு முண்டோ வையத்து வாழ்வார் மாட்டு.(கஅசு)

---

கஅக. கூப்பா - கூப்பி ; செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம்.

கஅஉ. பாத்தியம் - கால்கழுவு நீர். குடந்தம்பட்டு - வழிபட்டு. பங்கன் - முடவன்.

கஅங. திறம் - ஒளி. புறம்மிகும் - புறத்தொழில் மிகுந்த.

கஅச. ஓலம் ஓலம் - அபயம் அபயம்; முறைப்பாட்டுமொழி. புலன்இலா - அறிவில்லாத.

கஅரு. தூய்து அன்மை - களங்கத்தை ; தீமையை.

கஅசு. மழை - மேகம்.

தழலாரத் தலையில் வைத்து நடித்தும்வெஞ் சகடு தைத்து
நிழலில்கா னடந்து முன்னம் பழக்கினை நின்பொற் றாளை
அழல்செயு மடியே னெஞ்சத் தமைத்திடு நிமித்தங் கொல்லோ
கழறரா வினையி னேனின் றறிந்தனன் கடவு ளேறே. (கஅஎ)

புன்றொழி லடியே னுள்ளம் போருகப் பாதம் வைப்பிற்
கன்றுத லின்றி முன்னைப் பழக்கத்தாற் கலங்கா தாற்று
மென்றளிர் மேனிப் பூமேல் விளங்கிழைத் தாயர் கைகட்
கொன்றுமப் பாத வெப்ப முறுமென வஞ்சு கின்றேன். (கஅஅ)

என்றுபற் பலவும் பேசி யிருந்தழ லிட்ட வெண்ணெய்
யொன்றிய கருங்க லென்ன வுள்ளநெக் குருக நேரே
நின்றவந் தணனை நோக்கி நெடியமால் கருணை பூத்து
வென்றிமா தவத்த ரேறே வேட்டதென் னுவறி யென்றான். (கஅகூ)

அடியனே னுய்ந்தே னென்று வங்கைக ளிரண்டுங் கூப்பி
முடிமிசை யேற்றி நின்று மூதறி வுடையோர் கொள்ளாக்
கொடியவிச் செல்வ மொன்றே குணிப்பரும் பவத்திற் சேது
படியற வாயி லின்பம் பயப்பதெட் டுணையு மின்றால். (ககூ0)

மனமொழி யுடல மென்ன வகுத்திடு காண மூன்றுந்
தினமுநின் றிருவ டிக்கே செலுத்துநா யடியே னிந்தக்
கனவெனுஞ் செல்வத் தாழ்ந்தோ களித்துநாள் கழியா நிற்பன்
உனதடி யவர்பூந் தாளி லுறப்பணிந் துயர்த னீங்கி. (ககூக)

முன்னரே வெறுத்து வேண்டா விதுவென முனிந்து செல்வம்
பின்னர்கைக் கொள்வே னாகிற் பேரறி வுடைய னன்றே
அன்னது மன்றிக் கொண்ட விரதமு மழித்தா னேனென்
நன்னர்நெஞ் சுடைய நீரார் நகைக்குநா னாது நின்றேன். (ககூஉ)

உடலழுக் ககற்றத் தூநீ ருற்றவ னள்ளல் வாரி
இடனுறப் பூசிக் கொள்வான் கொல்விரு காலும் யாத்த
தொடர்செய்பொன் னிகளஞ் சீக்கத் துணிந்தவ னிரும்பாற் செய்யப்
படுபெரு நிகளம் பூண்டு கொள்வனோ பாரி டத்து. (ககூங)

---

கஅஎ. வெம்சகடு என்றது கொடியவனாகிய சகடாசுரனை. கழல்தராவினை- நீங்காதவினை.

கஅஅ. அம்போருகம் - தாமரை. ஆற்றும் - பொறுக்கும்.

கஅகூ. அந்தணன் - குசேலன். நுவல்தி - சொல்லுதி.

ககூ0. கொள்ளா - மதிக்காத. குணிப்பு அரு - அளவிடுதற்கரிய. படி-ஒப்பு.

ககூங. யாத்த - பிணித்த. நிகளம் - விலங்கு. சீக்க - அறுக்க.

ஆதலா லைய விந்த வநித்தியச் செல்வம் வேண்டேன்
மேதக முன்னி ருந்த மிடியதே யின்னும் வேண்டுங்
காதலி னடியார் வேண்டுங் காரிய மளித்துக் காக்கு
நீதயை புரிந்தென் னுள்ளக் கருத்தினை நிரப்பு கென்றான். (கசுச)

அல்கலி லன்பன் வார்த்தை யனைத்தையுஞ் செவிம டுத்து
மல்குமா மறைகட் கெட்டா மாயவன் முறுவல் பூத்துப்
பல்குநன் பொருள்வேண் டாது பயனின்றிக் கழிந்த தீய
நல்குர வளித்தி யென்ற காரண நவிற்று கென்றான். (கசுரு)

தேள்ளுகா ரணந்தான் முன்னர்ச் செய்தவின் னைப்பத் தாலே
வெள்ளிடை விலங்கல் போல விளங்குபு கிடந்த தைய
உள்ளுதன் முதல யாவு மியல்பினி னுணரா நிற்கும்
வள்ளனீ யறியான் போல வினவுதன் மாட்சித் தேயோ. (கசுசு)

செய்யநின் னடித்தி யானஞ் செய்துநாள் கழியா நிற்பேற்
கையவீ திடையூ றாகி யடைந்ததிங் கிதனைப் போற்றிப்
பொய்படு பவஞ்ச வாழ்க்கைப் புலைத்தொழிற் பாரம் பூண்டு
நைபடு முள்ளத் தேனாய் நாடோறுங் கழித னன்றே. (கசுஎ)

எம்பிரான் கருணை செய்க வென்றிரந் தடியில் வீழ்ந்தான்
வெம்புறேல் கவலை யெல்லாம் விடுதியென் றுடலந் தைவந்
தும்பரார்க் கரிய வின்ப முறுவையென் றுரைக்க லுற்றான்
தும்பிகா லுழக்க மட்டுத் துளித்திடுந் துளபத் தாரான். (கசுஅ)

திருவநன் களித்த துன்னைச் சேர்ந்தவர் நிமித்தங் கண்டாய்
ஒருவினின் னுளம்போ லன்னா ருள்ளமுந் துறவிற் றேயோ
மருவிநிற் சார்ந்தார் துன்பின் வயங்குத லழகி தாமோ
பொருவிலா முனிவ ரேறே யஃதெண்ணிப் புந்தி மாழ்கேல். (கசுகூ)

---

கசுச. மேதக - மேன்மையுடைய. மிடி - வறுமை.

கசுரு. அல்கல் - சுருங்குதல். பல்கும் - விருத்தியடைவதற் கேதுவான. நல்குரவு - தரித்திரம்.

கசுசு. தெள்ளு - தெளிவாகிய. வெள்ளிடை விலங்கல் - வெளியிடத்துள்ள மலை.

கசுஎ. பவஞ்சம் - பிரபஞ்சம் என்னும் வடசொற்றிரிபு.

கசுஅ. வெம்புறேல் - மனம் வருத்தம்வேண்டாம். தைவந்து - தடவி. தும்பி - வண்டு. உழக்க - கிண்ட. மட்டு - தேன்.

கசுகூ. திருவம் - செல்வத்தை.

மெய்ப்பொரு ளுணர்ந்த தூயோர் மேவியெங் குறைவ ரேனும்
பொய்ப்பொருள் பற்று வாரோ பொய்ப்பொரு ளேனும் வந்து
கைப்படப் பற்றுங் கொல்லோ வவரையஃ தசத்துக் கண்டாய்
வைப்பென நமது பூசை வாஞ்சித்து வயங்கு மேலோய். (உ00)

நின்னையச் செல்வ மென்னே செய்யுமே ரதகத் தோடு
பன்னுமந் திரமுள் ளாரைப் பாம்பின்வாய் விடமென் செய்யும்
மன்னுசெங் கதிரோன் றன்னை மயங்கிருட் குழாமென் செய்யும்
உன்னிலை தவறு தென்று மொருபடித் தாய்நிற் பாயால். (உ0க)

சாற்றுமெய் யறிவி னோர்க டகுதொழி லியற்றுங் காலை
மாற்றுத லின்றாய்த் தாந்தா மரையிலை நீர்போ னிற்பர்
போற்றுநின் றனக்கிப் பந்தம் பொருந்தாது பன்னாள் வாழ்வுற்
றீற்றுநம் முலகஞ் சார்ந்தின் பெய்திட வரந்தந் தேமால். (உ0உ)

திகழ்தர விருத்தி மீட்டுஞ் செல்வம்வேண் டுவதின் றென்னிற்
புகழ்தரு நந்தங் காதற் பொன்னைநீ யிகழ்ந்தோ னாய்
இகழ்வினுக் கஞ்சி யன்னா ளிரிதர விரிவம் யாமும்
அகழ்வினைத் தவத்தின் மேலோ யழுத்திடிவ் வுரையை யுள்ளம். ()

என்றவன் மருத வண்ண னினையபல் வார்த்தை கூறி
ஒன்றரும் பேறு நல்கி மறைந்தன னுவணப் பாகன்
வென்றியங் கழற்கால் வேந்தே மேதினி யிடத்தி யார்க்கேனும்
மன்றவுண் டாகுந் தெய்வ வலிக்கெதிர் வலியு முண்டோ. (உ0ச)

பாம்பணைப் பள்ளி மேவும் பண்ணவன் மறைத லோடுந்
தேம்பலிற் றவிர்ந்த சிந்தைத் தெய்வமா முனிவர் கோமான்
ஓம்படைப் பெருமா னுள்ள முற்றதிவ் வாறே வென்று
கூம்பலிற் பெயராக் கைய னுய்க்களி கூர்ந்தி ருந்தான். (உ0ரு)

நீருறப் பயின்று முள்ளந் நீருறுக் கிடையே போலப்
பாருற வுற்றுஞ் சற்றும் பற்றிலா னுகி யன்பர்க்

உ0க. அதகம் - மருந்து.

உ0ங. பொன்னை - திருமகளை. இரிதர - நீங்க. வினையகழ்தவம் என இயைக்க. அகழ்தல் - நிர்மூலஞ் செய்தல்.

உ0ச. உவணம் - கருடன். மன்ற - மிகுதியாக.

உ0ரு. ஓம்படை - காவல்.

உ0சு. கிடை - சடை.

கேருற வாய கண்ண னிணையடிக் குறவு பூண்டு
தாருற வுற்ற தோளான் சாலநாள் கழிய வாழ்ந்தான். (உ0கூ)

ஒப்பிலா முனிவன் பின்ன ரொருதினம் வான நாடர்
வெப்பிலாக் கற்ப கப்பூ விரைகெழு மாரி பெய்ய
வைப்பின்மெய் யடியார்க் காய வைகுந்த வுலகஞ் சார்ந்து
திப்பிய வுருவ மாயன் சேவைசெய் தின்புற் றனே. (உ0எ)

நூற்பயன்

எதிர்பொரு மரச ரேறே யிக்கதை யெழுதி வைப்போர்
பொதிதரு மன்பிற் கேட்போர் பூசிப்போர் படிப்போர் யாரும்
கதிர்தரு செல்வம் பெற்றுக் கான்முளை பல்க வாழ்ந்து
மதிநலம் படைத்துப் பின்னர் வான்கதி யடைந்து வாழ்வார். (உ0அ)

நூன் முடிவு

வேறு

என்று ரைத்த முனிவ னிணையடி
ஒன்று மன்பின் வணங்கி யுவந்தெழீஇத்
துன்று மிக்கதை கேட்டின்பந் தோய்ந்தனன்
மன்ற வென்றுரைத் தான்புவி மன்னவன். (உ0கூ)

வாழ்த்து

மன்னு மாமறை வாழி மறையவர்
பன்னு மான்முகில் வாழிநற் பார்த்திபர்
மின்னு நீதியும் வாழி மிகுநலம்
என்னு மிக்கதை யின்றமிழ் வாழியே. (உக0)

குசேலர் செல்வநுகர்ந்து வைகுந்தமடைந்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் - எஎரு.

---

குசேலோபாக்கியாநம்

முற்றிற்று.

---

உ0எ. வெப்பிலா - வெம்புதலிலாத. விரைகெழு - மணம்பொருந்திய.
உ0அ. கான்முளை - பிள்ளை. மதிநலம் - அறிவின் நலம்.